# B.E / M.B.B.S
# Entrance 2000

We offer result oriented TNPCEE
coaching classes from July 99.

**First schedule July 99 - Feb 2000**
**(on Sundays)**

1) weekly tests
2) TNPCEE oriented tests
3) lecture classes.

**Second schedule**
**March 2000 to April 2000**

1) Intensive coaching on TNPCEE.

Admissions in progress.

**Prof. K.Nagarajan**

## LAKSHMI COACHING SYSTEMS

**44/2, Venkatnarayana Road, T.Nagar, Chennai-17.**
**Ph : 434 2657**

**Centres at :**
**T.Nagar : Guntur Subbiah Pillai School**
**Kilpauk : Ruckmani Vidyalaya**
**Gopalapuram : Gopalapuram Boys' School**

**FREE**

**Chennai City students !**
**Collect a FREE Copy of**
**PLUS TWO STATE, March 98**
**and October 98 Question papers**
**by sending the following details**

Name : ................................................
Address :............................................
...........................................................
......,...............................Pin :...................

# சினிமா எப்படி உருப்படும்?

நல்ல கதைகளுக்கும் சினிமாவுக்கும் சம்பந்தமில்லை என்கிற மோசமான சூழ்நிலையை சினிமாக்காரர்கள் உருவாக்கி விட்டதன் விபரீத விளைவு இது!



• தங்கர்பச்சான்

பாலுவுக்கு இன்றைக்கெல்லாம் வயசு இருபதுக்குள் தான் இருக்கும். (பெயர் மாற்றப்பட்டுள்ளது.) பண்ருட்டிக்குப் பக்கத்திலிருக்கும் ஒரு கிராமத்தைச் சேர்ந்த பாலுவுக்கு சினிமா கனவுகள் ஏராளம். தமிழ்த் திரையுலகின் இன்றைய பிரபல இயக்குனர்கள் வரிசையில், தன் பெயரும் இடம்பெற வேண்டுமென்ற தீராத தாகம். பண்ருட்டியில் பஸ் ஏறி, சென்னையில் அந்த இளைஞன் இறங்கிய இடம் ஒளிப்பதிவாளர் தங்கர்பச்சானின் வீடு. அவருக்கும் பாலுவுக்குமிடையே நடந்த சுவாரஸ்யமான உரையாடலை இங்கே தருகிறோம் :

**தங்கர்பச்சான் :** நீ எந்த ஊரு தம்பி?

**பாலு :** பண்ருட்டிக்குப் பக்கத்துல ஒரு கிராமம் சார்.

**தங்கர்பச்சான் :** அட! நம்ம ஊருக்குப் பக்கத்துலதான். சினிமாவுல நீ என்னவா ஆகணும்னு ஆசைப்படுறே?

**பாலு :** முதல்ல அசிஸ்டெண்ட் டைரக்டராகணும் சார்.

**தங்கர்பச்சான் :** புத்தகம் ஏதாவது படிக்கிற பழக்க

**எழுதுகணம்...**

'எழுதும்போது நான் எப்படி இருப்பேன்? என்ன செய்வேன்?' — அடுத்தப் பக்கத்திலிருந்து தம்மைப் பற்றிச் சொல்கிறார்கள், பிரபல எழுத்தாளர்கள்.



கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

எழுதும்போது டேப் ரிகார்டர்ல பாட்டுக் கேட்பேன். கர்னாடிக் மியூசிக் ரொம்பப் பிடிக்கும். எழுத ஆரம்பிக்கிறதுக்கு முன்னாடி ஊதுவத்தி ஏத்தி வச்சுக்குவேன். கொறிக்கறதுக்கு பக்கோடா மாதிரி ஏதாவது வச்சுப்பேன். ஈவினிங் டைம்ல எழுத ரொம்பப் பிடிக்கும். வெயில் காலத்துல எழுதப் பிடிக்காது. ராத்திரி ஒன்பது மணிக்கு எழுத ஆரம்பிச்சு விடிய விடியக் கூட எழுதுவேன். மழைக்காலத்துல எழுதறது எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிச்ச விஷயம்.

— அனுராதா ரமணன்



முண்டா? நவீன இலக்கியம் ஏதாவது படிச்சிருக்கியா?

பாலு : இல்லை சார். எதுவும் படிச்சதில்லை.

தங்கர்பச்சான் : சரி! உனக்குத் தெரிஞ்ச எழுத்தாளர் பேரு ஏதாவது சொல்லு.

பாலு : (தடுமாறி, ஒரு மாத நாவல் எழுத்தாளரின் பெயரைக் குறிப்பிடுகிறார்.)

தங்கர்பச்சான் : வேற யாராவது தெரியுமா?

பாலு : (ரொம்ப யோசனைக்குப் பிறகு) அசோகமித்திரன்...

தங்கர்பச்சான் : அசோகமித்திரனோட கதை என்னென்ன படிச்சிருக்கே?

பாலு : இல்லை சார். எதுவும் படிச்சதில்லை.

தங்கர்பச்சான் : (கொஞ்சம் கோபத்துடன்) உனக்கு என்ன தகுதி இருக்குன்னு அசிஸ்டெண்ட் டைரக்டராகணும்னு ஆசைப்படுறே?

பாலு : சொல்லிக் குடுத்தா கத்துக்குவேன் சார்! பிரமாதமா வந்துடுவேன்.

தங்கர்பச்சான் : அடிப்படைத் தகுதிகளை வளர்த்துக்கணும்பா முதல்ல.

பாலு : எனக்குத் தெரிஞ்சு கே. எஸ். ரவிகுமார், சேரன், விக்கிரமன் யாரும் நவீன இலக்கியம் படிச்சிட்டு டைரக்ட் பண்ண வந்த மாதிரி தெரியலை சார்.

தங்கர்பச்சான் : (அதிர்ந்தவராக) உனக்கு எப்படித் தெரியும்? போய், கேட்டுப் பார்த்தியா? (சற்று இடைவெளி விட்டு) நீ என்ன மாதிரி டைரக்டரா வரணும்னு நெனைக்கிறே?

பாலு : வில்லேஜ் சப்ஜெக்ட் பண்ண முடியும் சார். அதுலதான் சார் ஸ்கோப் ஜாஸ்தி!

தங்கர்பச்சான் : கிராமத்தை மையமா வச்சு, கதை எழுதின எழுத்தாளர்கள் யாரையாவது உனக்குத் தெரியுமா?

பாலு : தெரியாது சார்.

தங்கர்பச்சான் : நான் ஒரு லிஸ்ட் தரேன். எழுதிக்க. அவங்களையெல்லாம் படிச்சிட்டு, அப்புறம் வா. உன்னை என்ன செய்யலாம்னு அப்புறம் யோசிக்கிறேன்.

பாலு : சரி சார்!

தங்கர்பச்சான் : கி. ராஜநாராயணன், பா. செயப்பிரகாசம், நாஞ்சில்நாடன், பூமணி, சண்முகசுந்தரம், சா. கந்தசாமி, வேலுசாமி, ப. சிங்காரம், தோப்பில் முகமது மீரான், பெருமாள் முருகன் – இது போதும். இவங்களை முதல்ல படி. படிச்சுட்டு அப்புறம் வந்து பாரு. என்ன?

சினிமாக் கனவுகளைச் சுமந்தபடி அந்த இளைஞர் விடைபெறுகிறார். தங்கர்பச்சான் ஒரு பெருமூச்சோடு நம்மிடம் சொன்னார் : "இப்படித்தான் சார், நிறைய இளைஞர்கள் எதுவுமே படிக்காம, எதுவுமே தெரியாம சினிமாவுக்கு வந்துடறாங்க. அப்புறம் சினிமா எப்படி உருப்படும்? ஒரு சினிமா டைரக்டருக்கு முதலமைச்சரை விட, ஏன் – நாட்டின் பிரதமரை விட அதிகப் பொறுப்பு இருக்கணும்னு நினைக்கிறேன். சரிதானே?"

— கே. பாலசுப்ரமணியன்

## பெங்களூர் போஸ்ட்

# கணக்குத் தீர்த்தால் தலையில் துண்டு!



இடுப்பு வலியா? சுளுக்கா? மூச்சுப்பிடிப்பா? வலி நிவாரணிகள் தராத தீர்வை பெங்களூர் நகரச் சாலைகள் தரத் தயாராயிருக்கின்றன. ஆட்டோ அல்லது பேருந்தில் ரிங் ரோடில் ஒரு ரவுண்ட் வந்தால் போதும்! ஸ்பிரிங் கழன்று விடும்! குண்டும் குண்டுமாக, குழியும் குழியுமாக ஏராள Pot holes. அழகு நகர் இப்படி அலங்கோலமாவதா என்று கொதித்தெழுந்த நகர மேம்பாட்டுத்துறை அமைச்சர் சோமண்ணா, கார்ப்பரேஷனுக்கு அபராதம் போட ஆரம்பித்து விட்டார். மூடப்படாத ஒவ்வொரு Pot holeக்கும் குவிந்து கிடக்கும் ஒவ்வொரு குப்பைத் தொட்டிக்கும் மாநகராட்சி பொறியாளர்கள் அபராதம் செலுத்த வேண்டும் என்று உத்தரவு போட்டு விட்டார்! பொரிந்து தள்ளுகிறார்கள் பொறியாளர்கள்!

போன வாரம் ரவீணா வந்தாரா? இந்த வார நட்சத்திர வரவு, ஷாருக்கான் – ஜூஹி சாவ்லா. 'ஃப்ரீடம் ஃபவுண்டேஷன்' என்கிற அமைப்பினர் அழைத்து வந்து 'ஜாதூ' என்கிற நிகழ்ச்சியில் அவர்களைப் பங்கேற்கச் செய்ததென்னவோ கலெக்ஷனை உத்தேசித்துத்தான். ஆனால், நடந்தது வேறு.



சோமண்ணா

ஷாருக்கானும் ஜூஹியும் பெங்களூரில் தங்கிய நாளில் அந்த அமைப்பின் கஜானாவையே காலி செய்ய, மறுபுறம் சரியான 'அனுமதி வாங்கவில்லை '(Incorrect permission)' என்று போலீசார் பிரச்னை கொடுக்க, இரண்டு கணக்குகளையும் தீர்த்தபோது, ஃப்ரீடம் ஃபவுண்டேஷன் தலையில் துண்டு போட வேண்டியதாகி விட்டது! நட்சத்திரங்களா? கொக்கா?

பெற்றோர் இருவரில் ஒருவரோ, இருவருமேவோ சிறையில் இருக்க விதிக்கப்பட்ட குழந்தைகளின் நல்வாழ்வுக்காக 'ஹொஸ்கொடே'வில் ஒரு 'ஹோம்' நடத்துகிறார்கள் ரெனி ஜார்ஜ் தம்பதி. பெற்றோர் கைதிகளாக இருப்பது பிஞ்சுகளை எப்படியெல்லாம் பாதிக்கும்! அவர்களது எதிர்காலத்தின் மீது அக்கறை கொண்டு இப்படியொரு சேவை மையம் நடத்தும் ரெனிக்கு, சமீபத்தில் 'சிடிஸன் ஆஃப் தி இயர்' விருது கிடைத்திருக்கிறது. பீட்ஸா கார்னர் வழங்கும் இவ்விருதை அவருக்கு அளித்தவர் கிரண்பேடி. நல்ல காரியம் செய்பவர்; பொருத்தமானவர் கையால் விருது பெற்றிருக்கிறார் என்பதற்கு மேல் இதற்கொரு முக்கியத்துவம் உண்டு. ரெனி, ஒரு கொலைக் குற்றத்துக்காகப் பதினாலு ஆண்டுகள் சிறையில் இருந்து வந்தவர்.

இதற்கொரு காண்ட்ராஸ்ட் செய்தி வேண்டாமா?

மல்லிக்கையா குட்டேதார், கர்நாடக மாநில பிற்படுத்தப்பட்டோர் நல அமைச்சர். ஒரு கொலை வழக்கில் சம்பந்தப்படுத்தி, போலீசார் இவர் மீது குற்றப்பத்திரிகை தாக்கல் செய்ய, வரிந்து கட்டிக்கொண்டு அமைச்சரை சப்போர்ட் செய்கிறது ஆளும் கட்சி. 'சந்தேகம்தானே; நிரூபணமாகவில்லையே?'' என்கிற வாதம், அரசுத் தரப்புக்கு. உருப்பட மாட்டார்கள் என்கிற முணுமுணுப்பு மக்கள் தரப்புக்கு!

— மஞ்சுளா ராமகிருஷ்ணன்



• குழுவினருடன் கமல்

# ராமர் ஃபைனான்ஸ்!

இங்கிலாந்து மகாராணியின் இந்திய விஜயத்தின்போது, ஆர்ப்பாட்டமான முறையில் துவக்கப்பட்டது, கமல்ஹாசனின் 'மருதநாயகம்'. ஒரு ஷெட்யூல் படப்பிடிப்பு முடிந்துவிட்ட நிலையில், மேற்கொண்டு அஃபிஷியலான தகவல் ஏதுமில்லை. திடீரென்று, கமல் 'ஹே ராம்' என்ற பெயரில் ஒரு படத்தை எழுதி, இயக்குவதாகச் செய்தி வெளியானது. புதிய படம் தமிழ், இந்தி என்று இருமொழிப்படம்; ஷாருக்கான், தமிழ் பேசி நடிக்கப் போகும் முதல் படம் என்று பல்வேறு 'முதல்' பெருமைகள் கூறப்படுகின்றன.

மருதநாயகத்துக்குக் கட்டாய ஓய்வு கொடுத்துவிட்டு, திடீரென்று 'ஹே ராம்!' என்று ஜபிப்பதன் பின்னணி என்ன என்று விசாரித்தபோது, பல புதிய தகவல்கள் தெரிய வந்தன.

மருதநாயகம் போன்ற பிரும்மாண்டமானதொரு தயாரிப்பில், போட்ட முதலீட்டை எடுக்க வேண்டுமானால், நம் ஊர் தியேட்டர்களில் சில்வர் ஜூபிளி அடித்தாலும் சாத்தியமில்லை என்பதால், அந்நிய நாட்டு டெலிவிஷன் விற்பனைக்கு முயற்சி செய்தார் கமல். வெற்றிகரமாக பி.பி.சி. நிறுவனத்துடன் பேச்சுவார்த்தை நடத்தி, முப்பத்து நாலு கோடி ரூபாய்க்கு விற்பதற்குப் பேசி முடித்து விட்டாராம். ஆனால், மருதநாயகம் படம் பற்றி ஒரு டிரெய்லர் தயாரித்துக் காட்ட வேண்டும் என்றும், அது அவர்களுக்குப் பிடித்தது என்றால் மட்டுமே உலக டீ.வி. உரிமையை அந்த விலைக்கு வாங்கிக் கொள்ள முடியும் என்றும் தெளிவுபடுத்தி விட்டார்களாம் பி.பி.சி. நிறுவனத்தினர்.

கமல் சுமார் ஒரு கோடி செலவு செய்து டிரெய்லரைத் தயாரித்தார். ஆனால், அந்த

டிரெய்லரைப் பார்த்த பி.பி.சிகாரர்களுக்குத் திருப்தி ஏற்படாததால், கமலுக்குக் கை கொடுக்காமல், பின் வாங்கி விட்டார்கள்.

இதனால், வருத்தமடைந்தாலும், சோர்வடையாத கமல், சில பிரெஞ்சு கம்பெனிகளுடன் பேச்சு வார்த்தை நடத்திப் பார்த்தார். இன்னும் முடிவு தெரிய வில்லை.

இதற்குள், ஒரு ஷெட்யூல் ஷூட்டிங் முடிந்து இன்னும் ஒரு கோடி ரூபாய் போலக் கரைந்து விட்டது. இது கமலுடைய நிதி ஆதா ரங்களைப் பெருமளவு அசைத்து விட்டதாகச் சொல்கிறார்கள்.



• 'ஹேராம்' : கமல், ஷாருக்கான்

ஆரம்பம் முதலே கமலை உஷக்கப்படுத்தி வந்தாலும், அவ்வப்போது எச்சரிக்கையுடன் செயல்படும்படி ஆலோசனை சொல்லி வந்த கமலின் மூத்த சகோதரர் சந்திரஹாசன், இனி மேற்கொண்டு ஒரு நிச்சயமற்ற நிலையில் மருதநாயகத்தைத் தொடர வேண்டாம் என்றும்; வெளிப்படங்களில் நடித்து, பணம் சம்பாதித்து, நிதி ஆதாரங்களை பலப்படுத்திக் கொள் என்றும் ஆலோசனை சொல்லிவிட்டார். கமலுக்கும் அதுவே சரி என்று பட, மருதநாயகத்துக்குத் தாற் காலிக கட்டாய ஓய்வு கொடுத்து விட்டார்.

இத்துடன் கூட, இன்னொரு தகவலும் நம் காதில் விழுந்தது. மகளிர் மட்டும் படத்தை கமல், சொந்தமாக இந்தியில் (லேடீஸ் ஸ்பெஷல்) தயாரிக்க ஆரம்பித் தார். படம் ஏறத்தாழ முடிந்து விட்ட நிலைதான். ஆனால், எதிர் பாராது ஏற்பட்ட ஒரு சிக்கல் காரணமாக ஒரு ஐந்தாறு நாள் ஷூட்டிங் பாக்கி நிற்கிறதாம். அதில் முடங்கிவிட்டது, கணிச மான பணம்.

(ஒரு ஃபைனான்சியர் தரும் விவரத்தின்படி, திரைப்பட உலகில் வாங்கப்படும் கடன், குட்டி போட்டு, சுமார் ஒரு வருட காலத்தில் இரண்டு மடங்கு ஆகி விடுமாம்.)



புதிய படங்களில் நடித்து, சம்பாதிக்கிற பணத்தை, மருத நாயகத்துக்குப் பயன்படுத்தும் முடிவை கமல் வெளிப் படுத்தியவுடன், ஒரு பிரபல தயாரிப்பாளர் அவரை அணுகியிருக்கிறார். தமது சம்பளம், தயாரிப்புச் செலவு இவை எல்லா வற்றுக்குமாகச் சேர்த்து, கமல் தரப்பிலிருந்து பதினேழு கோடிக்கு டிமாண்டு எழ, அந்தத் தயாரிப்பாளர் மிரண்டு போய்ப் பின் வாங்கி விட்டார்.

அடுத்து வேறு வழியின்றி, சொந்தமாக ஒரு படம் தயாரிக்க முடிவு செய்தாராம் கமல்.

பிரபல தயாரிப்பு நிறுவன வாரிசு ஒருவர், கமலுக்கும் பிரபல பாலிவுட் தயாரிப்பாளர் பரத் ஷாவுக்கும் முடிச்சுப் போட்டு விட, 'ஹே ராம்' தமிழ், இந்தி என்று புதிய பரிமாணம் பெற்று விட்டது.

இந்தியில்தான் பெரிய மார்க் கெட் என்பதால், படத்தில் மெஜா ரிடி முகங்கள் இந்தி. (ஹேமமாலினி, ஷாருக்கான், ராணி முகர்ஜி... காந்தி யாக நஸிருதீன் ஷா நடிப்பதாகச் சொல்லப்பட்டது; சமீபச் செய்திப் படி ஷா இல்லை!)

காந்தியின் மறைவுக்கு முன்னும் பின்னுமான அரசியல் நிகழ்வுகளை, ஒரு தஞ்சாவூர் இளைஞனின் பார்வை யில் நோக்கும் கதை என்கிறார்கள்.

ஹரப்பா, காசி, கயா போன்ற இடங் களில் படப்பிடிப்பு நடைபெறவிருக்கிறது. இந்தப் படத்துக்காக, வைணவ ஆலயங்கள் பற்றிய ஆராய்ச்சியில் இறங்கியதோடல் லாமல் வைணவத் தலங்களுக்கும் நேரில் சென்று பார்த்து வந்திருக்கிறார் கமல். (கண்டிப்பாக பக்திப் படமில்லை ஆனால்!) திருவல்லிக்கேணி பார்த்தசாரதி பெருமாள் கோயிலிலும் சுற்றியுள்ள பகுதிகளிலும் முதல் கட்டப் படப்பிடிப்பு நடந்து முடிந்துள்ளது. படம் ஜூலையில் வந்துவிடும் என்கிறார்கள் கமலுக்கு நெருக்கமானவர்கள்.

— நமது நிருபர்



ரொம்ப வழவழப்பான வெள்ளை பேப்பர் வேணும். எழுதறதுக்கு இங்க் பேனாதான் பயன்படுத்தறேன். ரீஃபில் பேனா ஏனோ பிடிக்கற தில்லை. எழுதுகையில் டேப்ரிகார்டர்ல வீணை, வயலின் மாதிரி ஏதாவது இன்ஸ்ட்ரு மெண்டல் இசை வந்துட்டே இருக்கும். எங்கிட்ட அதுக்கு தனியா மியூசிக் கலெக்ஷனே இருக்கு. எழுதும் போது, என்னுடைய குடும்ப உறுப் பினர்கள் யாராவது கூடவே இருக்கணும். எந்தக் கொந்தளிப் பான சூழ்நிலை யிலும் அவங்க கூடவே இருக்கணும். ஏன்னா, எனக்கு இரைச்சலில் எழுதப் பிடிக்கும்.

— பிரபஞ்சன்

நிலாவைப் பார்க்கும்போது நிறைய கவிதைகள் எழுதுவேன். தொட்டி, ஆறு, குளம், கடல் தண்ணீர்னு எந்த நீரலைகளைப் பார்த்தாலும் எனக்கு எழுத வரும். பாரதிதாசனுக்கு ஒரு பழக்கம் இருந்தது. படுக்கும்போது நோட்டுப் புத்தகத்தைத் தலைமாட்டுல வச்சுப்பார். அதே பழக்கம் எனக்கும் இருக்கு. ராத்திரி மனசுல என்ன தோணுதோ உடனே எழுந்து அதை நோட்டுல எழுதிடுவேன்.

— கவிஞர் சுரதா





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



16,காமராஜ் சாலை,பழையபெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம்,சென்னை-600063.
Tel&FAX : 2376129,Cell Ph : 9841050464
E-mail: sspeetam@md3.vsnl.net.in
& sspeetam@hotmail.com

## ஏழைமாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 50 மாணவர்களும் 20 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவ்வகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழ்ங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி ( 70 பேருக்கு ) | ரூ. | 500/- |
| மதிய உணவு ( இனிப்புடன் ) | ரூ. | 1,000/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 750/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 300/- |
| ஒரு மாணவனுக்கு ஓரண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு ( உணவு, உடை, கல்வி ) | ரூ. | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 60,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/DD/ MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு

இறைவன் தொண்டில்
சுவாமி சர்வாத்மானந்தர்.

# அன்று பாரதி எக்ஸ்பிரஸ்; இன்று கல்கி



• வந்திருந்தோரில் ஒரு பகுதி

"தில்லி தமிழ்ச் சங்கத்தில் ஒரு நூலகம் உண்டு. அதிலுள்ள புத்தகங்களுள் கல்கியின் நூல்கள்தான் மிக அதிகமாகப் பயன்படுத்தப்பட்டு, இரண்டாவது, மூன்றாவது முறையாக வாங்கி வைக்கிற அளவுக்குப் பழுதுபட்டுப் போயின..." என்றார் சங்கத் தலைவர் ராஜாராமன். அவ்வளவுதான்! திருவள்ளுவர் கலை அரங்கு அதிரும்படி எழுந்தது கரவொலி!

எழுத்தாளர் கல்கி எத்தனை பேரின் இதயங்களைக் கவர்ந்து எத்தனையெத்தனை பேரின் வாழ்க்கையோடு கலந்து போயிருக்கிறார் என்பதற்கான சாட்சி அந்தக் கரவொலி!

மூன்று நாட்கள் கல்யாணம் போல் நடந்த விழாவின் துவக்க தினத்தில், சங்கத் தலைவர் வரவேற்புரை ஆற்றியபோது எழுந்த இந்தக் கரவொலி இறுதி நாளின் இறுதி நிகழ்ச்சி வரை மீண்டும் மீண்டும் அலையாக எழுந்து நூற்றாண்டு விழா நாயகரைக் கொண்டாடியது.

'தமிழ்ச் சங்க மார்க்' என்றே அழைக்கப்படும் சாலையில் தில்லித் தமிழர்கள் மட்டுமின்றி பெங்களூர், சென்னை, மதுரை வாழ் தமிழர்களும் சிறப்பு விருந்தினர்களாகச் சங்கமித்திருந்தனர்.

ஆறுமுகம் குழுவினரின் நாதஸ்வர இசை பழைய பாரம்பர்யத்தை வலியுறுத்த, நிகழ்ச்சிக்கு வந்த வி.ஐ.பி.க்களின் பாதுகாப்புக்கென கருப்புப் பூனைப் படையினர் தடபுடல் படுத்தும் 'புதிய' பாரம்பர்யமும் சேர்ந்து கொண்டு இரட்டை நாயனக் கச்சேரி போல் களை கட்டியது!

ராஜி ரமணி தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடியதும் ஆர். வெங்கட்ராமன் குத்து விளக்கேற்றி விழாவைத் துவக்கி வைத்தார். தாம் 'முன்னாள் குடியரசுத் தலைவர் அல்ல; குடியரசின் முன்னாள் தலைவர்' என்பதை மறக்காமல் நினைவூட்டியவர், தமிழ் வளர்க்க கல்கியும் வாசனும் மேற்கொண்ட முயற்சிகளே சாதனைகளாக மலர்ந்ததைச் சொன்னார். கல்கியின் திறமையுடன் வாழ்வில் தியாகமும் இணைந்த அழகைச் சுட்டிக்காட்டினார் ஆர்.வி. அவர் சுயநலமற்ற வாழ்க்கை வாழ்ந்ததையே மிக முக்கியமாகக் குறிப்பிட்டார்.

நாடாளுமன்ற மாநிலங்களவை உறுப்பினர் சி.பி. திருநாவுக்கரசு, 'கல்கிக்கு விழா என்றால் அது தமிழுக்கு விழா' என்று ஆரம்பித்து ஒரு சொற்பொழிவுக் காவியமே எழுதி விட்டார்!

ஏற்புரையில் கி. ராஜேந்திரன் - ஆர்.



• சுதாரகுநாதன் : இனிய இசை



• குத்துவிளக்கேற்றி, தொடங்கி வைக்கிறார் ஆர்.வி.

விழாவை 'முன்னாளும், இன்னாளும், என்னாளும் எங்கள் இதயத்தில் குடியிருக்கும் தலைவர்' என்று குறிப்பிட்டதுமே அரங்கு கலகலத்தது. கல்கி பத்திரிகையின் பொன் விழாவுக்குத் தலைமை தாங்கியவர், அமரர் கல்கி நூற்றாண்டு விழாவுக்கும் தலைமைதாங்கும் பொருத்தத்தைச் சுட்டிக்காட்டினார். 9.9.99 தில் தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் கல்கி எக்ஸ்பிரஸாகப் பெயர் மாற்றம் பெறவேண்டும் என்றும் குறிப்பிட்டபோது, கல்கியின் முயற்சியில் எழுந்த எட்டயபுரம் பாரதி மணி மண்டபத் திறப்பு விழாவுக்குச் சென்னையிலிருந்து 'பாரதி எக்ஸ்பிரஸ்' விடப்பட்ட வைபவம் நினைவுக்கு வந்தது.

முதல் தின நிகழ்ச்சிகளின் முத்தாய்ப்பு சுதா ரகுநாதன் வழங்கிய தமிழிசைக் கச்சேரி. கல்கியின் பாடல்களுடன் அவர் பெரிதும் மதித்துப் போற்றிய பாரதி, ராஜாஜி, பாபனாசம் சிவன் பாடல்களும் 'நிகழ்ச்சியில் இடம்பெற்றன. 'வண்டாடும் சோலை'யிலும், 'பூங்குயில் கூவும் பூஞ்சோலை'யிலும், நுழைந்து காற்றினிலே வந்த கீதத்தில் திளைத்து ஒருவிதமான கிரக்கத்தில்தான் அன்றிரவு வீடு போய்ச் சேர்ந்தனர் பார்வையாளர்கள்.

# எக்ஸ்பிரஸ்!



அன்று சென்னையில் காமராஜ் அரங்கில் நூற்றாண்டு நிறைவு விழாவுக்குத் தலைநகர்த் தமிழர்கள் திரளாக வரவேண்டும்' என அழைத்தவர், அந்த உற்சாகப் பயணத்

மறுநாள் சுதாரித்து எழுந்து ஓடி வரும்படி ஈர்த்தது மதுரை மாநகரிலிருந்து வந்திருந்த பேராசிரியர் இரா. மோகன் குழுவினரின் கருத்தரங்கம். இவர்களை அழைத்து வந்து கருத்தரங்கம், சொல்லாடல், பட்டிமன்றம் என்று பல நிகழ்ச்சிகளுக்கும் ஏற்பாடு செய்த தில்லி தமிழ்ச் சங்கத்தின் செயலாளர்

மணியன் அவர்களைப் பாராட்டாதவர்களே கிடையாது.

கல்கியின் படைப்புலகம் என்ற தலைப்பை எடுத்துக்கொண்டு, எட்டு அறிஞர்கள் பேசிய போது எழுந்த கருத்து முத்துக்கள் எட்டுத் திக்கும் சென்றாலும் சேர்க்க முடியாத செல்வம்! சிவகாமியின் சபதத்தில் நாகநந்தியே அஸ்திவாரம் என்று சங்கரலிங்கம் பேச, பரஞ்சோதி பாத்திரத்தை கல்கி பக்தி சிரத்தையுடன் செதுக்கியிருப்பதை ரா. விசுவநாதன் சுட்டிக்காட்டினார். பொன்னியின் செல்வன் நந்தினியை கிளியோபாட்ராவுடன் ஒப்பிட்டு வியந்தார் நிர்மலா மோகன். பார்த்திபன் கனவில் வரும் நரசிம்ம வர்மனின் பல பரிமாணங்களை கல்கி பட்டை தீட்டிக் காட்டியிருப்பதை விளக்கினார் வேல்முருகன்.

அலை ஓசை சூர்யா அகப்பட்டுக் கொண்டது இராஜேந்திர பாபுவிடம்! ஹரி ராமநாதன் வியந்தது தியாக பூமி சாவித்ரியை. பெண் விடுதலை இயக்கத்தின் முதல் போராளி என்றாலும் இறுதியாக ஆண் - பெண் பேதம் கடந்த தேசநலப் பார்வையுடன் அவளை ஒளிரச் செய்த கல்கியின் சிந்தனையைச் சுட்டிக்காட்டினார்.

'கள்வனானாலும் அவன் மனிதன்' என்று கள்வனின் காதலி முத்தையனைச் செல்லப் பிள்ளையாக்கிப் பேசினார் காந்திமதி. மகுடபதியின் உயர்நோக்கை விளக்கினார் ஆனந்தம் கிருஷ்ணமூர்த்தி.

'அனைத்துப் பாத்திரங்களுமே கதாநாயக/கதாநாயகி லட்சணங்கள் கொண்டவர்கள். லட்சியவாதிகள் - ஆனால் சராசரி மனித சஞ்சலங்களுக்கு உட்படும் மறுபக்கமும் அவர்களுக்கு உண்டு. அதனாலேயே அவர்களுக்கு நம்பகத்தன்மை ஏற்படுகிறது. அதனாலேயே அவர்கள் மறக்க முடியாதவர்களாகிறார்கள்' - இது இரா. மோகனின் நிறைவுரை!



• சித்ராவின் பரதநாட்டியம்

கல்கி - அவர் காலமும் வாழ்வும் - ஆறு மாதங்களுக்கு அலசக் கூடிய ஒரு தலைப்பு! அதை அரை நாளில் வழிநடத்தி முடிக்கும் பொறுப்பு செ. ரவீந்திரனுக்கு. பொன்னேஸ்வரன், கே. மகாதேவன், ஏ.ஆர். ராஜாமணி, இந்திராணி மணியன், கோவி இராசகோபால் என்று பலர் பங்கேற்றார்கள். தனித் தனி தலைப்புகள் தரப்பட்டிருந்தாலும் (தமிழிசை, பத்திரிகைப் பணி, நாட்டுப்பற்று...) பேசியவர்கள் அனைவருமே உற்சாக மிகுதியில் அடுத்தவர் தலைப்பையும் கொஞ்சம் ஆக்கிரமித்துக் கொள்ள, இறுதிப் பேச்சாளர்கள் எந்தத் தலைப்பில் பேச என்று தடுமாற... கருத்தரங்கு சிரிப்பரங்கானதும் ஒரு சிறப்புதான்!



இந்தக் கருத்தரங்கில் பேசியவர்களுக்குப் பெரிதும் கைகொடுத்தது சுந்தாவின் பொன்னியின் புதல்வர் நூல் (அமரர் கல்கி வாழ்க்கை வரலாறு). அதிலிருந்து மேற்கோள்மயமாக எடுத்துப் பொழிந்து தள்ளிவிட்டார்கள். இந்த மாபெரும் பணி மூலம் கல்கிக்கு ஒரு நிரந்தர நினைவாலயம் எழுப்பியிருக்கும் டெல்லி தமிழர் சுந்தாவுக்கு இந்நிகழ்ச்சி ஒருவகையில் நினைவாஞ்சலியாக அமைந்தது என்றே கூறலாம்.

கருத்து விருந்துண்டு களைத்தவர்கள் கலை விருந்தில் சற்று நேரம் இளைப்பாற உதவினார் பெங்களூரைச் சேர்ந்த சித்ரா. இவர் வழங்கிய பரத நாட்டிய நிகழ்ச்சியோடு இரண்டாம் நாள் கொண்டாட்டங்கள் முடிந்தன.

மூன்றாம் நாள்... பேராசிரியர் மோகன் குழுவினர்தான் மீண்டும் மேடையில். முந்தைய தினம் அவர்கள் போடு போடென்று போட்டதில் கொஞ்சம் தொண்டை வரண்டிருக்குமோ என்ற நமது பயமெல்லாம் சுத்த வேஸ்ட்! கருத்தும் சரி; குரலும் சரி சளைக்காமல் பெருக்கெடுத்தன! அமரர் கல்கியின் புகழுக்குப் பெரிதும் காரணம் அவரது படைப்புப் பணியா? பத்திரிகைப் பணியா? பொதுநலப் பணியா? நாட்டுப் பணியா...? -நான்கு தலைப்புகளில் பதினான்கு பேர் பேசினார்கள்! காரம், சாரம், கிண்டல், கேலி, ஆட்டம், பாட்டம் என்று வினாடிக்கு வினாடி பொறி பறந்தது நிகழ்ச்சியில்.

கல்கியின் வாழ்க்கை வரலாறு




• மேடையில் பேச்சாளர்கள்

எழுதிய சுந்தாவே 850 பக்கங்களுக்கு மேல் அவர் சாதனைகளை அலசிவிட்டு, அவர் சாதனைகளுள் மிகச் சிறப்பானவை அவர் எழுத்துச் சாதனைகளே' என்று இறுதியில் குறிப்பிட்டதை மேற்கோளாக்கிக் கொண்டனர் எழுத்துப் பணி கட்சியினர்.

'எழுத்தெல்லாம் சமுதாயப் பார்வையால் எழுந்தவைதானே! அதனால் சமுதாயப் பணியில்தான் அவற்றையும் சேர்க்கவேண்டும்; ஆகவே எங்கள் கட்சியான 'பொதுப்பணியே' கட்சிதான் பலம் பெறுகிறது' என்றனர்.

'நாடா? பத்திரிகையா? என்ற கேள்வி எழுந்தபோது பத்திரிகைப் பணியை ஒதுக்கி விட்டு நாட்டுப் பணிக்காக ஓடிச் சிறை புகுந்தாரே! அவருடைய தேசப் பணியே பணி' என்று மற்றொரு கட்சி.

'பத்திரிகைப் பணி மூலம் எத்தனை எழுத்தாளர்களை, ஓவியர்களை, வாசகர்களை உருவாக்கி, மெருகேற்றிவிட்டுச் சென்றிருக்கிறார்!' என்று நான்காவது கட்சி...

தீர்ப்புச் சொல்லத் திணறுவார் என்று பார்த்தால், மோகன் மிகச் சாமர்த்தியமாகச் சமாளித்தார்: கல்கி ஒரு தொலைக்காட்சி பெட்டி என்றால் அவருடைய பத்திரிகை, படைப்பு, பொதுநலத் தொண்டு, தேசப் பணி ஆகிய நான்கும் நான்கு சானல்கள் என்று சொல்லி நிகழ்ச்சியின் சுவிட்சை அணைத்து விட்டார்!

பிற்பகல் நிகழ்ச்சியை பூனேவிலிருந்து வந்திருந்த ஒரு வி.வி.வி.ஐ.பி. முற்றிலும் ஆக்கிரமித்தார். திருவாளர் 'தியாக பூமி'யைத் தான் சொல்கிறோம்! இந்த நூற்றாண்டு விழா கொண்டாட்டத்துக்கென சிறப்பு அனுமதி பெற்று, பூனே தேசிய திரைப்பட ஆவணக் காப்பகத்திலிருந்து படச் சுருளை பலத்த பாதுகாப்புடன் தருவித்திருந்தனர் தமிழ்ச் சங்கத்தினர். படத்தைப் பார்த்தவர்கள் தாங்கள் செய்த பெரும் பாக்கியமாகவே அவ்வாய்ப்பைக் கருதினார்கள். 'அடேயப்பா! 1930களின் இறுதியிலேயே 'கல்கி' இத்தனை புரட்சிகரமான கதையும் வசனமும் எழுதியிருக்கிறாரே!' என்று வியந்து சிலிர்த்தனர், அடுத்தடுத்த இரு தலைமுறையினர். அன்றே அதைத் துணிந்து திரைப்படமாக்கிய டைரக்டர் கே. சுப்பிரமணியத்தின் திறமையையும் போற்றினர்.

மோகன் குழுவினரின் முத்திரை ஐட்டமான பட்டிமன்றம்தான் மூன்று நாள் விழாவின் இறுதி நிகழ்ச்சி. கல்கியின் படைப்புகளில் விஞ்சி நிற்பது நகைச்சுவை உணர்வா அல்லது சரித்திர உணர்வா என்பது தலைப்பு.

முன்னுரையிலேயே ஒரு ரகசியத்தைப் போட்டு உடைத்தார் மோகன்: 'இன்று பல பட்டிமன்றங்களில் பேசப்படும் துணுக்குகள், நகைச்சுவை நிகழ்ச்சிகள் அமரர் கல்கியிடமிருந்து கடன் வாங்கப்பட்டவைதான்!

புண்படுத்தாத நகைச்சுவைக்குத் தண்ணீர் விட்டு வளர்த்தவர் கல்கி என்று ராஜாஜியே குறிப்பிட்டது; வரலாற்று நாவல்களில் கூட கல்கி நகைச்சுவை உணர்வை வெளிப்படுத்தியது; பகைவனையும் சிரிக்க வைத்தார் கல்கி என்று கண்ணதாசன் சொன்னது... - இவையெல்லாம் நகைச்சுவையுணர்வு கட்சிக்காரர்களுக்கு வாதாடக் கைகொடுத்தன.

சரித்திர உணர்வுக்கு வக்காலத்து வாங்கியவர்கள், 'சதாசிவ பண்டாரத்தாரும் நீலகண்ட சாஸ்திரியும் சரித்திரத்தைச் சமைத்துத் தந்தனர்; அதைப் 'பிசைந்து, குழந்தைக்கு நிலாச்சோறு ஊட்டுவது போல் கதையாக்கி சராசரி மக்களுக்கு ஊட்டினார் கல்கி' என்று வாதிட்டனர்.

'நகைச்சுவையில் வரலாறு படைத்த கல்கி, வரலாற்றிலும் நகைச்சுவையைத் தூவியிருக்கிறார். அவர் எழுத்துக்களில் கொஞ்சி நிற்கிறது நகைச்சுவை; விஞ்சி நிற்கிறது சரித்திர உணர்வு' என பட்டிமன்றத்துக்கும் விழாவுக்கும் சேர்த்து முற்றுப்புள்ளி வைத்தார் மோகன்.

'மூன்று நாள் நிகழ்ச்சிகளுள் எது விழாவுக்கு அதிகம் சிறப்புச் சேர்த்தது?'; வாசகர்களுக்கு ஒரு குறுகுறுப்பு ஏற்படவே செய்யும். அதைத் தீர்மானிக்க இன்னொரு பட்டி மன்றம்தான் நடத்த வேண்டும்! அதில் அதிகம் சிறப்புச் சேர்த்தது 'டெல்லித் தமிழ்ச் சங்கத்தினரின் விருந்தோம்பலே' என்ற தலைப்பையும் மறக்காமல் சேர்க்க வேண்டும்!

— ரமாமணி சுந்தர்

படங்கள்: செந்தில் ஆர். கணேஷ்

**செனாரி. 38 பேர் படுகொலை செய்யப்பட்ட இந்த பீஹார் கிராமத்துக்கு – அந்தக் கொடூரத்தின் ரத்தக் கறை காய்வதற்கு முன்பே – முதன் முதலில் சென்ற வெளியூர்ப் பத்திரிகையாளர்கள் நாம்தான். என்றாலும் இதில் பெருமைப்பட்டுக் கொள்ள முடியாத சோகம்தான் நம் நெஞ்சைப் பிழிகிறது....**

# பீஹார்



• ராம் சுந்தர் சின்ஹா வந்தபோது எதிர்த்து கோஷமிட்ட மக்கள்

சரியாகச் சொல்ல வேண்டுமென்றால், பாட்னாவிலிருந்து 104 கி.மீ தூரத்தில் இருக்கிறது செனாரி கிராமம். கிராமம் என்றால் நம் ஊர் குக்கிராமங்களை விட ஆயிரம் மடங்கு மோசமான குக்கிராமம்.

பீஹார் மாநிலத்திலுள்ள எந்த கிராமத்துக்குமே மின்சாரம் கிடையாது; டெலிபோன் கிடையாது; சாலை வசதிகள் இடையவே கிடையாது. இவற்றில் ஒன்றுதான் செனாரி.

பாட்னாவை ஒட்டியுள்ள ஜெகனாபாத் மாவட்டத்தைச் சேர்ந்த இந்தக் கிராமத்துக்கு ஜெகனாபாத் வரை, கிட்டத்தட்ட பாதி தூரத்துக்குத் தார் ரோடு வசதி. ஜெகனாபாத்திலிருந்து மீதிப் பாதி தூரத்துக்கு குண்டும் குழியுமான தார் ரோடு வசதி. அதன் பிறகு பத்து கி.மீட்டருக்கு குமாரான வண்டித்தடம். அதன் பிறகு பத்து கி.மீக்கு ஜீப்புகளும் டிராக்டர்களுமே தட்டுத் தடுமாறிப் போகக்கூடிய ஒரு வகையான பாதை. அப்புறம் ஒரு கால்வாய் குறுக்கிடுவதால் அந்த ஒருவகையான பாதையும் துண்டிக்கப்பட்டு விடுகிறது.' பிறகு குமார் ஒன்றரைக் கி.மீ. தூரத்துக்குக் கோதுமை வயல்களுக்கு மத்தியில் – வரப்புகளில் நடந்துதான் செல்ல வேண்டும்.

பாட்னாவில் நாம் பிடித்த வாடகை அம்பாசிடர் காரின் டிரைவர் சர்தார் சிங், போன ஜென்மத்திலாவது சர்க்கஸில் வேலை பார்த்தவராக இருந்திருக்க வேண்டும். இல்லையென்றால் அம்பாசிடரை

• கே. எல். சர்மா வந்தபோது...





• பா.ஜ.க. பெண் தலைவிகளிடம் அழுது புலம்பும் மக்கள்

# பயங்கரம்!

புல்டோசர் மாதிரி ஓட்டி யிருக்க முடியாது!

செனாரிக்குச் சுமார் பத்து கி.மீ. தூரத்துக்கு முன்பு பத்ரா என்று ஒரு கிராமம். அங்குள்ள கால்வாயைத் தாண்டிக் கொண்டிருந்தபோது, உள்ளூர்க்காரர் ஒருவர் தென்பட்டார். அவரிடம் செனாரிக்கு வழி கேட்டபோது, "எங்கள் தொகுதி எம்.எல்.ஏ.கூட இன்னும் வந்து எட்டிப் பார்க்கவில்லை. உங்களுக்கு இங்கே என்ன வேலை?" என்று கோபமாகக் கேட்டார்.

"நாங்கள் மதறாஸிலிருந்து (சென்னை என்றெல்லாம் நமது பெயர் மாற்றத்தைச் சொல்லி விளக்குவதற்குள் ஏதோ ஒருவகை தீவிரவாத அமைப்பு என்று தவறாகப் புரிந்து கொண்டு உதைக்க வந்தால் என்ன செய்வது?) வருகிற பத்ரகாரர்!" என்று நம்மை அறிமுகப்படுத்திக் கொண்ட பிறகுதான் சூடு தணிந்து வழி சொன்னார்.

"ஹிந்தி மாலூம் நஹி!" என்பது தவிர, நமக்குச் சுத்தமாக இந்தி தெரியாது. பாட்னாவிலேயே ஆங்கிலம் பேசுபவர்களைத் தேடித்தான் கண்டுபிடிக்க வேண்டும் என்கிற நிலையில், பீஹார் கிராமங்களின் நிலை பற்றிச் சொல்லவே தேவையில்லை. இந்தச் சூழ்நிலையில் – 35 பேரைப் பலிகொடுத்து விட்டு நிற்கிற செனாரியில் நம்மை எப்படி எதிர்கொள்ளப் போகிறார்கள்? இந்த பயத்தோடுதான் அங்கே சென்றோம்.

செனாரியில் நுழைந்தவுடன் நமது கண்ணில்பட்டவர்கள் அமரேந்திரகுமாரும் நரேந்திர குமாரும். "மதராஸ் பத்ரகார்" என்றதும் அவர்களது துக்கத்தையும் கோபத்தையும் மீறி ஓர் ஆச்சரியம். வெளியூர் அல்லது தில்லி உள்பட பிற இடங்களிலிருந்து வேறு எந்தப் பத்திரிகையாளர்களுமே அதுவரை வராத ஒரு சூழலில், சென்னையிலிருந்தா என்கிற பிரமிப்பு. இதன் காரணமாக மொழிகளைக் கடந்து ஒருவரையொருவர் புரிந்து கொள்ள முடிந்தது.

"இதோ... இந்த இடத்தில்தான் மூன்று பேரைக் கழுத்தறுத்துக் கொன்றார்கள்!" என்று ஊருக்குள் நுழைகிற பாதையில் ஓரிடத்தைக் காட்டினார்கள். அங்கே மனித ரத்தம் தோய்ந்து போயிருந்த கறை!

சுமார் நூறு வீடுகளே உள்ள அந்தக்



• சுமார் 20 கி.மீ. தூரம் இப்படியான கால்வாய்களைக் கடந்தே செனாரி கிராமத்துக்குச் செல்ல வேண்டும்

• செனாரி கிராமம்



கிராமத்தில் 41 பேரைக் ,, ,, இழுத்துச் சென்று, கோதுமைப் பயிரை அறுவடை செய்யும் கருக்கரிவாளால் கழுத்தை அறுத்திருக்கிறார்கள். அதில் 38 பேர் பலியாகி விட்டனர். மீதி மூன்று பேர் உயிருக்குப் போராடிக் கொண்டு மருத்துவமனையில்.

இந்த நிலையில் அங்கே ஏகத்துக்கு போலீஸ் பாதுகாப்பு இருக்கும் என்று நினைத்திருந்த நமக்குப் பெருத்த ஏமாற்றம். நம் கண்ணில் எந்தப் போலீஸு"ம் தென்படவில்லை.

கிராமத்துக்குள் சென்றோம். பூமிகார் என்கிற உயர்ஜாதியினர் – நிலச்சுவான்தார்கள் வசிக்கிற கிராமம் போலவே இல்லை. ஒவ்வொரு வீட்டு வாசல் முன்பாகவும் எருமை மாடுகள். அப்புறம்தான் வீடு. வீடு என்றால் பல அறைகள் கொண்ட வீடுகள் அல்ல. பெரும்பாலானவை ஒரேயொரு அறை கொண்ட வீடுதான். முன்பாக தாழ்வாரம். இருக்கிற ஓர் அறைக்குள்ளும் பரணில் வறட்டிகள்தான் அடுக்கி வைக்கப் பட்டிருந்தன!

முதலில் நாம் சென்றது சுரேந்திர சர்மாவின் வீட்டுக்கு. கொலைகள் நடந்தது வியாழக் கிழமை இரவு. நாம் சென்றது ஞாயிற்றுக்கிழமை. அவர்கள் சம்பிரதாயப்படி பலியானவர்களுக்காக ஏதோவொரு சடங்கு செய்வதற்கான ஆயத்த வேலைகளில் ஈடுபட்டிருந்தார்கள்.



• ராம்கிஷோர் சர்மா : 'தப்பித்த' அதிர்ஷ்டசாலி

நம்மைக் கண்டதும் 'நீ யார்? இங்கே உனக்கு என்ன வேலை?' என்பது போன்ற பார்வை. அறிமுகப்படுத்திக் கொண்டதும் வியந்து போய்விட்டார்கள். "பைட்டோ, பைட்டோ" என்று ஜமுக்காளத்தை விரித்துப் போட்டு உட்காரச் சொன்னார்கள்.

தாகத்துக்குப் 'பானி' கேட்ட போது, தண்ணீர் தர மறுத்து சர்பத் கலக்கிக் கொடுத்தார்கள். அந்தக் கிராமத்திலேயே கொஞ்சம் கொஞ்சம் ஆங்கிலம் தெரிந்த ஒருவரைக்கூட்டி வந்து, நம்மோடு சோகத்திலும் பிரியமாகப் பேச ஆரம்பித்தார்கள்.

நாம் முதலில் சென்ற சுரேந்திர சர்மா வீட்டில் பலியானவர், அவரது 33 வயதுத் தம்பி. பாவம், அந்த இளம் மனைவி கைக் குழந்தையோடு கதற ஆரம்பித்து விட்டார். கூடவே அவர்களின் சகோதரி ரொஞ்ஜன் குமாரி (அட்டைப் படத்தில் உள்ளவர்கள்)யும் கதற ஆரம்பித்து விட்டார்.

இதற்கிடையில் ராம் கிஷோர் சர்மா என்பவரை அழைத்து வந்து, "அந்தக் கொலைகாரர்கள் (MCC என்கிற மாவோயிஸ்ட் கம்யூனிஸ்ட் சென்டர் அமைப்பினர்) மத்தியிலிருந்து தப்பியவர் இவர்!" என்று நம்மிடம் அறிமுகப்படுத்தினார்கள்.

"வியாழக்கிழமை இரவு சுமார் ஏழரை மணியிருக்கும். ஏழு பேர் வந்து எனது கைகளைப் பின்புறமாகக் கட்டி இழுத்துச் சென்றார்கள். 'இந்தக் கிராமத்திலுள்ள பூமிகார் வீடுகளையெல்லாம் எங்களுக்கு அடையாளம் காட்டு' என்று என்னைக் கொடுமைப்படுத்தினார்கள். 'நான் பூமிகார் இல்லை; கஹார் என்கிற ஜாதி. என்னை விட்டு விடுங்கள். எனக்கு ஒன்றும் தெரியாது' என்றேன். எனது வார்த்தையை

# குன்றாத புதுமை... குறையாத வளமை!

நமக்கு நாமே உதவிக் கொள்ளவும், பிறருக்கு பக்க பலமாய் விளங்கவும் பல நூற்றாண்டுகளாக நிலவி வரும் தொன்மையான முறை சீட்டுத் திட்டங்கள். குடவோலைக் காலம் முதல் தற்பொழுதுள்ள கம்ப்யூட்டர் காலம் வரை எத்தனை நூற்றாண்டுகளானாலும் வளமைக்கு ஒரே வழி புதுமைப் பொலிவு குன்றா சீட்டுத் திட்டங்களே...

ஸ்ரீராம் சிட்ஸ்

மார்ச் 14 - ஏப்ரல் 14

ஸ்ரீராம் சீட்டுத் திட்டங்கள், உங்கள் வளமான வாழ்க்கைக்கு வழிகாட்டும் முதலீட்டு முறை. 25 வருடங்களானாலும் புதுமைப் பொலிவு குன்றாத இத்திட்டங்களில் உங்கள் தேவைக் கேற்ப கடன் பெறும் வாய்ப்பும் உண்டு.

**நம் கையே நமக்குதவி :**

மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை சேமித்தால் போதும். தேவை ஏற்படும் போது, அதுவரை சேர்த்த தொகை மட்டுமின்றி வருங்கால சேமிப்பையும் சீட்டுத் தொகையாகத் தள்ளியெடுக்கலாம். சேமிப்பில் இருப்பது உங்கள் பணம். அதுதான் உங்களுக்கு உதவுகிறது.



**அள்ளிச் செல்லுங்கள் அதிக ஆதாயத்தை:**

சீட்டை ஏலம் கேட்கும் போது தள்ளியெடுக்கும் தொகையை நீங்களே தீர்மானிக்கலாம். வேறொருவர் அதிகத் தொகை தள்ளி எடுத்தால், உங்கள் கசருத் தொகை அதிகரிக்கும். எப்படிப் பார்த்தாலும் உங்களுக்கு லாபம் மட்டுமே.

**எளிமையான நடைமுறைகள் :**

ஏலம் எடுத்த தொகையை நீங்கள் பெறுவதற்குரிய நடைமுறைகளும் எளிதானவை, தெளிவானவை. வாருங்கள். புதுமை மாறாத பாதையில் வீறுநடை போட்டு, சிறப்பான பலன் பெறுவோம்.

வானமே எல்லை

**ஸ்ரீராம் சிட்ஸ்**

ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்,

சுப்ரமணியன் பில்டிங், 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.

போன் : 8520700, 8520797, 8522651 Visit us at : www.shriram.com

இக்கூப்பனை ஸ்ரீராம் சிட்ஸ் கிளையில் கொடுத்து இலவசப் புத்தகத்தைப் பெற்றுச் செல்லுங்கள்.

WORDCRAFTS/SCI/MG/1

நம்பி விட்ட அவர்கள், என்னை அத்தனை கவனத்தோடு அழைத்துச் செல்லவில்லை. இந்த வாய்ப்பை நான் பயன்படுத்திக் கொண்டு, கட்டப்பட்டிருந்த எனது கைகளை மெதுவாக அவிழ்த்துக் கொண்டு, இருளில் தப்பி ஓடி விட்டேன்!" என்றார் ராம்கிஷோர் சர்மா.

சுரேந்திர சர்மாவும் பிற இரு தம்பிகளும் அன்று ஊரில் இல்லாததால் தப்பித்து விட்டனர். ஊரில் இருந்த ஒரு தம்பி மட்டும் பலியாகி விட்டார். இதுவரை அழுகையை அடக்கிக் கொண்டிருந்த திருமதி சுரேந்திர சர்மா, பிறகு முடியாமல் அழ ஆரம்பித்து விட்டார்.



• திருமதி சுரேந்திர சர்மா

ஜித்து சர்மா என்கிற தமது 25 வயது மகனைப் பலிகொடுத்து விட்ட மிதிலேஸ் தேவியைச் சந்தித்த போது, "சுமார் இருபத்தைந்து பேர் வீட்டுக்குள் வந்தனர். நாங்களெல்லாம் கதறக் கதற என் மகனின் கைகளைப் பின்புறமாகக் கட்டி இழுத்துச் சென்றனர். வந்தவர்கள் போலீஸ் மாதிரியான சீருடையில் இருந்தார்கள். சிலர் முகத்தைத் துணியால் கட்டி மறைத்துக் கொண்டிருந்தார்கள். சிலர் வெறுமனே இருந்தார்கள். அவர்களுக்கு எங்களை உள்ளூர் தலித்துகள்தான் அடையாளம் காட்டியிருக்க வேண்டும்!" என்றார்.



• நரேந்திர குமார்

இவரது அண்டை வீட்டுக்காரியான சிந்தாதேவி, "என் ஏழு வயது மகன் ரஞ்சய் குமாரைப் பிடித்த போது, நான் ஓடிப் போய் அவனை வாரியணைத்துக் கொண்டேன். 'இவனைக் கொல்ல வேண்டுமானால் முதலில் என்னைக் கொன்று விடுங்கள்!" என்றேன். பிறகு என்ன நினைத்தார்களோ தெரியவில்லை; அவனை விட்டு விட்டுச் சென்று விட்டார்கள்!" என்றார்.



• அமரேந்திர குமார்

இதற்கிடையில் இந்தக் கிராமம் அடங்கியுள்ள குர்தா தொகுதியின் முன்னாள் எம்.எல்.ஏவான டாக்டர் ராம் சத்தன் சின்ஹா (பீஹார் இ. காங்கிரஸின் துணைத் தலைவர்களில் ஒருவர்; பாட்னா பல்கலைக் கழகத்தில் ரசாயனப் பேராசிரியரும் கூட!) கிராமத்துக்குள் நுழைந்ததும் ஒரு வித சலசலப்பு. பலர் அவருக்கு எதிர்ப்புத் தெரிவித்துக் கத்த ஆரம்பித்து விட்டனர். பீஹாரில் அமல் செய்யப்பட்ட ஜனாதிபதி ஆட்சியை சோனியா காந்தி ஆதரித்திருந்தால் எங்களுக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்குமா என்கிற கோபக் குரல்கள்! கூடவே எழுத முடியாத அளவுக்கான கெட்ட வார்த்தைகள்!

ஒரு மாதிரி அவர் மௌனமாக அந்த இடத்திலிருந்து அகன்று விட்ட பிறகும் அங்கிருந்த கிராமவாசிகள் சிலரின் கோபத்தில் துடித்த உதடுகள் பழைய நிலைக்குத் திரும்ப ரொம்ப நேரமானது. சிறிது நேர மௌனத்துக்குப் பிறகுதான் நம்மிடம் பழையபடி பேச ஆரம்பித்தார்கள்.

"தனித்தனியாக அமைப்புகள் - படைகளை ஏற்படுத்திக் கொண்டு ஒருவரையொருவர் பழிக்குப் பழி கொலை செய்து கொண்டிருப்பதை நிறுத்தவே முடியாதா? இதற்கெல்லாம் என்னதான் காரணம்?" - சுரேந்திர சர்மாவிடம் கேட்டோம்.

"ஜனாதிபதி ஆட்சியே தொடர்ந்திருந்தால் இந்த நிலைமை ஏற்பட்டிருக்காது. மறுபடியும் லாலு (ராப்ரி தேவி) ஆட்சி வந்ததால்தான் இப்படியாகிவிட்டது. இதற்கெல்லாம் ஒரு முடிவு கட்ட வேண்டுமானால் எங்கள் கிராமத்துக்கு முதலில் மின்சாரம் வேண்டும்; (கோதுமைப் பயிர் விளைச்சலெல்லாம் கால்வாய் மற்றும் ஆயில் எஞ்ஜின் மூலமாகத்தான் நடைபெற்று வருகிறது) நல்ல ரோடு வசதி வேண்டும்; டெலிபோன் வசதி வேண்டும். இவை இருந்தாலே பாதிப் பிரச்னை தீர்ந்து விடும்!"



• சுரேந்திர சர்மா

"இங்குள்ள கிராமங்களில் மின்சாரமே இல்லை என்பது எங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறது!"

"எங்கள் கிராமத்தில் 75-ம் ஆண்டில் மின்சாரம் வந்தது. ஆனால் என்ன பயன்? மின்சாரக் கம்பிகளைத் திருடி விற்க ஆரம்பித்து

WORDCRAFTS/SCI/M/i/L

முன்பெல்லாம் பின்னிரவில் எழுந்து எழுதுகிற பழக்கம் இருந்தது. இப்போ பகல்ல கூட எழுதறேன். எனக்கு இடம்தான் முக்கியமான ஒண்ணா இருக்கு. 'நான் புழங்கற இடம் இதுதான்னு' மனம் தேர்ந்தெடுக்கிற வரைக்கும் என்னால எழுத முடியாது. புது வீட்டுக்கு மாத்தி போறப்போ, யாராவது எழுதச் சொல்லி கேட்டாக் கூட, முடியாதுன்னு சொல்லிடுவேன். அந்த இடம் 'செட்'டாகும் வரைக்கும் என்னால் எழுத முடியாது. இடத்தோட வசதி, வசதிக் குறைவுங்கறது இடத்தைச் சார்ந்ததில்லை; மனசைச் சார்ந்தது.

**— வண்ணதாசன்**



விட்டதால் (அவர் குறிப்பிடுவது தாழ்த்தப்பட்ட ஜாதியினரை) வந்த மின்சாரம் போய்விட்டது. இதில் அரசாங்கம் கவனம் செலுத்த வேண்டும்.''

''பொதுவாக உங்கள் கிராம மக்கள் எப்படி?''

''கடவுள் நம்பிக்கையுடையவர்கள். அமைதியானவர்கள். பிற ஜாதியினரோடும் நாங்கள் சகோதரர்களாகத்தான் பழகி வருகிறோம்.''

''தலித்துகள் உள்பட இல்லையா?''

''.....ஆமாம். ஆனால் எங்கள் கிராமத்துக்கு வெளியே இருக்கிற தலித்துகள் கிரிமினல்களுக்கு ஆதரவும் அடைக்கலமும் கொடுப்பவர்கள். அந்த ஐந்தாறு வீடுகளையும் அப்புறப்படுத்த வேண்டும். அப்போதுதான் எங்கள் கிராமம் நிம்மதியாக இருக்க முடியும்!''

இந்தச் சமயத்தில்தான் பி.ஜே.பியின் அகில இந்தியத் துணைத் தலைவர்களில் ஒருவரான கே.எல். சர்மாவும் பாட்னா எம்.பி.யான சி.பி. தாகூரும் பெண்களுக்கு ஆறுதல் சொல்வதற்கு வசதியாக பீஹார் பி.ஜே.பியின் மாநிலச் செயலாளர் சந்திரமுகி தேவி உள்பட பி.ஜே.பி. பெண் தலைவிகள் மூவரும் அங்கே வந்து சேர்ந்தார்கள்.

''நீங்கள் வந்து பார்த்து மட்டும் என்ன செய்து விடப் போகிறீர்கள்?'' என்று சில கோபக்குரல்கள் ஒலித்தாலும் அவர்களையெல்லாம் ஒரு மாதிரி சமாதானப்படுத்திக் குறிப்பெடுக்க ஆரம்பித்து விட்டார், டெல்லியிலிருந்து வந்திருந்த கே.எல். சர்மா.

பி.ஜே.பியின் பெண் தலைவிகள் பெண்களை விசாரிக்கப் போக, ஒரே அழுகை மயம். அவர்களும் அவர்களைத் தேற்றியபடி வீடு வீடாகச் (வீடுகள் அல்ல; ஓடு போட்ட குடிசைகள்தான்!) செல்ல, அழுகைக் குரல்கள் அதிகமாகி விட்டன.

முழுகாமல் இருக்கும் ஒரு பெண் தமது புதுக் கணவன் வெட்டுப்பட்டு மருத்துவமனையில் இருக்கும் சோகம்; கல்யாணமாகிச் சில மாதங்கள் கூட ஆகாத நிலையில் விதவையாகி விட்ட ஓர் இளம்பெண்ணின் கதறல்... முழுகாமல் இருக்கும் ஓர் இளம் பெண், தனது கணவனின் உயிரைக் காப்பாற்றப் போக, அவரது வயிற்றில் எட்டி பலமாக உதைத்து விட்டுச் சென்றிருக்கின்றனர் தீவிரவாதிகள். கணவனை இழந்த அப்பெண்ணுக்கு தனது வயிற்றிலிருக்கும் கருவாவது பிழைக்குமா என்கிற கவலை. ஒரே வீட்டில் இரண்டு மூன்று ஆண்களைப் பலிகொடுத்து விட்ட அவலம். அநேகமாக எல்லா 'பூமிகார்' வீடுகளிலும் அழுகைக் குரல்கள்தான்!

இப்படி எல்லாப் பெண்களும் அழ, ஆண்களெல்லாம் ஒருமித்த குரலில் பேச ஆரம்பிக்க, நமக்கு சோகத்தைத் தவிர, வேறு எதுவும் புரியாத நிலை.



நான் இரைச்சலுக்கு மத்தியிலும் எழுதுவேன். ஆனா, இசைக்கு மத்தியில் எழுத முடியாது. ஆம்பளைங்க மாதிரி பார்க்ல, பீச்ல உட்கார்ந்தெல்லாம் என்னால எழுத முடியாது. வீட்லதான் எழுதறேன்.

**— ஜோதிர்லதா கிரிஜா**

ஸ்கெட்ச் பென்சில் வச்சு தலைப்பை அலங்காரம் பண்ணுவேன். எழுதறதுக்கு நேரமெல்லாம் கிடையாது. இரவா இருந்தாலும், பகலா இருந்தாலும், சுற்றுப்புறம் எப்படி இருந்தாலும் எழுதுவேன். தொடர்கதை எழுதறப்போ முதல் அத்தியாயம் சரியா வரணும்கறதுக்காக ரொம்பப் போராடுவேன். நான் எந்தப் பத்திரிகைக்கு எழுதறேனோ அந்தப் பத்திரிகைக்கான தேவை, அளவு எல்லை மீறாமல், நாலரைப் பக்கமோ, அஞ்சு பக்கமோ கரெக்டா எழுதி முடிச்சுடுவேன். கதைல அந்த பஞ்சிங் பாயிண்ட் எனக்கு கரெக்டா, பக்காவா வரும்.

—பட்டுக்கோட்டை பிரபாகர்



ஒரு வழியாக அழுகைகள் ஆசுவாசப்பட்டு அமைதியாகிவிட்டால் போதுமென்றோ அல்லது அவர்கள் சோகத்தை மீண்டும் மீண்டும் கிளற வேண்டாமே என்கிற எண்ணத்துடனோ பி.ஜே.பியின் பெண் தலைவிகள் ஊருக்கு வெளியே சென்று மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு விட்டார்கள். கே.எல். சர்மாவும் பிறரும்தான் நடந்தவற்றை விளக்கமாக விசாரித்துக் கொண்டிருந்தார்கள்.

இதற்கிடையில் பாதி ஆண்கள், பலியானவர்களுக்கான சடங்குகளைச் செய்யச் சென்று விட்டனர். மீதிப் பேர்தான் எம்.சி.சி. அமைப்பினர் சுமார் ஆயிரம் பேர் (அத்தனை பேர் வந்திருப்பார்களா என்று தெரியவில்லை) கிராமத்தின் வடக்குப் பகுதியிலிருந்தும் தெற்குப் பகுதியிலிருந்தும் வந்து, 'பூமிகார்' ஜாதி ஆண்களை மட்டும் கைகளைக் கட்டி இழுத்துக் கொண்டு – பெண்களை வீட்டுக்குள் போட்டு வெளியே தாழிட்டு விட்டுச் சென்று, கழுத்தறுத்த கதையைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். செனாரி கிராமத்திலிருந்து ஆறு கி.மீ. தூரத்திலிருக்கும் மாணிக்பூரில் போலீஸ் ஸ்டேஷன் இருந்தும் அங்கிருந்து எந்த போலீஸும் கொலை நடந்த இடத்துக்கு வராமல், சுமார் இருபது கி.மீ. தூரத்திலுள்ள கிஞ்ஜார் என்னுமிடத்திலிருக்கும் சி.ஆர்.பி.எப். போலீஸ்தான் வந்ததாகவும், இதற்கெல்லாம் லல்லு – ராப்ரிதேவி கட்சி எம்.சி.சி. அமைப்புக்குத் தரும் ஆதரவுதான் காரணமென்றும் முறையிட்டுக் கொண்டிருந்தார்கள்.

சுமார் ஏழு மணியிலிருந்து பதினொரு மணி வரை 'பூமிகார்' ஆண்களையெல்லாம் பிடித்துச் சென்று கைகளைக் கட்டி ஒவ்வொருவரின் குரல்வளையாக அறுத்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். ஒருவர் துடிப்பதைப் பிறர் மரண பயத்தோடு பார்ப்பதில் கொலைகாரர்களுக்கு அத்தனை குரூர சந்தோஷம்!

இறுதியாக நாம் செனாரியிலிருந்து திரும்பும் போது 'பூமிகார்' குறிப்பிட்ட அந்த தலித் குடிசைகளுக்கு வந்தோம். அங்கிருந்த ராம்பிரசாத் ரவானி யிடம் கேட்டோம்.



"ஆமாம். அன்றைக்கு இப்படிச் சில பேர் ஊருக்குள் சென்றதை நான் பார்த்தேன்!" என்கிற தொனியில் பேச்சை ஆரம்பித்தவர், பிறகு சுதாரித்துக் கொண்டு, "எனக்கு ஒன்றுமே தெரியாது!" என்று சாதிக்க ஆரம்பித்து விட்டார்.

'பூமிகார்'களுடனான அவர்களது உறவு எப்படி? என்று விசாரித்தபோது, "அவர்களின் நிலத்தில்தான் நாங்கள் வேலை செய்து கொண்டிருக்கிறோம். எங்களுக்குள் எந்தப் பிரச்னையும் இல்லை!" என்றார்.

*(பீஹாரில் மட்டும் ஏன் இந்த நிலை? ராப்ரியும் லாலுவும் என்னதான் செய்கிறார்கள்? பாட்னாவில், பல்வேறு கட்சித் தலைவர்களையும் சந்தித்துப் பேசினோம். அது பற்றிய விரிவான அலசல் கட்டுரை அடுத்த இதழில்!)*

செனாரியிலிருந்து :

**இளங்கோவன், மு. சிவலிங்கம்.**

அட்டை வண்ணப்படமும், படங்களும் : **ராஜ்குமார்**

நான் எப்பொழுது எழுத அமர்ந்தாலும் பத்திலிருந்து, பதினைந்து நிமிடம் தியானத்தில் அமர்வேன். ஊதுவத்தி வாசனை அப்போது வேண்டும். தியானம் முடிந்து எழுந்ததும் அதிக நெடியற்ற, உயர்தரமான சார்லி சென்ட்டை உடலில் ஸ்பிரே பண்ணிவிட்டு எழுத உட்காருவேன். நான் வாசனைப் பிரியன். என்னுடைய அறை மேசையைத் தவிர வேறு எந்த ஏசி ரூமிலும் எனக்கு எழுத வராது.

— கோவி. மணிசேகரன்






1999 ஏப்ரல் 4
வெகுதான்ய பங்குனி 21
மலர் : 57
இதழ் : 36

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# தாமரைக்கனிக்குச் சாமரம் வீசுவதா?

சட்டசபை என்பது ஜனநாயகத்தின் ஊற்றுக்கண்; பொறுப்புள்ளவர்கள் கூடும் இடம். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் கூடிப் பேசி, விவாதித்து நாட்டின் முன்னேற்றத்துக்கான சட்டங்களை இயற்றும் தலம். இந்த விவாதங்கள் நாட்டின் வளர்ச்சிக்கு முக்கியமானவை என்பதால் சட்டசபை உறுப்பினர்களுக்குச் சட்டமன்றத்துக்குள் எதையும் பேசுவதற்கு விசேஷ உரிமை உண்டு. எனினும் அதை கண்ணியத்துடன் பயன்படுத்துவார்கள் என்றுதான் நமது அரசியல் சாசனத்தை உருவாக்கியவர்கள் கருதினார்கள். முஷ்டியை மடக்கி, சக உறுப்பினரை மூக்கில் குத்திக் காயப்படுத்தும் உரிமை நிச்சயமாக எந்த சட்டசபை உறுப்பினருக்கும் கிடையாது.

அவையின் சுதந்தர இயக்கம் எவ்வளவுக்கெவ்வளவு முக்கியமோ, அதன் கண்ணியமும் கௌரவமும் காக்கப்படுவதும் அவ்வளவுக்கவ்வளவு முக்கியம். அதனால்தான் அக் கௌரவத்தை பாதிக்கும் வகையில் பேசுகிற, நடந்து கொள்கிற எவரையும் அழைத்துக் கண்டிக்கும் உரிமை அவைத் தலைவருக்கு வழங்கப்பட்டிருக்கிறது. அவைக்குள்ளேயே அதன் கௌரவத்துக்கு இழுக்கு விளைவிக்கக் கூடிய எவரையும் உரிய முறையில் தண்டிக்கும் சிறப்புரிமையும் அவைத் தலைவருக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

பிரிட்டிஷ் பாராளுமன்ற ஜனநாயகமே நம் நாட்டு ஜனநாயக அமைப்பிற்கு முன்னோடி. அந்நாட்டின் ஜனநாயக மரபு, அவை உறுப்பினரின் குற்றத்துக்குத் தண்டனை வழங்கும் அதி




காரத்தை அவைத் தலைவருக்கு வழங்கியிருக்கிறது. அவர் விரும்பினால் அக்குற்றத்தை நீதித் துறை விசாரணைக்கு உட்படுத்தலாம் என்றும் அனுமதிக்கிறது.

வீரபாண்டி ஆறுமுகத்தைத் தாக்கி, மூக்கில் குத்திய தாமரைக்கனிக்கு பி.டி.ஆர். பழனிவேல் ராஜன் பதினைந்து நாள் சிறைத் தண்டனை ஆணையிட்டது இந்தச் சிறப்புரிமையின் அடிப்படையில்தான்.

இந்த ஆணையை எதிர்த்து உயர்நீதி மன்றத்தில் ஹேபியஸ் கார்பஸ் மனு போடப்பட, தாமரைக்கனியைச் சிறைவைக்கும் உத்தரவின் பேரில் இடைக்காலத்தடை விதித்து விட்டது நீதிமன்றம்! ஒரு நடைமுறை விதி மீறப்பட்டதால் விதிக்கப்பட்ட இடைக்காலத் தடை இது.

சட்டசபையும் நீதித்துறையும் சுய அதிகாரத்துடன் இயங்குபவைதான். அவற்றை அரசியல் சாசனப்படி அவ்வாறு பிரித்து சுதந்தர அமைப்புகளாக்கியதே நாட்டின் நலன் கருதித்தான்; ஜனநாயகம் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதற்காகத்தான்.

இதை மனத்தில் கொண்டு, 'சட்டசபையின் நடவடிக்கைகளில் மிகமிக அவசியமானாலொழிய தலையிட இந்த நீதிமன்றம் விரும்பவில்லை' என உயர்நீதிமன்றம் ஒதுங்கிக் கொண்டிருக்கலாம்.

ஆனால், மிகக் கேவலமான ஒரு நிகழ்ச்சியின் விளைவாக இவ்விரண்டு அமைப்புகளிடையே மோதல் விளைய நீதிமன்றம் அனுமதித்து விட்டது.

அவைத் தலைவர் ஆணையை நீதி மன்றம் இடைக்காலத் தடையால் நிறுத்திவைக்க, கைதான தாமரைக்கனி விடுவிக்கப்படுகிறார். மறுநாள் மீண்டும் அவைத் தலைவர் கைதாணை பிறப்பிக்கிறார்; மீண்டும் நீதிமன்றம் தாமரைக்கனியை ஜாமீனில் வெளியிடும்படி உத்தரவு பிறப்பிக்கிறது.

பார்க்கப்போனால், 'சட்ட மன்றங்களில் உறுப்பினர்களின் அத்துமீறல்களைக் கட்டுப்படுத்தும் அளவுக்கு அவைத் தலைவர்கள் தங்கள் அதிகாரங்களைப் பயன்படுத்தாமல் விட்டுக் கொடுக்கிறார்கள்; தேவையின்றிக் கருணை காட்டுகிறார்கள்' என்ற பரவலான குற்றச்சாட்டு நீண்ட காலமாகவே இருந்து வருகிறது. ஆனால் அவைத் தலைவர் நியாய உணர்வோடு சற்று கடுமையாக நடந்து கொண்டாலோ, நீதிமன்றம் குறுக்கிடுகிறது.

இந்த நாடகத்தின் மூலம் அதிகமான ஆதாயம் பெற்றிருப்பவர் ஊரறிந்த வன்முறையாளரான




தாமரைக்கனிதான்! சட்டசபை சாட்சியாக அமைச்சரை மூக்கில் குத்தியவருக்கு ஆதரவாக நீதிமன்ற இடைக்காலத் தடை கிடைத்திருப்பது அவரைக் கொக்கரிக்க வைக்கும். அவை நட வடிக்கைகளினூடே மேலும் மேலும் அநாகரிகங்கள் பெருகுவதற்கு வழி வகுக்கும். அவற்றை நிகழ்த்த தாமரைக்கனி போன்றோருக்கு மேலும் துணிவு தரும்.

'நீதிமன்ற ஆணை அவைத்தலைவரின் முகத்தில் விழுந்த அறை!' என்று ஜெயலலிதா உடன டியாக அறிக்கை விட்டாயிற்று. இத்தகைய அகந்தை மிகுந்த அறிக்கைகளுக்கும் தாமரைக் கனியின் கண்ணியமற்ற நடத்தைக்கும் அதிக வித்தியாசமில்லை.

நீதிமன்றத்தில் ஹேபியஸ் கார்பஸ் மனு போட்டது யார் என்பதும் ஆராய்ச்சிக்கு உரியது.

'அவைத் தலைவர் தமது உரிமைகளின் எல்லைகளை மீறியிருக்கிறார்' என்ற கவலையில் பொதுநல அமைப்போ, அரசியல் சாசன வல்லுனர்களோ பதறிப் போய்த் தொடுத்த மனு அல்ல அது. 'விசாரணையின்றி ஒருவரைச் சிறைவைப்பதா?' என்று தார்மிகக் கேள்வி எழுப்பி மனித உரிமை கமிஷன் போட்ட மனுவும் அல்ல. தாமரைக்கனி என்ற அ.தி.மு.க. கட்சிக்காரருக்கு வக்காலத்து வாங்க ஓ.எஸ்.மணியன் என்ற மாநிலங்கள் அவை அ.தி.மு.க. உறுப்பினர் போட்ட அவசர மனு. அவையின் கௌரவம், ஜனநாயகத்தின் மாண்பு போன்ற உயர்நோக்குகளை உதறிவிட்டு வெறும் கட்சிக் கண்ணோட்டத்துடன் எடுக்கப்பட்டிருக்கும் சட்ட நடவடிக்கை!

இந்த நடவடிக்கை ஒரு சட்டச் சிக்கலை உருவாக்கி நாட்டையே கலக்குவதற்கு நீதிமன்றம் அனுமதித்திருக்க வேண்டாம். 'நீதித்துறையுடன் மோத விரும்பவில்லை' என்று கூறும் முதல்வரும் அவைத் தலைவரும் தாமரைக்கனி கைதுக்கான மறு ஆணை பிறப்பிக்கப்படுவதைத் தவிர்த் திருக்கலாம். ஜாமீனில் அவர் விடுவிக்கப்பட வேண்டும் என்று நீதிமன்றம் அறிவித்த பிறகு இனியும் மோதலை வளர்க்க வேண்டாம் என முதல்வரும் அவைத் தலைவரும் முடிவுக்கு வந்துள்ளனர். நீதிமன்றத்தின் இறுதித் தீர்ப்புக்குக் காத்திருக்க அவர்கள் எடுத்துள்ள முடிவு வரவேற்கத்தக்கது.

# "ஐயோ! தேர்தல்"

## பஞ்சாயத்துத் தேர்தலைக் கண்டு பயப்படும் மூன்று கிராமங்கள்!

**1996 டிசம்பரில் தமிழகத்தில் உள்ள ஆயிரக்கணக்கான ஊராட்சி மன்றங்களுக்குத் தேர்தல் நடந்தது. அதன் பிறகு ஐந்து முறை காலி யிடங்களுக்கான இடைத் தேர்தலும் நடந்தது. ஆனால், இன்னமும் மூன்றே மூன்று ஊராட்சிகளில் மட்டும் இந்த 'ஜனநாயகக் காற்று' இதுவரை வீசவில்லை என்று கேள்விப்பட்ட போது ஆச்சர்யமாக இருந்தது. மதுரை மாவட்டத்தி லுள்ள அந்த கிராமங் களுக்கு நேரடியாகவே சென்று பார்த் தோம்.**

மதுரை-தேனி சாலையில் வாலாத் தூர் அருகில் இருக் கிறது பாப்பாபட்டி.



• பாப்பாபட்டி கிராமம்

1500 பேர் வசிக்கும் இந்த ஊராட்சியில் பேயம் பட்டி, பகாத்தேவன் பட்டி, கரையான்பட்டி ஆகிய கிராமங்களும் அடக்கம். மேல் நிலைப் பள்ளி கூட இருக்கிறது. பார்வர்டு பிளாக் கட்சி யின் தலைவர் மூக்கையா தேவருக்கு இதுதான் சொந்த ஊர். ஊராட்சி மக்கள் தொகையில் எழு பத்தைந்து சதத்திற்கு மேற்பட்டோர் தேவர் பிரிவினராக இருக்க, சிறு பான்மையினராக இருக் கும் தலித் இனத்தாருக்கு பஞ்சாயத்து தலைவர் பதவி ஒதுக்கப்பட்டது தான் தேர் தல் நடக்காததற்குக் காரணம்!

நாம் சென்ற சமயம், கிராமத்தின் மத்தி யில் உள்ள தேவர் மண்டபத்தில் மக்கள் தூர்தர்ஷனில் ராமாயணம் பார்த் துக் கொண்டிருந்தனர். ம

ஆற்றிக் கொண்டிருந்த மூக்கத்துரை எந்தவித தயக்கமுமின்றி தேர்தல் நடக்காததன் காரணத்தைச் சொன் னார்:

"நாங்களும் அவுங்களும் தாயா பிள்ளையா பழகிக்கிட்டு இருக்கோ முங்க. எங்க ஜனம் தாங்க அதிகம். அப்பிடியிருக்க 'அவுங்களுக்கு' தலைவர் பொறுப்புன்னு சொல்



• ஒச்சம்மா



• சக்கையா

விட்டாங்க... எங்களுக்கு வருத்தம் இல்லீங்க. ஆனா அவுங்கதான் தேர்தல்ல நிக்க மாட்டோம்னு சொல்லிட்டாங்க" என்கிறார்.

பழைய பஞ்சாயத்துத் தலைவர் சின்ன ஒச்சாத்தேவர் "உசிலம்பட்டி வட்டாரத்துலே ஜாதிக் கலவரமே கிடையாதுங்க. நம்ம கிராமம் தேவமார்க்கு பெரிய கிராமமுங்க. தாழ்த்தப்பட்டவங்களுக்குத்தான் தலைவர் பதவி என்று சொல்லி அரசாங்கம் தான் எங்களைப் பிரிக்கிறாங்க. எங்களை வைச்சு அவுங்க பொழைக்கறாங்க. அந்த நன்றிக் கடன் காரணமாக தலைவர் பதவிக்குப் போட்டி போட மாட்டேன்ங்கறாங்க.'' என்றார் ஒச்சாத் தேவர். பஞ்சாயத்து தேர்தல் நடக்காவிட்டாலும், கிராமத்துத் தேவை களுக்கு யூனியன் சேர்மனும், எம்.எல்.ஏவும் மிகவும் உதவுகிறார்கள் என்கிறார்.

"அவுங்க சொல்றது சரிதாங்க. அவுங்க நிலத்துலதாங்க வேலை செய்யறோம். மழை பெய்யாவிட்டால் அவுங்க வீட்டுல வாங்கி தாங்க



• மூக்கத் துரை

• காசி மாயன்

# வேண்டாங்கய்யா!''



• கணேசன்



• கருப்பையா

வவுத்தை ரொப்பணும். தேர்தலே வேண்டா முங்க. நாங்க இப்படியே இருந்துட்டுப் போறோமுங்க. மாமனா மச்சானா பழகிட் டோங்க. வருத்தம், விரோதம் எல்லாம் எதுக் குங்க?" என்கிறார் தங்கராக என்கிற தலித் இளைஞர். இந்த கிராமத்தில் உள்ள தாழ்த்தப் பட்டவர்களுக்குச் சொந்தமாக நிலம் கிடையாது.

பேசும் போது குறுக்கே பேசப் புகுந்த ஒச்சம்மாவுக்குக் கொஞ்சம் எதிர்ப்பு இருந் தாலும், தைரியமாகத் தனது கருத்தைச் சொன் னார் அவர்.

"மத்தவங்க பெரும்பான்மையாக இருப்ப தால் தலைவர் பதவியை 'மாத்திப் போடுங்க' என்று பலமுறை கேட்டும் ஒண்ணும் பிரயோஜனமில்லீங்க. இதை மாத்தாத வரையில் எங்க ஊரில் தேர்தல் கிடையாதுங்க" என்கிறார். "தேர்தல் வந்தா ஊர் ஒற்றுமை கெட்டுப் போயிடுங்க... எங்க ளுக்கு இந்த ஊர்ல எந்தப் பிரச்னையுமில்லை. அதாங்க கலெக்டர் ஐயா கிட்டே 'நாங்க தேர்தல்ல நிக்க மாட்டோம்'ன்னு எழுதிக் கொடுத்துட்டோம்" என்கிறார் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த அழகப்பன். நல்லது, கெட்டது என்று வரும் செய்திகளை நாலு ஊருக்குச் சொல்லும் வேலை இவருடையது.

ஒவ்வொரு முறையும் தேர்தல் அறிவிப்பு வந்தவுடன் செல்லம்பட்டி யூனியன் அலுவல கத்தில் யாராவது மனு தாக்கல் செய்ய வரு வார்கள் என்று அதிகாரிகள் எதிர்பார்ப்பதும் ஏமாறுவதுமாக இருக்கிறது. "அந்த சமயத்தில் கிராமத்தில் கண்ணுக்குப் புலப்படாத பயமும், சந்தேகமும் மக்களிடையே இருப்பது தவிர்க்க முடியாதபடி இருக்கிறது" என்று நம்மிடையே சொன்னார் கிராமத்து இளைஞர் ஒருவர்.

இதே உசிலம்பட்டி வட்டாரத்தில் உள்ள மற்றொரு கிராமம் கிரிப்பட்டி. இங்கே யும் பாப்பாப்பட்டி போலவே ஊராட்சித் தேர்தல் நடக்கவில்லை. காரணமும் அதே

தான். கீரிப்பட்டி செல்லும் வழியில் காசி மாயனைச் சந்தித்தோம். பஸ்ஸுக்காக காத்திருந்தவரை மடக்கி, தேர்தல் நடக்காதது பற்றிக் கேட்டோம். தேவர் இன மக்களுக்குச் சொந்தமான பெரியாங்கருப்பு கோயில் பூசாரியான மாயன் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்.

"இந்த வட்டாரத்திலே இங்கிருப்பது போல ஹரிஜன் – தேவர் ஒற்றுமையை வேற எங்கியும் பார்க்க முடியாதுங்க. ஒச்சாண்டம்மன் கோயில் திருவிழாவில் 'நம்ம' அன்னம் மாபட்டி ஆளுங்க கொட்டடிச்சாத்தாங்க சாமி புறப்பாடு. அவுங்களுக்கு தனி மரியாதை உண்டுங்க. ஒண்ணுக்குள்ள ஒண்ணா இருக்கோங்க. தேர்தல் வந்தா பொல்லாப்பு, பொறாமை எல்லாம் வந்து சேருங்க. இங்க அமைதி



• ஒச்சாத் தேவர்



• ராஜு தேவர்

கெட்டுப் போகுமுங்க" என்கிறார் மாயன்.

கீரிப்பட்டி கிராம ஊர்ச்சாவடியில் நாம் சந்தித்த ராஜு தேவர், "இங்க எந்த ஜாதிப் பிரச்னையும் இடையாது. காலனி ஆட்களுக்கு தலைவர் பதவி ஒதுக்கியிருப்பதாலே எங்களுக்கு வருத்தம் கொஞ்சம் கூட இல்லீங்க. என்ன பிரச்னை என்றால், காலனி ஆட்களை விட மத்தவங்க தாங்க அதிகமாக இருக்கோம். அப்படியிருக்க, தாழ்த்தப்பட்டவங்களுக்கு தலைவர் பதவியை ஏன் ஒதுக்கினாங்க என்றுதாங்க புரியவில்லை. அவுங்க தேர்தல்ல நிக்கறதையும் நாங்க தடுக்கலை" என்கிறார்.

கீரிப்பட்டி கிராமத் தெருக்களில் கட்சிக் கொடிகள் எதுவும் கட்டக் கூடாதாம். "உங்கள் ஊரில் பஞ்சாயத்து உறுப்பினர்கள், தலைவர்கள் இருந்தால்தானே, கிராமத் தேவைகளை அவர்களிடம் சொல்லி நிறைவேற்றலாம்" என்றபோது ராஜு தேவர் "அடப் போங்க.... லைட் எரியாவிட்டால் லைன் மேனிடம் சொன்னால் போட்டு விட்டுப் போகிறார். மத்ததுக்கு யூனியன் ஆபீஸ் இருக்குதுங்க. மத்த கிராமத்துக்கு வரும் எல்லா வசதியும் நமக்கும் வருமுங்க" என்கிறார்.

**ம**துரை, விருதுநகர் சாலையில் கள்ளிகுடியிலிருந்து மிகவும் உள்ளே தள்ளி உள்ளது மருதங்குடி. 1991ம் ஆண்டு கணக்கெடுப்புப் படி கிராமத்து மக்கள் தொகை 1226. இதில் தாழ்த்தப்பட்டவர்கள் 355 பேர். மீதி மற்ற வகுப்பினர். பெரும்பாலும் தேவர் இன அகமுடையார் பிரிவைச் சேர்ந்தவர்கள்.

"நம்ம கிராமம் 48 கிராமத்துல தலை கிராமமுங்க. நமக்குள்ளே ஒரு சண்டை சச்சரவு இடையாதுங்க. தலைவர் பதவிக்கு தாழ்த்தப்பட்டவங்களைத்தான் போடணும்னு சொல்லிட்டாங்க.. நாங்க விட்டுக் கொடுக்கறோங்க. அவுங்க நின்னுக்கட்டும்னுதாங்க சொல்றோம். அவுங்க தாங்க... வேணாங்கறாங்க" என்கிறார் சக்கையா.

தி.மு.க.வைச் சேர்ந்த கூட்டுறவு பால் பண்ணைத் தலைவர் முருகேசன், "ஊரே சேர்ந்து கலெக்டர் ஐயா கிட்டே மனு கொடுத்தோங்க. ஒதுக்கீட்டு முறையை மாத்துங்கன்னோம். முடியாதுன்னுட்டாங்க. ஆனா வருத்தம் இல்லீங்க. அவுங்கதாங்க நிக்க மாட்டேங்கிறாங்க..." என்கிறார். எந்தவித பாரபட்சமும் இல்லாமல் ஐ.ஆர்.டி.பி. லோனுக்குத் தாம் சிபாரிசு செய்வதாகவும் சொன்னார் முருகேசன். மருதங்குடி கிராமத்தில் ஐந்தாவது வரை பள்ளியும், ஆரம்ப சுகாதார நிலையமும் இருக்கின்றன.



• முருகேசன்



• தங்கராசு

"அவுங்களுக்கு கிராமத்திலே செய்யற எல்லா கடமையும் செய்யறாங்க. மடையை அடைக்கணும்னா அவுங்கதாங்க செய்யணும். அதற்கு ஐந்து 'அரி' நெல் கொடுத்துடுவோங்க. எதிலேயும் விட்டுக் கொடுக்கிறதில்லீங்க" என்கிறார் முருகேசன்.

**ஊர்** காலனியில் குடிசை வாசலில் உட்கார்ந்து வேர்க்கடலை உடைத்து சாப்

பிட்டுக் கொண்டிருந்தார் கணேசன் என்ற இளைஞர். காலனிவாசிகள் வாயை திறப்பதற்கு யோசிக்கவே மருதங்குடிக்கு மாமனார் வீட்டுக்கு வந்திருந்த கணேசனை உள்ளூர் விவகாரம் பற்றிக் கேட்டோம். பி.ஏ. முடித்து விட்டு வேலை தேடிக் கொண்டிருக்கிறார் கணேசன்.

"இங்கே இரண்டு வகுப்பாரும் ஒருவர் மீது ஒருவர் உள்ள அன்பு காரணமாக, 'தேர்தல் வேண்டாம்' என்று கலெக்டருக்கு எழுதிக் கொடுத்ததாகச் சொல்லியிருப்பார்களே... உண்மையைச் சொல்ல வேண்டுமானால் 1996ல் முதல் முதலாக தேர்தல் அறிவிக்கப் பட்டபோது நடந்ததைப் பற்றி நீங்கள் எழுத வேண்டும்.

"கள்ளிக்குடி யூனியன் ஆபீஸில் வேல், கம்புகளோடு ஆட்கள் நின்று கொண்டு யாரும் மனு தாக்கல் செய்யாதவாறு பார்த்துக் கொண்டார்கள். அதையெல்லாம் தாண்டி மனுதாக்கல் செய்யப் போன மருதுபாண்டி என்பவர், ஓட ஓட விரட்டப்பட்டு தாக்கப் பட்டார். வழக்கு கூட இருக்கிறது. இப்படிப் பட்ட நிலையில் யார் போட்டியிட வருவார்கள்? எனவே அன்பு என்பதைவிட, ஒரு பயம் காரணமாகத்தான் 'தேர்தலே வேண்டாம்' என்கிறார்கள். பிழைப்பே கெட்டுவிடும் என்ற பயம்" என்றார்.

**மா**வட்ட ஆட்சித் தலைவர் காசி விஸ்வநாதனை அவரது இல்லத்தில் சந்தித் தோம்.

"பாப்பாபட்டி, கீரிப்பட்டி, மருதங்குடி இந்த மூன்று கிராமங்களிலும் ஊராட்சித் தேர்தல் நடக்கவில்லையே என்று எனக்கும் வருத்தமாகத்தான் இருக்கிறது. இதுவரை சுமார் ஐம்பது முறைகளுக்கு மேல் அந்த கிராமங்களுக்கு விஸிட் செய்து மக்களிடம் பேசியிருக்கிறேன். மதுரைக்கே எல்லோரையும் அழைத்து பேச்சு வார்த்தையும் நடத்தியிருக்கேன். பாப்பாபட்டி, கீரிப்பட்டி ஆகிய கிராமங்களில் இரண்டு வகுப்பினரும் மிகவும் அன்பாகவும், நெருக்கமாகவும் வாழ்ந்து வருகிறார்கள். தேர்தல் அமைதியைக் கெடுத்து விடுமோ என்று பயந்து 'வேண்டவே வேண்டாம்' என்கிறார்கள். மருதங்குடியைப் பொறுத்தமட்டில் இடையில் ஒருமுறை தேர்தல் நடந்து விடும் போல இருந்தது. என்னிடம் 'போட்டியிடுகிறோம்' என்று சொல்லிவிட்டுப் போன தலித் வகுப்பினர் மறுநாள் வந்து "போட்டி யிடவில்லை" என்று எழுதிக் கொடுத்த போது அதிர்ச்சியாக இருந்தது. ஆனால் யார் போட்டியிட முன் வந்தாலும் அவர்களுக்கு அதிகபட்ச பாதுகாப்பு கொடுத்து தேர்தலை நடத்தி முடிப்பது எங்கள் கடமை.

"இந்த மூன்று கிராமங்களிலும் தலித்துகளை விட மற்றவர்கள் பெரும்பான் மையாக



• காசி விஸ்வநாதன்

இருந்தாலும் தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தலைவர் பொறுப்பை ஒதுக்கிய தால்தானே இந்த நிலை என்று பலர் வியப்போடு கேட்கிறார்கள். மதுரை மாவட்டத்தில் மொத்தம் 431 கிராமங்கள் இருக்கின்றன. இதில் 20 சதவீத ஊராட்சிகளின் தலைவர் பொறுப்பு தலித்துகளுக்கு ஒதுக்கியே தீர வேண்டும் என்பது விதி. அதன்படி பார்த்தால் 86 கிராமங்களில் அவர்கள் தலைவர்களாக வர வேண்டும். தலித்துகள் பெரும்பான்மையாக உள்ள கிராமங்களில் துவங்கி ஒதுக்கிக் கொண்டே வரும்போது, தேவையான ஒதுக்கீட்டை நிறைவு செய்யும் வகையில் இது போன்று தலித்துகள் மைனாரிட்டிகளாக உள்ள கிராமங்களையும் cut off முறையில் சேர்த்தால்தான் 86 ஊராட்சிகளை ஒதுக்க முடியும். இது மக்கள் தொகையின் அடிப்படையில் கம்ப்யூட்டரில் கணக்கிட்டு ஒதுக்கியது. யாரும் மாற்ற முடியாது. இதுதான் யதார்த்த நிலை. தலித்துகள் மைனாரிட்டிகளாக உள்ள வேறு சில கிராமங்களில், சிறு சிறு பிரச்னைகள் இருந்தாலும், அவை தீர்க்கப்பட்டு தேர்தல் நடத்தி வைக்கப்பட்டுள்ளது. அது போலவே இந்த மூன்று கிராமங்களிலும் தேர்தலை நடத்தி முடிக்க என்னால் இயன்ற அனைத்து முயற்சிகளையும் செய்வேன்" என்றார் கலெக்டர்.

**— ப்ரியன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**



• மேடையில் வாஜ்பாய்

**திருச்சி மாநகர மக்களின் மனசுக்குள் மண்டிக் கிடந்த திகிலுடனும், கட்சித் தொண்டர்களின் ஆர்வம் பொங்கிய பரபரப்புடனும் பா.ஜ.கவின் நான்காவது மாநில மாநாட்டு நிகழ்ச்சிகள் நடந்து முடிந்திருக்கின்றன. அசம்பாவிதம் ஏதும் இல்லாதது பெரிய ஆறுதல்!**

● மாநாட்டுப் பந்தலுக்குள் செல்ல வேண்டிய கட்சித் தொண்டர்கள் ஒவ்வொருவரும் ஐம்பது ரூபாய் செலுத்தி (இரண்டு நாள் உணவு) பெயர், ஊர், மாவட்ட விவரம் எழுதிய அடையாள அட்டையைப் பெற்றுக் கொண்டு வரிசையில் நின்றனர். ஆண்களுக்கு ஆண் காவலரும், பெண்களுக்குப் பெண் காவலரும் 'தடவிப்பார்த்து' சோதனையிட்டனர். சோதனை முடிந்து மெல்ல ஊர்ந்து குறுகிய வாயிலை நெருங்கினால் இன்னொரு மெட்டல் டிடெக்டர் சோதனை. அறுபது வயது கட்சித் தொண்டர் ஒருவரின் மார்புப் பகுதியில் சோதனைக் கருவி சந்தேக ஒலி எழுப்ப, "என்ன... பாக்கெட்ல?"

அவர் தமது சட்டைப் பைக்குள் கைவிட்டு உள்ளங்கை நெல்லிக்கனியாய் வெளிக்காட்ட, சுற்றி நின்ற காவலர்களுக்கு ஏக வியப்பு. அவர் கண்டக்டர்கள் பொறாமை கொள்ளும் அளவுக்குச் சில்லறை வைத்திருந்தார்!

● இளைஞர் அணி மாநாட்டைத் துவக்கி வைத்துப் பேசிய இல. கணேசன் 'ராக்போர்ட்டில் (திருச்சி) இருந்து போர்ட் செயின்ட் ஜார்ஜ் (ஆட்சி அதிகாரம்) செல்ல இப்பொழுதே இளைஞர்கள் தயாராக வேண்டும். 2001ல் அமையும் மாநில அரசில் பாரதிய ஜனதா முக்கிய இடம் வகிக்கும்' என்றார். (யாரும் சிரிக்கவில்லை.)

●. விளாத்திகுளத்திலிருந்து வந்திருந்த சுப்பையா(44) 'கட்சி கிராமப்புறங்களில் வளர்ந்திருக்கிறது' என்றார். தி.மு.க., கம்யூனிஸ்ட் குடும்பங்களில் உள்ள இளைஞர்கள் சிலர் பா.ஜ.கவில் பொறுப்புக்கு வந்திருப்பதாகக் கூறினார்.

● மாநாடு நடைபெறும் இடமும், திருச்சி மாநகரமும் வானில் தாழ்வாக வட்டமடித்துப் பறந்து கொண்டிருந்த ஹெலிகாப்டரால் 'கவனிக்கப்பட்டுக் கொண்டே' இருந்தது. மாநாட்டுப் பணிக்காக மாநகர் முழுவதும் எட்டாயிரம் போலீஸார். அத்துடன் உளவுத் துறையினர், அதிரடிப்படை வீரர்கள், விசேஷ பாதுகாப்புப் படையினர். கெடுபிடியில் மக்கள் வீட்டைவிட்டு வெளியே வரவே அஞ்சினர்.

● நாற்பதுக்கும் மேற்பட்ட கட்-அவுட்டுகள். சாலைகளில் மின் அலங்கார வளைவுகள். காவிரி ஆற்றுப் பாலத்திலிருந்து காஜாமலை அண்ணா ஸ்டேடியம் மாநாட்டுப் பந்தல்- கல்லுக்குழி ரயில்வே மைதானம் வரை ட்யூப் லைட்டுகள். "என்ன இருந்தாலும் அம்மா கூட்டணி இல்லையா?" என்று கமென்ட் அடித்தார் ஓர் இளைஞர்.

● சனிக்கிழமை இரவு பதினொரு மணிக்கு திருச்சி மண்ணில் கால் பதித்தார் பிரதமர் வாஜ்பாய். அறிவிக்கப்படாத எமர்ஜென்ஸியை அனுஷ்டிக்கப் போவது போல் நிசப்த நகரமாக ஆகிவிட்டது திருச்சி!

● ஞாயிறு ஏழுமணிக்கெல்லாம் பேரணி புறப்படும் இடமான சிந்தாமணி காமராசர் சிலைக்கருகே ம.தி.மு.க. கொடியுடன்

இரண்டு பேர் நின்று கொண்டிருந்தார்கள். மதுரைக்காரர்கள். 'வைகோ வருகிறார். அதனால் வருகிறோம்' என்றார்கள். உள்ளூர் ம.தி.மு.க.வினர் ஆங்கிலத்தில் 'வெல்கம்' போஸ்டர் பெரிய சைஸில் அடித்து ஒட்டியிருந்



• பேரணியில்...

தார்கள். சின்ன சைஸ் போஸ்டர்களில் தமிழக ராஜீவ் காங்கிரசின் வாழப்பாடி சிரித்துக் கொண்டிருந்தார். துணி பேனர்களில் வரவேற்பு வாசகம் எழுதி தொங்க விட்டிருந்தனர் பா.ம.க.வினர். நகரில் அ.தி.மு.க. ஆசாமி ஒருத்தர் கூட இல்லை போல, அப்படியொரு 'விரதம்' காத்தார்கள்.

● இரண்டாம் நாள்

• கட்-அவுட் புரட்சி!



நிகழ்ச்சியில் கட்சியின் பிரதிநிதிகள் மாநாட்டில் கலந்து கொண்டு பேசிய பிரதமர் வாஜ்பாய், 'தமிழகத்திலிருந்து நமது கட்சிக்கு இன்னும் அதிக அளவில் பாராளுமன்ற உறுப்பினர்களை அனுப்பி வைப்பதற்கு இப்பொழுதே பணிபுரிய ஆரம்பியுங்கள்' என்றார்.

● பேரணியை வேடிக்கைப் பார்ப்பதற்காக வந்திருந்த எம்.சி.ஏ. படிக்கும் கே. ஸ்ரீதர் என்பவர் "பிரதமர் வருகிறார் என்றதும் ரோடெல்லாம் புதுசா சுத்தமாப் போட்டாங்க. மறுநாள் பார்த்தா கட்-அவுட், அலங்கார வளைவுன்னு ரோடெல்லாம் குழிதோண்டி சவுக்கு குச்சி நட்டு வெச்சிட்டாங்க... மாநாடு முடிஞ்ச கையோட ரீமூவ் பண்ணும்போது ரோட்டு நடுவுல இருக்கிற குழியெல்லாம் மூடிட்டாங்கன்னா நல்லா இருக்கும்' என்றார்.

● இரவு 7.30 மணிக்கு பொதுக் கூட்டம்.

# அடுத்த ஆட்சி அவங்களோடதாம்!

மேடையில் வாழப்பாடி ராமமூர்த்தி, டாக்டர் இராமதாஸ், வைகோ, ஜார்ஜ் பெர்னாண்டஸ், பா.ஜ.கவின் அகில இந்திய, மாநிலத் தலைவர்கள், நட்ட நடு நாயகமாய் வாஜ்பாய். பேசிய பி.ஜே.பியின் தமிழகத் தலைவர்கள் அனைவரும், '2001ல் தமிழகத்தில் பி.ஜே.பி அரசு அமைக்கும்' என்று பேசினார்கள்.

நிலைமையின் தீவிரத்தை ஓரளவு புரிந்து கொண்ட பிரதமர் தமது இறுதி உரையில், 'கூட்டணிக் கட்சிகளுடன் உள்ள ஒற்றுமையை பலப்படுத்துங்கள். பாராளுமன்றத் தேர்தலில் தமிழகத்திலிருந்து அதிக இடங்களை நமது கட்சிக்குப் பெற்றுத் தாருங்கள். மாநில சட்டமன்றத் தேர்தலில் நமது கூட்டணியை அதிக இடங்களில் வெற்றி பெறச் செய்து 'பஞ்சாப்' போல நமது கட்சி மாநில அரசில் அங்கம் வகிக்க இப்போது இருந்தே செயல்படுங்கள்' என்று கூறி முத்தாய்ப்பு வைத்தார்.

● "இன்னேரம் எங்கம்மாவை மேடையில வெச்சிகிட்டு 2001ல் பா.ஜ.க. ஆட்சியைப் புடிக்கும்னு யாராவது பேசி இருப்பாங்களா சார்... இவங்கதான் மாநில அரசை அமைக்கப் போற முக்கிய சக்தியா இருக்கும்னு சொல்லி இருப்பாங்களா சார்?"- அத்தனை பெரும் கூட்டத்திலும் தேடுபாடாய்க் கிடைத்த அ.தி.மு.க. தொண்டர் ஒருவர் நம்மிடம் பொரிந்து தள்ளி விட்டார்.

—ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு
படங்கள்: சௌந்தர்ராஜன்

(சினிமாக்காரர்கள் அவசியம்

# அம்மாவை வாழவைத்த பிள்ளை!

**வ**ரதராஜுலு திருச்சி மன்னார்புரம் வாசி. சாதாரண மத்திய தரக் குடும்பம். மூன்று பெண்கள்; ஒரே பையன் - ராதாகிருஷ்ணன். மனைவி ஜோதி ராணிக்கு நாலைந்து வருடங்களாகவே உடல்நிலை சரியில்லாமல், தஞ்சாவூர் மருத்துவக் கல்லூரி மருத்துவமனையில் வைத்தியம் பார்த்துக் கொண்டிருந்தார். கடந்த ஜூலையில்தான் ஜோதிராணியின் சிறுநீரகங்கள் இரண்டுமே பழுதாகிவிட்டதைக் கண்டுபிடித்தார்கள். சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சை ஒன்றுதான் வழி என்று திருச்சியில் டாக்டர்கள் கூறி விட்டார்கள்! மகனின் சிறுநீரகங்களில் ஒன்றை அம்மாவுக்குப் பொருத்துவதுதான் எளிது என்று கூறி, சென்னை ராமச்சந்திரா மருத்துவக்கல்லூரி மருத்துவமனைக்குக் கொண்டு போக யோசனையும் சொன்னார்கள். மகனின் சம்மதத்துடன் மாற்று அறுவைச் சிகிச்சை செய்து விடலாம் என்றார்கள்.



• ராதாகிருஷ்ணன்

இது முறையானதுதான் என்று மருத்துவக் குழு கூடித் தீர்மானம் எடுக்க வேண்டும். எனவே சென்னை மருத்துவக் கல்லூரி பொதுமருத்துவமனையில் கமிட்டி கூடியது. மகன் ராதாகிருஷ்ணனைப் பரிசோதித்தது. தங்களது முடிவாக, ஒரு குண்டைத் தூக்கிப் போட்டது.

ராதாகிருஷ்ணன் மனவளர்ச்சி குன்றியவர். மெண்ட்டலி ரிடார்டட். எனவே அவர் கொடுக்கும் ஒப்புதல், ஏற்கக் கூடியது அல்ல என்றது!

பார்த்தார் வரதராஜுலு. கிட்னி டோனர்கள் என்று தனியார் யாராவது கிடைப்பார்களா என்று வலை விசித் தேடினார். ஏமாற்றம்தான் மிஞ்சியது.

மகனின் சிறுநீரகம் தயாராக இருந்தும், எடுத்துப் பொருத்த முடியாத தர்ம சங்கடமான நிலைமையைச் சமாளிக்க, வழக்கறிஞர் ஒருவரிடம் விசாரித்தார். மாவட்ட நீதி மன்றத்தில் ஓர் ஒரிஜினல் பெட்டிஷன் தாக்கல் செய்யச் சொன்னார் அவர். மாவட்ட நீதிபதி, இது செல்லுபடியாகாது என்று பெட்டிஷனை நிராகரித்து விட்டார். திருச்சி வழக்கறிஞர்கள் சிலர், சென்னை உயர்நீதி மன்றத்தில் மனு தாக்கல் செய்யச் சொன்னார்கள்.



• ஜோதிராணி

**இ**ந்தப் பின்னணியில், சென்னை வழக்கறிஞர் கே.ஆர். தியாகராஜனை வரதராஜுலு வந்து சந்தித்தார். எப்படியாவது தமக்கு உதவுமாறு வேண்டி அழுதார்.

"முதலில் நானும் இந்த கேஸை எடுத்துக் கொள்ளத் தயங்கினேன். ஆனால் வரதராஜுலுவின் நிலைமையைப் பார்த்து என் மனசு உருகிவிட்டது. இந்த வழக்கில் ஆஜராகி, போராடி, எப்படியாவது அவர் மனைவிக்கு உதவ வேண்டும் என்ற ஒரு வைராக்கியம் பிறந்தது. மனிதாபிமானம் உள்ள எவரும் இந்தச் சட்டச் சிக்கலைத் தீர்த்து ஜோதி

ராணியைக் காப்பாற்றியே ஆக வேண்டும் என்றுதான் நினைப்பார்கள். மன வளர்ச்சி குன்றிய மகளைப் பார்த்துக் கொள்ள, தாயார் உயிரோடு இருப்பது முக்கியம் என்று புரிந்தது. என் மீது அன்பும் அக்கறையும் உள்ள சக வழக்கறிஞர்கள் சிலரைச் சந்தித்து, அவர்கள் கருத்தை அறிந்து கொள்ள முயன்றேன். சதீஷ் பராசரன், மூத்த வழக்கறிஞர் எம். ராகவன், முன்னாள் உச்ச நீதிமன்ற நீதிபதி ரத்தினவேல் பாண்டியன் எல்லோரும் உற்சாகப்படுத்தினார்கள்'' என்கிறார் வழக்கறிஞர் தியாகராஜன்.

இது ஒரு முயற்சிதான். நீதிமன்றம் சாதகமாகத்தான் தீர்ப்பு வழங்கும் என்று உறுதியாகச் சொல்ல முடியாது. மேலும், கண்டிப்பான நீதிபதி வழக்கை விசாரிக்கும் பட்சத்தில், தீர்ப்பு பாதகமாகப் போய்விடவும் கூடும் என்று தியாகராஜன், வரதராஜுலுவிடம் சொல்லி விட்டார்.

ரிட் மனு தாக்கல் செய்துவிட்டு, கூடவே மகன் ராதாகிருஷ்ணன் தமது சிறுநீரகத்தைத் தாயாருக்கு வழங்க அவன் சம்மதம் கோரப்பட வேண்டும் என்ற உத்தரவையும் (டைரக்ஷன்) தர வேண்டினார் தியாகராஜன்.

நீதிபதி கே. கோவிந்தராஜன் வழக்கை விசாரித்து, இந்த இக்கட்டான விஷயத்தில் ஏதாவது ஒரு முடிவு எடுத்தே ஆக வேண்டும் என்று கருதினார். ஜோதிராணியின் நிலைமை இன்னும் மோசமாகிவிடும் என்பது அவரையும் கவலைப்பட வைத்தது. பிப்ரவரி 25ஆம் தேதி வழக்கு விசாரணைக்கு வந்தபோது, ரிட் மனுவை ஏற்ற நீதிபதி, ராமச்சந்திரா மருத்துவமனை டீனுக்கும், சென்னை மருத்துவக்கல்லூரி டீனுக்கும் ராதாகிருஷ்ணனின் சம்மதத்தைக் கோருமாறு ஆணை பிறப்பித்தார்.

ஆனால் மனவளர்ச்சி குன்றிய மகனின் சம்மதத்தைப் பெறுவது எப்படி? தாயாரை மரணத்தின் பிடியிலிருந்து மீட்கத்தான் அவனது சிறுநீரகம் தேவைப்படுகிறது என்பதை ராதாகிருஷ்ணன் புரிந்து கொள்ளுவானா? டாக்டர் யாராவது இதற்கு உதவ முடிந்தால்தான் சிக்கலைத் தீர்க்க முடியும்.

"இந்த விஷயத்தில் உங்களுக்கு உதவக் கூடிய டாக்டர் யாராவது இருக்கிறார்களா?" என்று நீதிபதி நீதிமன்றத்தில் தியாகராஜனிடம் கேட்டபோது, அவரால் பதில் ஏதும் சொல்ல முடியவில்லை.

நீதிமன்றத்தில் கூடியிருந்த மற்ற வழக்கறிஞர்களிடமும் நீதிபதி இந்தக் கேள்வியை எழுப்பினார்.

அப்போது அங்கே இருந்த வழக்கறிஞர் சந்துரு, தமக்கு டாக்டர் திருநாவுக்கரசு என்ற மனஇயல் நிபுணரைத் தெரியும் என்றும், தியாகராஜன் அவரை அணுகலாம் என்றும் யோசனை தெரிவித்தார்.

நீதிபதி கோவிந்தராஜன் உடனே, டாக்டர் திருநாவுக்கரசிடம் ராதாகிருஷ்ணனை அழைத்துப் போகச் சொல்லி, அவர் முறையாகப் பரிசோதனை செய்து, அவரது ரிப்போர்ட்டைத் தர வேண்டும் என்று ஆணை பிறப்பித்தார். வழக்கை மார்ச் 1ஆம் தேதிக்கு ஒத்தி வைத்தார்.



• கே.ஆர். தியாகராஜன்

அப்போது மாலை மணி 4. உத்தரவின் பிரதியை 5 மணிக்குப் பெற்றுக் கொண்ட தியாகராஜன், ராதாகிருஷ்ணனையும், அவன் தகப்பனார் வரதராஜுலுவையும் அழைத்துக் கொண்டு, டாக்டர் திருநாவுக்கரசுவிடம் போனார்.

“மார்ச் முதல் தேதி அன்று, காலையிலிருந்தே நான் நீதிமன்றத்தில் காத்திருந்தேன். தங்கள் சார்பில் ஆஜராகும்படி ராமச்சந்திரா மருத்துவமனை, வழக்கறிஞர் சதீஷ் பராசரனிடம் கேட்டுக் கொண்டிருப்பதாக அப்போதுதான் எனக்குத் தெரிய வந்தது. ஜோதிராணி டயாலிஸிஸ் செய்து கொண்டு படும் கஷ்டங்களையும், வலியைத் தாங்கிக் கொண்டு படும் துன்பங்களையும் அவரிடம் கூறினேன். இந்த வழக்கில் எப்படியாவது எல்லோரும் ஒத்துழைத்து, ஒரு நல்ல முடிவு காண வேண்டிய அவசியத்தையும் சொன்னேன். வரதராஜுலு தினசரி தம்மைச் சந்தித்துக் கண்ணீர் விட்டு அழுததையும், பொறுமையுடன் காத்திருந்த பிறகு, வழக்கைத் துரிதமாக முடிக்க வேண்டி, அரசியல் சாசனப் பிரிவு 226ன் கீழ், ரிட் அஃப் மாண்டமஸ் ஒன்றைத் தாக்கல் செய்திருப்பதையும் அவரிடம் தெரிவித்தேன்!

''மாலை நான்கு மணிக்கு விசாரணை ஆரம்பித்தது. டாக்டர் சர்ட்டிஃபிகேட்

பேப்பர்ல ஒரு கசங்கல் இருக்கக் கூடாது. மடங்கல் இருக்கக் கூடாது. சுத்தமா 'பளிச்'னு இருக்கணும். எழுதறப்போ ஒரு வார்த்தை தப்பா யிட்டாகூட தனியா எடுத்து வச்சுடுவேன். யாரையும் உட்கார வச்சு டிக்டேட் பண்றதில்லை, டைப்ரட்டரோ, கம்ப்யூட்டரோ பயன்படுத்தற தில்லை. கையால தான் எழுதறேன்.

— இந்துமதி

கொடுத்தாரா என்று கேட்டார் நீதிபதி. உறையில் இட்டு ஒட்டிக் கொடுத்த சர்ட்டிஃபிகேட்டை அப்படியே அவரிடம் கொடுத்தேன்.

''மெண்ட்டல் ரிடார்டேஷன் எனப்படும் மூளை வளர்ச்சி குன்றிய நிலைமையில் பல நிலைகள் இருக்கின்றன. ரொம்பவும் மோசமான ரிட்டார்டேஷன் என்றால் ஒன்றும் செய்ய முடியாது. ஒன்றுமே தெரியாத நிலை, கொஞ்சம் புரிகிற நிலை, சரியாகப் புரிந்து கொள்ளுகிற நிலை என்று பல நிலைகள் உண்டு. நான் விவரமாக விஷயத்தை எடுத்துச் சொன்னவுடன் ராதாகிருஷ்ணன் புரிந்து கொண்டான். அம்மாவும் போய் விட்டால் அப்புறம் யார் பார்த்துக் கொள்ளுவார்கள் என்பதை யோசித்துப் பார்த்திருக்கிறான். 'உனக்குச் சம்மதம் இல்லை என்றால் மருத்துவபோர்டு டிரான்ஸ்பிளான்டேஷனை நிறுத்தி விடும். உனக்கு இரண்டு சிறுநீரகங்கள் இருக்கின்றன. இரண்டில் ஒன்றை எடுத்துத்தான் உன் அம்மாவுக்குப் பொருத்தப் போகிறார்கள். அப்படிச் செய்யவில்லை என்றால் அம்மாவின் உடல்நிலை மோசமாகி விடும். அம்மா போன பிறகு என்ன பண்ணுவாய்?' என்று கேட்டபோது வெகுவாக அழுதான் ராதாகிருஷ்ணன். அம்மா பிழைத்து எழுந்திருக்க வேண்டும் என்றான். அம்மாவுக்குச் சிறுநீரகம் கொடுப்பதில் தனக்கு முழுச் சம்மதம் இருப்பதாகச் சொன்னான். அவன் மனநிலை சரியாகத்தான் இருக்கிறது என்று சான்றிதழ் கொடுக்க முடிந்தது!'' என்றார் டாக்டர் இருநாவுக்கரசு.

டாக்டரின் சான்றிதழைப் படித்துப் பார்த்த நீதிபதி, மனுதாரரின் விருப்பப்படி, டிரான்ஸ்பிளான்டேஷன் செய்யத் தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம் என்று தீர்ப்பளித்து உத்தரவிட்டார். சென்னை உயர்நீதி மன்றத்தில் இப்படியொரு மனு விசாரிக்கப்பட்டு, இத்தகைய தீர்ப்பு வழங்கப்பட்டதென்பது இதுவே முதல் முறை.



இரண்டாம் தேதி - மார்ச் மாதம், உத்தரவைப் பெற்றுக்கொண்டு வந்து வரதராஜுலுவிடம் கொடுத்தபோது, அவர் அழுதே விட்டார்.

''நீங்கள் இத்தனை தூரம் பாடுபட்டிருக்காவிட்டால், இந்த முடிவு கிடைத்தே இருக்காது!'' என்று வழக்கறிஞர் தியாகராஜனிடம் கதறி விட்டார்.

''கடவுள்தான் என்னிடம் கேஸ்களைக் கொண்டு வருகிறார். அவரது கையில் நான் ஒரு கருவி. அவ்வளவுதான். நிலைமையைச் சரியாகப் புரிந்துகொண்டு, மனிதாபிமானத்துடன் உங்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பை வழங்கிய நீதிபதி அவர்களுக்குத்தான் எல்லாப் பாராட்டும் சேர வேண்டும்!'' என்று வழக்கறிஞர் தியாகராஜன், வரதராஜுலுவிடம் சொன்னார். அதோடு நிற்காமல், ''என் சகோதரன் மகன் டாக்டர் பாரி பாலாஜி, ராமச்சந்திரா மருத்துவமனையில் போஸ்ட்கிராஜுவேஷன் செய்கிறான். அவனை உங்களுக்கு எல்லா உதவிகளும் செய்யுமாறு சொல்லுகிறேன்!'' என்றார்.

''என் வாழ்நாள் முழுக்க உங்களை மறக்க மாட்டேன்!'' என்று குரல் தழுதழுக்கச் சொன்னார் வரதராஜுலு.

சட்டத்தில் வழியில்லை என்று சோர்ந்து போய், ஓர் உயிரைக் காக்க எந்தவித முயற்சியும் எடுக்காமல் வழக்கறிஞர் தியாகராஜன் கையை விரித்துவிடவில்லை. கடைசிவரை பாடுபட்டிருக்கிறார்.

ராமச்சந்திரா மருத்துவமனையில், ராதாகிருஷ்ணனின் ஒரு சிறுநீரகத்தை எடுத்துப் பொருத்தி, ஜோதிராணியின் உயிரைக் காப்பாற்றியிருக்கிறார்கள்.

— எஸ்.வி.என்

# பழக்கம்

பெ. நாயகி

கோபுராஜபுரம் கிராமத்திலிருந்து திட்டச்சேரி வரை நடந்து போய், அங்கிருந்து டவுன்பஸ் பிடித்து திருமருகல் போக வேண்டும். வெயிலைச் சபித்த படி சாலையில் நடந்து கொண்டிருந்தேன். ஏதோ இங்கே ஒன்றிய புண்ணியத்தில் இந்தச் சாலையாவது தார்பூசி நல்லபடியாக இருக்கிறது. அந்த கம்பெனியின் காராவது, வேனாவது கடந்து போனால் நிறுத்தி ஏற்றிக் கொண்டு திட்டச்சேரியில் விட்டுப் போவார்கள்.

இன்று எப்படி அமைகிறதோ என்கிற எண்ணத்துடனேயே நடந்து கொண்டிருந்தேன். பிறந்ததிலிருந்து செருப்பு போட்டுப் பழகாத காரணத்தால் சூடு, காய்ப்பு ஏறிப் போயிருக்கும் பாதங்களை ஒன்றும் செய்ய முடியாமல் உடம்பை வருத்திக் கொண்டிருந்தது.

நாளில் ஒரு முறையாவது ஏதாவது பஸ் இந்த கிராமத்தைத் தொட்டுச் செல்லும் வகையில் போகலாம். நான் இளைஞனாக இருந்த காலத்திலிருந்து மனு கொடுத்தபடி தான் இருக்கிறோம். அப்போது ஒன்றியம் கிடையாது; இந்தச் சாலையும் கிடையாது. அதையே காரணம் காட்டி பஸ் வர மறுத்தது. இப்போது சாலை இருந்தும் பஸ்ஸைக் காணோம்.

டபுடபுவென்று சப்தம் கேட்க, நின்று திரும்பிப் பார்த்தேன். தூரத்தில் ஒரு மோட்டார் சைக்கிள் வேகமாக வந்து கொண்டிருந்தது. நான் தயக்கமாகக் கை காட்டுவது கண்டு வேகம் குறைத்து என்னைக் கடந்து போய் நின்றது.



**நான் எழுதும்போது 'நீட்னஸ்' ரொம்பப் பார்ப்பேன். எனக்கு எழுதற பேப்பரே ஃப்ரெஷ்ஷா இருக்கணும். திரும்ப ரீரைட் பண்றதெல்லாம் இல்லை. அதனால எழுதும்போது அடித்தல் திருத்தல் வந்தா, முழுசா கசக்கித் தூரப் போட்டுடுவேன்!**

**— பழனிபாரதி**

என் மகன் வயதுக்கு ஓர் இளைஞன்.

"சார்! என்னை திட்டச்சேரி வளைவில் இறக்கிவிட்டால் புண்ணியமாகப் போகும்!"

இளைஞன் என்பதால் என் வயதும் சட்டை போடாத கருத்த உடம்பும் காணக் கொஞ்சம் எரிச்சல் வரலாம் என்கிற என் கணிப்பு பொய்த்தது.

"உட்காருங்க ஐயா" என்று புன்னகையுடன் சொன்னவன் கொஞ்சம் முன் பக்கமாய் நகர்ந்து உட்கார்ந்து என்னை ஏற்றிக் கொண்டான். நான் நல்லபடியாக உட்கார்ந்ததை உறுதி செய்து கொண்டபின் வண்டியைக் கிளப்பினான்.

அவனுடைய சட்டையில் இருந்து மெல்லிய நறுமணம் வந்து கொண்டிருந்தது. மடிப்புக் கலையாத நல்ல சட்டை. வண்டியின் ஒரு குலுக்கலில் கூட என் உடம்பு அதில் பட்டு விடக் கூடாதே என்கிற கவலை ஏற்பட்டது.

வசதியான வீட்டுப் பிள்ளையாகத் தெரிந்தான். அந்தக் கறுப்புக் கண்ணாடியும் விலை உயர்ந்ததாக இருக்க வேண்டும். அந்தக் கம்பெனியில் வேலை பார்க்கும் சகலரையும் எனக்கு முக அளவிலாவது தெரியும். இவன் புதிது. ஒருவேளை மாற்றலாகி எங்கிருந்தாவது வந்திருக்கிறானோ?



இவனுடைய குடும்பத்தில் யாராவது கிராமத்தாராக இருக்க வேண்டும். தகப்பனார் அல்லாவிட்டால் தாத்தாவாவது ஏதாவது கிராமத்தில் இருக்க வேண்டும். அந்த ரத்தம் உடம்பில் ஊறியிருந்தால்தான் தோல் சுருங்கிய கறுப்பு உடம்புகளை அருவருப்பின்றிப் பார்க்கும் பக்குவம் வரும்.



கேட்டுவிட மனம் துடித்த படி இருந்த போதிலும் பேச்சே எழவில்லை. பேச வேண்டுமென்றால் கொஞ்சம் உடம்பை முன்னுக்குத் தள்ள வேண்டியிருக்கும். என் உடம்பில் மின்னும் வியர்வைத் துளிகள் அவன் சட்டையில் ஒட்டி விடலாம் என்கிற எண்ணமும் தயக்கத்துக்கு ஒரு காரணம். பக்கத்துப் பிடிமானக் கம்பியை இறுக்கிப் பிடித்தபடி நான்கு விரற்கடை தள்ளியே உட்கார்ந்திருந்தேன்.

வண்டியின் வேகத்தால் காற்றின் சூடு தெரியாமல் கொஞ்சம் இதமாகக் கூட இருந்தது.

மூன்று கிலோ மீட்டர் தூரத்தை மூன்றே நிமிடங்களில் கடந்து திட்டச்சேரி வளைவில் நிறுத்தினான் அந்த இளைஞன்.

"பத்திரமா இறங்குங்கையா" என்றான் பரிவாக.

நான் இறங்கிக் கொண்டேன். அங்கே நின்றிருந்தவர்கள், எனக்குத் தெரிந்த பெட்டிக்கடை நண்பர்கள்

**எழுதும் போது சோர்வாயிடுச்சுன்னா ஒரு வடிவத்துல இருந்து இன்னொரு வடிவத்துக்குப் போயிடுவேன். கவிதை எழுதறப்போ**

அனைவரும் என்னை' வித்தியாசமாகப் பார்ப்பதில் ஒரு பெருமை இருந்தது.

"ரொம்ப நன்றி சார்" என்றேன்.

"சேச்சே பரவாயில்லை" என்றபடி மோட்டார் சைக்கிளில் ஓர் உறுமலை உற்பத்தி செய்துவிட்டு விரைந்தான் அந்த இளைஞன்.

நான் அவன் போவதையே நன்றியுடன் பார்த்துக் கொண்டிருக்க, அவன் பத்து தப்படி போனவுடன் வண்டியைச் செலுத்தியபடியே திடீரென்று ஞாபகம் வந்தவன் போல் தன் வலது கையை அவசரமாக முதுகுப்புறம் கொண்டு வந்து பேண்ட்டின் பின் புறப் பையில் பர்ஸ் இருக்கிறதா என்று தொட்டுப் பார்த்துக் கொண்டு பிறகு வேகம் எடுத்தான்.

உடைந்து நொறுங்கிப் போனேன்.

சமாதானமாக வேறு விதமாக நினைத்துக் கொள்ள முயன்றேன்.

அந்த மாதிரி அடிக்கடி பேண்ட்டின் பின் பாக்கெட்டைத் தொட்டுப் பார்ப்பது அவனுடைய பழக்கமாகக் கூட இருக்கலாம்.

இதே போல வேறு ஒரு சந்தர்ப்பத்தில் யாருக்கோ உதவப் போய் பர்ஸைக் கோட்டை விட்டிருக்கலாம்.

சமாதானம் கொள்ளப் பார்த்தாலும் என் முகம் தொங்கிப் போனது எனக்கே தெரிந்தது.

"என்ன பெரிசு? யாரோ ஹீரோ கூட வந்து இறங்கினாப்ல இருந்தது?" என்று கேலி செய்த பழக்கமான வாழைப்பழ தள்ளு வண்டிக்காரனிடம் பதிலுக்குப் புன்னகைக்க முயன்று தோற்றேன்.

இதன் தாக்கம் இன்று முழுதும் இருக்கும் என்று தோன்றியது. நடந்தே வந்திருக்கலாம். வெளிப் புழுக்கம் இவ்வளவு கொடுமையாக இருந்திருக்காது.

> சோர்வாயிடுச்சுன்னா,
> சிறுகதை எழுத
> ஆரம்பிச்சுடுவேன்.
> அப்புறம் திரும்பவும்
> கவிதைக்கு வருவேன்.
> சோர்வு வந்தா பத்து
> நிமிஷம் தூங்கிட்டு
> மனசுக்குள்ள
> சொல்லிக்குவேன்:
> "சோம்பேறி, உடனே
> எழுந்திரு"ன்னு. உடனே
> எழுந்து எழுத ஆரச்பிச்
> சுடுவேன். எழுதும்போது
> எதையாவது கொறிச்சுகிட்டே
> எழுதறதும் ஒரு பழக்கம்.
>
> — வலம்புரிஜான்

# கறுப்பு-வெள்ளைக் கனவுகள்

## தமயந்தி

2

பாட்டிக்கு எப்படி நன்றி சொல்வது? பூ வைத்ததற்கே ஆடிப் போன அப்பாவிடம் கல்லூரியில் சேர்ந்து மேலே படிப்பதற்கான சம்மதத்தை வாங்க எத்தனை போராடினாள், தனக்காக? மகாலட்சுமிக்கு நெகிழ்வாக இருந்தது.

"நான் சொல்றதைக் கேளுடா. சினிமால வர்ற விதவைப் பெண் பூ வெச்சுக்கலாம். கதைல வர்ற பொண்ணு புரட்சி பண்ணலாம். ஆனா, நம்ம வீட்டுல இருக்கக் கூடாது. இல்லையா? பொட்டு, கல்யாணமாகிறதுக்கு முன்னாலேயே வச்சிக்கறதுதானே? கணவன் போனப்பறம் விபூதி இட்டுக்கிட்டா, இவ விதவைனு லேபில் ஒட்டுறது மாதிரியா? எல்லாம் மனசுல இருக்குடா சோமு! வெளில் சிரிக்கிறவங்க எத்தனை பேர் மனசுல அழுறாங்க தெரியுமா? வெளிய கனமா, இறுக்கமா இருக்கிறவங்க மனசுல சந்தோஷம் அலைபாயும். இப்ப மகாவுக்கு ஒரு மாற்றம் வேணும். எந்த திசைலருந்தாவது காத்து வீசணும். மேல படிக்க விருப்பப்படுறா மகா. அவளுக்கு இடைஞ்சல் பண்ணாதே" என்றாள் பாட்டி.

"அவங்க வீட்ல என்ன சொல்வாங்களு..."

"படிப்பு, பெண்களோட சொத்து சோமு. எனக்குக் கிடைக்காம போயிருச்சு. தோள்ல பைய மாட்டிட்டு வேலைக்குப் போற இந்தக் காலத்துப் பெண்கள் மேல எனக்குப் பொறாமையிருக்கு. எனக்குப் படிக்கக் கிடைக்கலையேனு ஏக்கமாருக்கு. கல்வி தான், பெண்களோட சக்தி."

"சரிம்மா. ஆனா..."

பாட்டி, மகாவைப் பார்த்து கட்டை விரலை உயர்த்திக் காட்டினாள். மகாலெட்சுமிக்கு எதுவுமே புரிபடாதது போலிருந்தது. பாட்டி, தன்னில் அவளைப் பார்க்கிறாளோ என்கிற சந்தேகம் வந்தது. இங்கு வந்து இறங்கின போதிருந்த குழப்பம் இப்போது இல்லை என்றே தோன்றிற்று. அதற்குப் பாட்டிதான் காரணம். அவள் சொல்வது போல், மேல் படிப்பு மனத்தளவில் ஒரு மாற்றத்தைக் கொண்டு வரலாம். காற்று வீச வழி செய்யலாம்.

செய்தது. மனிதர்களோடு பழகப் பழக 'வெளி' விஸ்வரூபமெடுத்தது. கல்லூரித் தோழி தமிழ்ச் செல்வி மூலம் நண்பர்கள் கிடைத்தார்கள். தமிழின் மேலிருந்த காதலால் தமிழ்ச்செல்வி சபரியோடு 'கவிதைப் பூங்கா' என்கிற அமைப்பைத் துவங்கினாள். மகாவும் ஒன்றிரண்டு கவிதைகள் வாசித்தாள். மனசில் காற்று வீசியதோடு அல்லாமல், தூறவும் செய்தது.

மகாவின் மாற்றங்களைப் பாட்டி உணராமல் இல்லை. பாட்டியோடு பின்புறப் படியில் உட்கார்ந்து அன்றைய பொழுதின் சாராம்சங்களைப் பகிர்ந்து



கொள்ளாவிடில், திருப்தி இராமல் போனது. அப்பா கூட மகா குறித்த கவலைகளிலிருந்து வெளிவந்தது போலத் தான் தெரிகிறது.

செல்வாவின் ஞாபகங்கள் எப்போதாவது ஒருமுறை, நாளின் மௌனமான, நிச்சலனமான, தனிமையான பிரதேசங்களில் எட்டிப் பார்க்கும். மரணம் ஓர் அகழி போல அவனைப் பிரித்துப் போனது வேதனைதான். எனினும், "இறந்ததை நினைத்து துக்கப்படுவது, எந்தத் தீர்வைத் தரும்?" என்று செல்வி கேட்டான். தர்பூஸ் கீற்றுகளை சபரி வாங்கி வந்து கொடுத்தத் தருணம், செல்வாவின் நினைவு, கண்களில் நீரை

வரவழைத்தது.

''என்னாச்சுப்பா?'' செல்வி கீற்றொன்றை நீட்டினாள்.

''ஒன்னுமில்ல...''

கொஞ்ச நேரம் மௌனமாக இருந்து விட்டு தமிழ்ச் செல்வி, ''செல்வாவுக்குப் பிடிக்குமா?'' என்றாள்.

''..............''

''சபரியப் பாத்தியா நீ மகா?''

''ம்?''

''கோயம்புத்தூர் குண்டு வெடிப்புல, ஜவுளி வாங்கிட்டிருந்த குடும்பத்தையே இழந்தவன். அந்த ஊர் வேணாம்னு வந்தவன். யாத்ரீகனாகி, ஊர் ஊரா அலைஞ்சான். இந்த ஊர் பிடிச்சி இங்கயே தங்கிட்டான். அவனுக்கு, வாழ்க்கையே ரணமாயிருச்சு மகா. உனக்காச்சும் தோள் கொடுக்க பாட்டி, உன் பெற்றோர், செல்வாவோட பெற்றோர்னு இருக்காங்க. ஆனா, சபரி?''

''விடு தமிழ். அவங்களே கலங்கியிருக்காங்க. கலங்கினவங்களுக்கு ஆறுதல் சொல்லியா? அத விட்டுட்டு...''

''ஒரு பழமொழி உண்டு மகா. நான் காலணி இல்லையென்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன் - கால்களே இல்லாதவனைப் பார்க்கும் வரை.''

''தமிழ்...''

''ஒரு டீக்கடை வச்சிருக்கான் மகா பஸ்-ஸ்டாண்ட்ல. சாயந்தரம் போ! டீ ஆத்திட்டிருப்பான். டேப்ல பாரதி பாட்டுதான் பாடும். டீ ஆத்தும் போது 'காக்கைச் சிறகினிலே' பாடுவான். வித்தியாசமான டீக் கடைக்காரன்.''

மகா துக்கம் மறந்து, சிரித்தாள்.

சபரியின் இணக்கமான, சிநேகம் பூத்த புன்னகை, மயிலிறகாய் மனசைத் தொட்டது. இத்தனை சோகத்துக்கு மத்தியில், யாருமில்லாத அனாதையாய், ஒரு துளி வருத்தத்தைக் கூட மனசில் சுமக்காது, எவ்வாறு கவிதை பாட முடியும்? ஒரு வேளை, பாரதிதான் அவனது துக்க நிவாரணியோ? டீக்கடையில் டீ ஆற்றி, கல்லூரியில் படித்து, கவிதைப் பூங்கா அமைப்பில் சேர்ந்துழைத்து இருக்கிறவனுக்கு, இரவு படுக்கும்போதோ, இல்லை அதற்குப் பிறகோ, குண்டுவெடிப்பில் மரித்த தன் குடும்பம் ஞாபகம் வராதா? செல்வாவின் நினைவுகளால் சில்லுச்சில்லாகிப் போகும் என் நிலை அவனுக்கு இல்லையா? கேள்விகளின் பாரம் தாங்க முடியாமல், மகா அவனிடமே கேட்டாள்.

''உங்களுக்கு உங்க குடும்பத்து ஞாபகம்...''

அவன் சட்டென்று கண்களைத் தாழ்த்திக் கொண்டான்.

**சன்னலைத் திறந்து வைத்து, சற்று நேரம் வானம் பார்த்துக் கொண்டிருப்பேன். ஒரு பறவையாவது என் கண் முன்னே பறந்து கடக்க வேண்டும். அடுத்த விநாடி எழுதத் தொடங்கி விடுவேன். எழுதுவதற்கு மேசை, நாற்காலி எனக்கு ஒத்துக் கொள்ளாது. பழங்கால குமாஸ்தா டெஸ்க்தான் வசதி. வெறுந்தரையில் குத்துக்கால் இட்டு அமர்ந்து எழுதுவேன்.**

**— வைவவன்**





''வரும்... வராது போனா மனுஷனில்லையே?''

''மறக்காது சபரி. என்னால செல்வாவை மறக்க முடியலை.''

அவர்கள் எதுவுமே பேசாமல் பிரிந்து போனார்கள். மறுநாள் கல்லூரியை எதற்காகவோ திடீரென்று மூடினார்கள். தமிழ்ச்செல்வியின் வரவுக்காக மகா, புங்க மரத்தடியில் காத்திருந்தாள். வந்ததும், வருகிற ஞாயிற்றுக்கிழமை கூட்டத்திற்கான நிகழ்ச்சி நிரலைத் தயார் செய்ய வேண்டும்.

தமிழ் வந்தாள். கல்லூரி விடுமுறைக்கான காரணம் அவளுக்கும் தெரியவில்லை. என்றாலும் விடுமுறை என்கிற விஷயமே அவளுக்கு சந்தோஷத்தைத் தரக்கூடிய ஒன்றாக இருந்தது.

''கூட்டத்துக்கான நிகழ்ச்சி என்னென்னு பாத்திறலாமா தமிழ்?''

''ஓ! சபரியும் வந்துட்டா நல்லது. பொறுக்கலாமா?''

''தாராளமா! வீட்டுக்குப் போய் என்ன செய்ய? பாட்டியோடு பேசலாம். டி.வி. பார்க்க விருப்பமில்லை. புத்தகங்கள் வாசிக்கலாம். அதுவும் எனக்கு இந்த நேரம் ஓடாது. இரவு தூங்குவதற்கு முன், புத்தகங்கள் வாசித்தால், மனசு லேசாகிறது தமிழ்.''

சபரி வருவான் என்று எதிர்பார்த்தார்கள். அநேகமாக எல்லோருமே கல்லூரி வளாகத்திலிருந்து கலைந்திருந்தார்கள். சபரி வந்த பாடில்லை. அவனது டீக்கடைக்கே போகலாமா என்று தமிழ்ச்செல்வி யோசனை சொன்னாள். அப்பா என்ன சொல்வாரோ என்கிற தயக்கம் எழுந்தாலும் ஒரு நண்பனைப் பார்க்க அவனிருக்கும் இடம் தேடிச் செல்வதில் எந்தத் தவறும் இல்லை என்றே தோன்றிற்று.

தமிழ்ச்செல்வி சைக்கிள் கொண்டு வந்திருந்தாள். அவர்கள் அதிலேயே சபரியின் கடைக்குப் பயணித்தார்கள். அவன் கடையும் பூட்டியிருந்தது. பக்கத்துக் கடைக்காரர் இவர்களைப் பார்த்து,

''அந்தப் பையனாம்மா? காலைல தெரியாம வெந்நீர் பாய்லர்ல கை விட்டுட்டான். ஜி.ஹெச்ல சேத்துருக்கு'' என்றார்.

''ஐயோ!'' என்று வாய் மீறி சொல் உதிர்ந்து விட்டது.

''ஜி.ஹெச். போய்ப் பார்ப்போமா மகா?'' பதறிக் கேட்டாள் தமிழ்ச்செல்வி.

இவளுக்கும் பார்க்க வேண்டும் போலத்தான் தோன்றியது.

(தொடரும்)

**என்னைப் பொறுத்தவரை, வீட்ல உட்கார்ந்து எழுதும்போது லுங்கி, பனியன்னு கேஷுவல் டிரெஸ்ல இருப்பேன். மைல்டான மியூசிக் கேட்டுட்டு எழுதப் பிடிக்கும். எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் எழுதுவேன். ரயில்ல பிரயாணம் பண்ணிட்டே கூட எழுதியிருக்கேன்.**

**— (சுபா) சுரேஷ்**

**நானொரு வாசனைப் பிரியன். உடம்பில் ஸ்பிரே பண்ணிப்பேன். ரூம்ல தரைல உட்கார்ந்துதான் எழுதுவேன். செட்டியார் கடை எழுதுமேஜை மாதிரி ஒண்ணுலதான் எழுதறேன். எப்பவும் ஊதுவத்தி வாசனை ரூமை சூழ்ந்து இருக்கணும்னு நினைப்பேன். எப்பவும் பேண்ட், சர்ட் போட்டு நீட்டாத்தான் எழுத உட்காருவேன்.**

**— (சுபா) பாலகிருஷ்ணன்**






மூன்றாம் அத்தியாயம்

## ஆந்தையின் குரல்

நந்தினி கடலை நோக்கினாள். பழுவேட்டரையர் ஏறிச் சென்ற படகு பார்த்திபேந்திரனுடைய கப்பலை நெருங்கிக் கொண்டிருந்தது.

நந்தினி பெருமூச்சு விட்டாள். அது பார்த்திபேந்திரனுடைய நெஞ்சில் புயலாக அடித்தது.

"தேவி! சொல்லுங்கள். நான் செய்ய வேண்டியது இன்னதென்று சொல்லுங்கள். தங்களுக்கும் எனக்கும் உகந்தது என்று பிரித்துச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. தங்களுக்கு எது உகந்ததோ அதுதான் எனக்கும் உகந்தது!" என்றான் பல்லவ வீரன்.

அவன் மனத்தில் விசித்திரமான எண்ணங்கள் எல்லாம் அந்நேரத்தில் உதித்தன. இந்தப் பெண் அந்தக் கொடிய கிழவனிடம் அகப்பட்டுக் கொண்டு கூண்டுக்கிளியைப் போல் தவித்துக் கொண்டிருக்கிறாள் என்பதில் சந்தேகமில்லை. அந்தக் காட்டுப் பூனையிடமிருந்து இவளை ஏன் விடுதலை செய்யக்கூடாது? இவள் மட்டும் தன் விருப்பத்தைத் தெரிவிக்கட்டும்! அவனை அக்கப்பலிலேயே சிறைப்படுத்திக் கண்காணாத தேசத்துக்குக் கொண்டு போய் விட்டுவிடச் செய்யலாம்! சண்டாளன்! புதல்வியும் பேத்தியுமாக இருப்பதற்குரிய இளம் பிராயமுடைய பெண்ணை மனைவியாக்கிக் கொள்ள எப்படி இவன் மனந் துணிந்தது...?

நந்தினி இன்னமும் படகையும் கப்பலையும் பார்த்துக்கொண்டிருந்தாள். படகிலிருந்து பழுவேட்டரையர் கப்பலில் ஏறுவதைப் பார்த்தான்.



"நல்லவேளை! பத்திரமாக ஏறி விட்டார்! எவ்வளவு வீரராயிருந்தாலும் வயதாகி விட்டதல்லவா? படகிலிருந்து கப்பலில் ஏறும்போது தடுமாறாமல் இருக்க வேண்டுமே என்று எனக்குக் கவலையாயிருந்தது!" என்றாள்.

பல்லவன் ஏமாற்றமடைந்தான். கிழவனிடம் இவளுக்கு இவ்வளவு பரிவு ஏன்? படகிலிருந்து அவன் கடலில் விழுந்து இறந்தால் என்ன? நாட்டுக்கும் க்ஷேமம்; இவளுக்கும் விடுதலை! எதற்காக இவ்வளவு பரிவு காட்டுகிறாள்?

"கிழவருக்குச் சோழ குலத்தாரிடம் எவ்வளவு அபிமானம் என்பது இன்றைக்குத்தான் எனக்குத் தெரிந்தது. இளவரசருக்கு ஆபத்து என்றதும் எப்படித் துடிதுடித்துப் போய்விட்டார்? - ஐயா! இளவரசர் தப்பிப் பிழைத்திருக்கக் கூடும் அல்லவா? இறந்துதான் போயிருக்க வேண்டும் என்பது நிச்சயம் இல்லையே?" என்றாள் நந்தினி.

"நிச்சயம் இல்லை; ஆனால் அப்பேர்ப்பட்ட சுழற்காற்றில் கடலில் குதித்தவர் பிழைத்திருப்பது அசாத்தியம்! விதியின் போக்குக்கு நாம் என்ன செய்ய முடியும்?" என்றான் பல்லவன்.

"இதற்கு விதி காரணம் இல்லை; அந்தப் பழையாறை ராட்சஸியின் பேராசைதான் காரணம். தங்களுக்குத் தெரியுமா, ஐயா? குந்தவை தேவிக்கு ஜோதிடத்திலும் ரேகை சாஸ்திரத்திலும் அபார நம்பிக்கை. தம்பியின் ஜாதகத்தையும், கைரேகையையும் பார்த்து வைத்துக்கொண்டு அவன் மூன்று உலகையும் ஆளும் சக்கரவர்த்தியாகப் போகிறான் என்று நம்பிக்கை வைத்திருந்தாள். ஐயோ பாவம்! அந்த அருமைத் தம்பிக்கு இந்தக் கதி நேர்ந்தது என்று அறியும்போது அவள் எவ்வளவு கஷ்டம் அடைவாள்! அச்சமயம் நான் அவள்கூட இருந்து ஆறுதல் சொல்ல வேண்டும் போலிருக்கிறது!"

இவ்விதம் கூறிய நந்தினியின் குரலில் குதூகலம் தொனித்தது. பல்லவன் ஒருகணம் ஆச்சரியப்பட்டுப் போனான். பிறகு தன் செவிகளில்தான் கோளாறு என்று தீர்மானித்துக்கொண்டான்.

"ராணி! தாங்கள் எதற்காக ஆறுதல் சொல்ல வேண்டும்? அவளுடைய பேராசையினால் நேர்ந்துவிட்ட விபரீதம்தானே இது? அதற்காக அவள் கஷ்டப்பட வேண்டியதுதான்..."

"அது எப்படி ஐயா? அவள் கண்ணில் ஒரு சொட்டுக் கண்ணீர் துளித்தால் நெஞ்சு பதறுகிறவர்கள் சோழ நாட்டில் ஆயிரம் பதினாயிரம் பேர் இருக்கிறார்கள். அவள் சக்கரவர்த்தியின் செல்வப் புதல்வி. மூன்று உலகிலும் ஈடு இணையற்ற அழகி!"

"நானும் ஒருசமயம் அவ்வாறுதான் நினைத்திருந்தேன். அதாவது தங்களைப் பார்ப்பதற்கு முன்னால்!"

"என்னைப் பார்த்த பிறகு என்ன நினைக்கிறீர்கள்?"

"குந்தவைதேவியின் அழகு தங்கள் பாதச் சுண்டுவிரலின் அழகுக்கு இணையாகாது என்றுதான்."

"இப்போது இப்படித்தான் சொல்வீர்கள். நாளைக்கு அவளைப் பார்த்தால் நான் ஒருத்தி இவ்வுலகில் இருக்கிறேன் என்பதையே மறந்து விடுவீர்கள்!"

"ஒருநாளும் மாட்டேன், தேவி! என்னைச் சோதனை செய்து பாருங்கள் என்றுதான் சொல்கிறேனே? தங்கள் கட்டளை இன்னதென்று இக்கணமே தெரிவியுங்கள்."

"கட்டளையிடும் பாத்தியதை எனக்குக் கிடையாது, ஐயா! விண்ணப்பம் செய்து கொள்கிறேன். பெரிய பழுவேட்டரையரை நான் மணந்த பிறகு சோழ நாட்டில் பிளவும் குழப்பமும் ஏற்பட்டிருப்பதாகச் சிலர் அவதூறு சொல்கிறார்கள். அது பொய் என்பதை நிரூபிக்க விரும்புகிறேன். அதற்குத்தான் தங்கள் உதவியை நாடுகிறேன்."

பார்த்திபேந்திரன் சிறிது ஏமாற்றம் அடைந்தான். நந்தினி அவளுக்காக ஏதோ ஒரு

கஷ்டமான காரியத்தில் தன்னை ஏவு வாள் என்று எண்ணியிருந்தான். அதை நிறைவேற்றி அவளை மகிழ்விக்க ஆர்வம் கொண்டிருந்தான். ஆனால் அவள் இராஜ்ய காரியத்தைப் பற்றி எதுவோ சொல்கிறாள்!

''சொல்லுங்கள், ராணி! தங்கள் விருப்பம் எதுவாயிருந்தாலும் சொல் லுங்கள்!'' என்றான்.

"ஐயா! சோழ நாட்டில் அமைதி ஏற் படாமல் தடுத்து வந்தவள் இளைய பிராட்டி. அவளுடைய் அகம்பாவத் தினால் சோழ நாட்டுச் சிற்றரசர் களையும் பெருந்தர அதிகாரிகளையும் கோபம் கொள்ளச் செய்தாள். தம்பி அருள்மொழி வர்மனை எப்படியாவது இந்தச் சோழ நாட்டுச் சிம்மாசனத்தில் ஏற்றிவிட வேண்டும் என்று அவளுக்கு ஆசை. இதனால் சமரசம் ஏற்படாமல் தடுத்து வந்தாள். இப்போது அந்தக் கார ணம் போய்விட்டது. இனிமேல் சமரசம் செய்து வைப்பது சுலபம். கேளுங்கள், ஐயா! தாங்கள்தான் சொன்னீர்களே! மந்திரிகளும் மற்றப் பெருந்தர அதிகாரி களும் சுந்தர சோழருக்குப் பிறகு மது ராந்தகருக்குப் பட்டம் கட்ட விரும்பு கிறார்கள். சக்கரவர்த்தியும் அதற்கு இணங்கிவிட்டார்.''

''அப்படியா, தேவி!''

''ஆம், ஐயா! இல்லாவிடில் இள வரசரைச் சிறைப்படுத்திக் கொண்டு வரக் கட்டளையிட்டிருப்பாரா? ஆனாலும் அது சரியல்ல என்பது என் கருத்து. சமரசமாகத் தீர்த்துக் கொள்வதற்கு இடம் இருக்கிறது. வெள்ளாற்றுக்கு வடக்கேயுள்ள ராஜ் யத்தை ஆதித்த கரிகாலருக்கு என்றும், தெற்கேயுள்ள பகுதியை மதுராந்த கருக்கு என்றும் பிரித்துக் கொள்ள லாமே? தங்கள் முன்னோர்கள், பல்லவ மகாசக்கரவர்த்திகள், தொண்டை மண்டலத்தை ஆள்வதுடன் திருப்தி அடையவில்லையா? பூர்வீக சோழ மன்னர்கள் இரண்டு வெள்ளாற்றுக்கு மிடையேயுள்ள இராஜ்யத்துடன் திருப்தி அடையவில்லையா...?

"தேவி! இதையெல்லாம் எதற்காக என்னிடம் சொல்லுகிறீர்கள்? எந்த ராஜ்யம் எப்படிப் போனால் எனக்கு என்ன? யார் எந்த ராஜ்யத்தை ஆண் டால்தான் எனக்கு என்ன...?''

''ஐயா! தாங்கள் ஆதித்த கரி காலரிடம் உண்மை விசுவாசமுள்ள சிநேகிதர் என்று எண்ணினேன்.''

"பிறருக்கு விசுவாசமாயிருந்து, பிறரு டைய புகழுக்காகப் போராடி, பிறரு டைய நன்மைக்காக உழைத்து, - இத் தனை நாளும் கழித்தாகி விட்டது. இனி மேல் எனக்காக நான் வாழ விரும்பு கிறேன். ராணி! இதைக் கேளுங்கள்! நான் எதற்காக இவ்வுலகில் பிறந்தேன், எதற்காக உயிரோடிருக்கிறேன் என்று பலதடவை நான் சிந்தித்ததுண்டு. என் முன்னோர்களாகிய பல்லவ சக்கரவர்த் திகள் பெரிய சாம்ராஜ்யங்களை ஆண் டார்கள். மாமல்லபுரத்தைப் போன்ற உலகங்களைச் சிருஷ்டித்தார்கள். அவர்களுடைய பெருமையை என் காலத்தில் மீண்டும் நிலைநாட்டப் பிறந் திருக்கிறேனோ என்று நான் எண்ணிய துண்டு. ஆனால் அதில் என் மனம் ஈடு படவில்லை; ராஜ்யங்களைச் சிருஷ்டிப் பதில் உற்சாகம் கொள்ளவில்லை. சோழ குலத்தின் பெருமைக்கு உழைப் பதிலேயே திருப்தி அடைந்தேன். ஆதித்த கரிகாலரின் சிநேகத்தில் மகிழ்ந் தேன். இப்படியே என் வாழ்நாளைக் கழித்து விடுவது என்றுதான் எண்ணி யிருந்தேன். இன்றைக்குத்தான் என் கண் கள் திறந்தன; சற்று முன்னாலேதான் நான் பிறந்தது எதற்காக என்று தெரிந் தது. அதோ கேளுங்கள்! அந்தக் கடல் அலைகளின் குரல் என் உள்ளத்தின் குரலை 'ஆம், ஆம்' என்று ஆமோதிக் கிறது. அதோ, காட்டில் வாழும் பறவைகள் எல்லாம் 'சரி சரி' என்று கூவுகின்றன. தேவி! சோழ சாம்ராஜ் யத்தைப் பங்கு போடுவது பற்றி என் னிடம் சொல்லவேண்டாம். வேறு ஏதாவது சொல்லுங்கள்! கடல்களுக்கு அப்பாலுள்ள பவழத் தீவிலிருந்து விலை மதிக்க முடியாத பவழங்களைக்

கொண்டு வரச்சொல்லுங்கள். மேரு மலையின் உச்சிச் சிகரத்திலே ஏறிச் சஞ்சீவி மூலிகையைக் கொண்டு வரச் சொல்லுங்கள். மேக மண்டலத்துக்கு மேலே பறந்து நட்சத்திரங்களைப் பறித்துக் கொண்டு வந்து ஆரம் தொடுத்துத் தங்கள் கழுத்தில் போடச் சொல்லுங்கள். பூரண சந்திரனைக் கொண்டு வந்து தங்களுடைய முகம் பார்க்கும் கண்ணாடியாக்கித் தரும்படி சொல்லுங்கள்...!''

''போதும், ஐயா, போதும்! என்னை ஏற்கெனவே அந்தப் பழையாறைப் பிராட்டி 'பைத்தியம்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள். உண்மையாகவே எனக்குப் பைத்தியம் பிடிக்கச் செய்து விடாதீர்கள்!'' என்றாள் நந்தினி.

பார்த்திபேந்திரன் சிறிது வெட்கம் அடைந்தான். ''பைத்தியம் பிடித்திருப்பது எனக்குத்தான்; மன்னியுங்கள். தங்களுடைய விருப்பத்தை முதலில் தெரிவியுங்கள்!'' என்றான்.

''சோழ நாடெங்கும்



– தமிழகமெங்கும் – எனக்கு ஏற்பட்டிருக்கும் கெட்ட பெயரைப் போக்கிக் கொள்ள விரும்புகிறேன். அதற்குத்தான் தங்கள் உதவியை நாடுகிறேன். நான் இந்தக் கிழவரை மணந்ததின் காரணமாகச் சோழ குலத்துக்கே கேடு வந்துவிட்டதென்று ஜனங்கள் பேசிக் கொள்கிறார்களாம். மதுராந்தகத் தேவரை இராஜ்ய ஆசை கொள்ளச் செய்தது நான்தான் என்று சொல்லுகிறார்களாம். சோழ நாட்டுச் சிற்றரசர்களை அவர் பக்கம் திருப்பியதும் நான்தான் என்றும் சொல்கிறார்களாம். இந்த அவப் பெயருடன் இறந்து போவதற்கு நான் விரும்பவில்லை...!''





''இறந்து போவதைப் பற்றி ஏன் பேசுகிறீர்கள்? என்னைத் துன்புறுத்துவதற்காகவா?''

''பல்லவகுமாரா! தங்களுக்கு ரேகை சாஸ்திரம் தெரியுமா? ரேகை சாஸ்திரத்தில் தங்களுக்கு நம்பிக்கை உண்டா?'' என்று நந்தினி சம்பந்தமில்லாத ஒரு கேள்வியைக் கேட்டாள்.

பார்த்திபேந்திரன் அதற்கு நேர் மறுமொழி சொல்லாமல் "எங்கே? கையைக் காட்டுங்கள்!" என்றான்.

நந்தினி வலது கையை நீட்டினாள். அதைப் பார்த்திபேந்திரன் சிறிது நேரம் உற்றுப் பார்த்துவிட்டு, "ஆச்சரியமான ரேகைகள்! இம்மாதிரி காண்பதே அபூர்வம்! அந்தக் கையையும் சிறிது காட்டுங்கள்!" என்றான்.

நந்தினி இன்னொரு கையையும் நீட்டினாள். பல்லவன் அதையும் பார்த்துவிட்டு, "தேவி! இதற்கு முன் யாராவது தங்கள் கரங்களின் அதிசயமான ரேகைகளைப் பார்த்துவிட்டு ஏதாவது சொல்லியிருக்கிறார்களா?" என்று கேட்டான்.

"ஆம்; பழையாறை இளையபிராட்டி ஒருதடவை என் கையைப் பார்த்துவிட்டுச் சொன்னாள்..."

"என்ன சொன்னாள்?"

"நான் அற்பாயுளில் சாவேன் என்று சொன்னாள்."

"அது உண்மைதான்!" என்றான் பார்த்திபேந்திரன்.

"ஐயோ! நீங்களுமா அப்படிச் சொல்கிறீர்கள்?"

"ஆனால் அவள் அரைகுறையாக சாஸ்திரம் படித்தவள் என்று தெரிகிறது. இந்தக் கைரேகையில் ஒன்று அற்பாயுளைக் குறிப்பது உண்மைதான். ஆனால் மற்றொரு ரேகை அந்தக் கண்டத்தைக் கடந்து புனர்ஜன்மம் ஏற்படும் என்றும் கூறுகிறது. அந்தப் புனர்ஜன்மத்துக்குப் பிறகு கடல் கடந்து பல நாடுகளுக்குப் பிரயாணம் செய்யும் பாக்கியம் உண்டு என்றும், மன்னாதி மன்னர்களுக்குக் கிட்டாத ஆனந்த வாழ்க்கை வெகு காலம் உண்டு என்றும் கூறுகிறது. இவ்வளவும் தற்செயலாகக் கடற்கரையில் சந்தித்த ஒரு யவ்வன புருஷனுடைய உண்மை அன்பினால் கிடைக்கும் என்று தெரிகிறது. தங்களுடைய சின்னஞ்சிறு விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக அவன் தன் உயிரையே அர்ப்பணம் செய்வான் என்று ரேகைகள் மிகத் தெளிவாகச் சொல்லுகின்றன..."

இவ்விதம் கூறிக் கொண்டே பார்த்திபேந்திரன் சட்டென்று நந்தினியின் விரித்த இரு கரங்களையும் பற்றித் தன் கண்களில் ஒற்றிக்கொண்டான்.

நந்தினி கைகளை உதறி விடுவித்துக் கொண்டு, "சீச்சீ! இது என்ன காரியம் செய்தீர்?" என்றாள்.

"மன்னியுங்கள்! இவை தங்கள் கரங்கள் என்பதை மறந்துவிட்டேன். இரண்டு செந்தாமரை மலர்கள் என்று எண்ணிக் கொண்டேன்" என்றான்.

"பழுவேட்டரையர் பார்த்திருந்தால் உம்மை ஈட்டி முனையில் கழுவேற்றியிருப்பார்!"

"தேவி! தங்களுக்காகக் கொடுப்பதற்கு எனக்கு இருப்பது ஓர் உயிர்தானே என்று கவலைப்படுகிறேன்..."

"அந்த ஓர் உயிரையும் இப்படிக் கொடுப்பானேன்? இந்த அநாதைப் பெண்ணுக்கு உதவி செய்வதற்காகக் காப்பாற்றி வைத்துக் கொண்டிருங்கள்!"

"என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள்!"

"சோழ சாம்ராஜ்யம் தாயாதிக் கலகத்தினால் பாழாகி விடாமல் காப்பாற்ற வேண்டும். அதற்குத் தங்களுடைய உதவி வேண்டும்."

"எப்படி?"

"தங்கள் சிநேகிதர் கரிகாலரைக் கடம்பூர் சம்புவரையர் வீட்டுக்கு அழைத்து வாருங்கள். சம்புவரையருக்கு ஒரு பெண் இருக்கிறாள். அவளை ஆதித்த கரிகாலருக்கு மணம் செய்து வைத்து விட்டால் என் மனோரதம் பூர்த்தியாகும்."

"இந்த அற்பக் காரியத்துக்குத்தானா இவ்வளவு பீடிகை? ஆதித்த கரிகாலரை அவசியம் கடம்பூருக்குக் கொண்டு வந்து சேர்க்கிறேன். அப்புறம்...?"

"ஆதித்த கரிகாலருக்குச் சம்புவரையர் மகளைக் கலியாணம் செய்து வைத்து விட்டால் கலகம் பாதி தீர்ந்து விட்டதாகும். சோழ சாம்ராஜ்யத்தில் மதுராந்தகருக்குத் தென் பாதியும் கரிகாலருக்கு வடபாதியும் என்று பிரித்துக் கொடுத்து

விட்டால் கலகம் முழுதும் தீர்ந்ததாகும்."

"பின்னர்...?"

"எனக்கு ஏற்பட்டிருக்கும் கெட்ட பெயர் போய்விடும். பிறகு என் தலை விதியை நானே நிறைவேற்றிக் கொள் வேன். நடுக்கடலில் விழுந்து உயிரை விடுவேன்..."

"நான் பின்தொடர்ந்து வந்து தங் களைக் காப்பாற்றுவேன். நம் இருவரு டைய புனர்ஜன்மம் ஆரம்பமாகும். கடல்களைக் கடந்து தூர தேசங்களுக்குச் செல்வோம். அங்கே தங்களுக்காக ஒரு மாபெரும் ராஜ்யத்தை ஸ்தாபிப்பேன்."

"ஐயா! இப்படியெல்லாம் பேச வேண் டாம். தென் தமிழ்நாட்டுப் பத்தினிப் பெண்களின் மரபில் வந்தவள் நான். பழுவேட்டரையரின் தர்மபத்தினி..."

"தேவி! என்னிடம் உண்மையைச் சொல்லுங்கள். இந்தக் கிழவரை எதற்காக மணந்து கொண்டீர்கள்? இவர் பேரில் காதல் கொண்டா? அல்லது இவருடைய பலாத்காரத்திற்காகவா?"

நந்தினி பெருமூச்சு விட்டாள். அவளுடைய கண் விழிகள் மேல் நோக்கிச் சென்றன. ஏதோ பழைய துயரமான ஞாபகங்களில் சிறிது நேரம் ஆழ்ந்திருந்தாள் என்று தோன்றியது.

"பாவம்! கிழவர் பேரில் பழி சொல்ல வேண்டாம். மனதார இஷ்டப்பட்டுத் தான் இவரை மணந்தேன்..."

"ஏன்? எதற்காக? இவரிடம் அப்படி என்ன கண்டீர்?"

"இவரிடம் ஒன்றும் காணவில்லை. அரண்மனை வாழ்வுக்கும் அதிகாரத்துக் கும் ஆசைப்பட்டு நானாகவே இவரை மணந்தேன்..."

"என்னால் நம்ப முடியவில்லை."

"நம்ப முடியாதுதான். ஆனாலும் அது உண்மை. சின்னஞ்சிறு பிராயத்திலிருந்து என்னை ஒருத்தி ஏழை என்றும் அநாதை யென்றும் ஏளனம் செய்து வந்தாள். அரச குலத்துப் பிள்ளைகளுடன் விளை யாடும் உரிமை கூடக் கிடையாது என்று சொல்லி வந்தாள். அந்த அவமதிப் பைப் பொறுக்க முடியாமல் இந்தத் தவறைச் செய்தேன்."

"தேவி! அப்படித் தங்களை அவமதித்த பெண் பேய் யார்?"

"தெரியவில்லையா? ஊகிக்க முடியவில்லையா?"

"இளையபிராட்டி குந்தவைதானே?"

"ஆமாம்."

"அவளுக்கு ஒருநாள் நான் புத்தி புகட்டியே தீர்வேன்."

"கடவுளே அவளுக்குத் தண்டனை அளித்து விட்டார். அருமைத் தம்பியும் ஆருயிர்க் காதலனும் ஒரே போக்கில் போய் விட்டார்கள். இப்போது அவளு டைய நிலையை நினைத்தால் எனக்கு அனுதாபமாயிருக்கிறது."

"இந்தத் தண்டனை அந்த அகம்பாவக் காரிக்குப் போதவே போதாது."

"சற்று முன் நான் தங்களை வேண்டிக் கொண்ட காரியத்துக்கு உதவி செய்தால் அவளுடைய தண்டனை பூர்த்தியாகும். சோழ சாம்ராஜ்யத்திற்குத் தனி நாயகி யாயிருக்க வேண்டும் என்ற அவள் ஆசை மண்ணோடு மண்ணாகும்."

"தங்கள் விருப்பத்தை நிறைவேற்று கிறேன். பரிசு என்ன தருவீர்கள்?"

"எது கேட்டாலும் தருவேன். தமிழ்ப் பெண் குலத்தின் மரபுக்கு மாறுபடாத எதைக் கேட்டாலும் தருகிறேன்..."

"ராணி! மேலை நாடுகளில் ஒரு புதிய சமயம் தோன்றியிருக்கிறதாம். அரபு தேசம், பாக்தாத் தேசம், பாரஸீகம் முதலிய தேசங்களில் அது பரவியிருக்கிற தாம். அந்தச் சமயக் கோட்பாட்டின்படி கல்யாணமான தம்பதிகள் விரும்பினால் பிரிந்து விடலாமாம். அதற்கு ஒரு சடங்கு உண்டாம். ஸ்திரீகள்கூட வேறு கலி யாணம் செய்து கொள்ளலாம்."

"ஆம்; நானும் அவ்வாறு கேள் விப்பட்டிருக்கிறேன்."

"நாம் அந்த நாடுகளுக்குப் போய் விடு வோம். அந்தச் சமயக் கோட்பாட்டைச் சேர்ந்துவிடுவோம்..."

"அப்படியெல்லாம் சில சமயம் நானும் பகற்கனவு காண்பதுண்டு. ஆனால் நடக்கக் கூடிய காரியமா?"

''தேவி! ஏன் நடக்காது? அவசியம் நடக்கும். தாங்கள் மட்டும் சம்மதித்தால் நடக்கும். தங்களுடன் கப்பல் ஏறிக் கடல் கடந்து செல்வேன். தூர தேசங்களில் இறங்குவேன். இந்தக் கையில் பிடித்த கத்தியின் வலிமையினால் பெரியதொரு ராஜ்யத்தை ஸ்தாபிப்பேன். நவரத்தினகசிதமான சிங்காதனத்தில் தங்களை ஏற்றி வைப்பேன்! தங்களுடைய சிரஸில் பார்த்தோர் கண் கூசும்படியான



மணி மகுடத்தைச் சூட்டுவேன். இதற்காகவே நான் பிறந்திருக்கிறேன்; இதற்காகவே இவ்வளவு போர்க்களங்களிலும் சாகாமல் உயிரோடு இருந்து வருகிறேன்..."

"ஐயா! அதோ என் கணவர் திரும்பி வந்து கொண்டிருக்கிறார். படகு கரையை நெருங்கி விட்டது. அமைதி அடையுங்கள். மற்ற விஷயங்களைப் பிறகு பேசிக் கொள்ளலாம்..."

"பிறகு எப்போது தேவி?"

"எங்களுடன் தஞ்சாவூருக்கு வாருங்கள்! விருந்தாளியாக வர அழைப்புக் கிடைக்காவிட்டால் சிறையாளியாக வாவது வாருங்கள்!"

"தங்களுடைய அழைப்பே எனக்குப் போதும்" என்றான் பார்த்திபேந்திரன்.

பழுவேட்டரையர் ஏறி வந்த படகு கரையை அடைந்தது. கிழவர் படகிலிருந்து இறங்கி ஆங்காரமே உருவெடுத்தவர் போல் வந்தார்.

நந்தினியும் பார்த்திபேந்திரனும் எழுந்து நின்றார்கள். அவர்களைப் பழுவேட்டரையர் பார்த்த பார்வையில் அனல் பொறி கிளம்பிற்று. பாவம்! அத்தனை நேரம் அவர்கள் சேர்ந்து உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்ததை நினைத்தாலே கிழவருக்குக் கோபமாயிருந்தது. அதை வெளியிடுவதற்கு வழியில்லை. ஆகையால் உள்ளத்தில் கோபம் மேலும் கொதித்துப் பொங்கியது.

"நாதா! கப்பலை நன்கு சோதித்தீர்களா? மாலுமிகளை நன்றாய் விசாரித்தீர்களா? இவர் கூறியதெல்லாம் உண்மை தானா?" என்று நந்தினி கொஞ்சம் குதலை மொழியில் கேட்டாள்.

அந்தக் குரல் பழுவூர் அரசரைக் கொஞ்சம் சாந்தப்படுத்தியது.

"ஆம், ராணி! இவன் கூறியதெல்லாம் உண்மையென்று தெரிந்தது. சோழ நாட்டின் தவப் புதல்வன், சோழ குலத்தின் செல்வக் குமாரன், - தமிழகத்தின் கண்ணின் மணியான இளவரசன், - போய் விட்டான்!" என்று கூறிப் பல்லவனைத் திரும்பிப் பார்த்து, "அதற்குக் காரணமானவன் இதோ நிற்கும் கொலை பாதகச் சண்டாளன்தான்!" என்று கர்ஜித்தார்.

"ஐயா! அதற்குக் காரணம் நான் அல்ல; என் பேரில் பழி போடாதீர்கள்! இளவரசரைக் கடல் கொண்டதற்குக் காரணம் சோழ நாட்டையே ஆட்டுவிக்கும் பெண் உருக் கொண்ட மோகினிப் பிசாசு!" என்றார் பார்த்திபேந்திரன்.

கிழவரின் கோபம் இப்போது அணை கடந்த வெள்ளமாயிற்று. நந்தினியைப் பற்றித்தான் அவன் அவ்வாறு சொன்னதாக எண்ணினார்.

"அடப்பாவி! என்ன சொன்னாய்?" என்று கூறிக் கொண்டு, தரையில் கிடந்த ஈட்டியைச் சட்டென்று குனிந்து எடுத்தார். பார்த்திபேந்திரனைக் குறி வைத்து ஓங்கினார்.

நந்தினி அவருடைய கையைப் பிடித்துத் தடுத்தாள். "நாதா! இது என்ன காரியம்! எத்தனையோ பகைவர்களைக் கொன்ற தங்கள் வெற்றிவேல் இந்த விருந்தாளியின் இரத்தத்தினால் கறைப்படலாமா?" என்றாள்.

"ராணி! இவனா விருந்தாளி? சற்று முன்னால் உன்னைப் பற்றி இவன் கூறியதை நீ கேட்கவில்லையா?" என்றார் கிழவர். கோபத்தினால் அவர் குரல் குழறிச் சொற்கள் தடுமாறின.

"அவர் என்னைப் பற்றியா சொன்னார்? நன்றாய்க் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். அப்படியானால் என் கையிலுள்ள கத்தியினாலேயே பழி வாங்குவேன். தங்களுக்குச் சிரமம் தர மாட்டேன்!" என்றாள் நந்தினி.

"ஐயா! நான் என்ன பைத்தியமா, பழுவூர் இளையராணியைப் பற்றி அவ்விதம் சொல்வதற்கு? பழையாறையில் உள்ள மோகினிப் பிசாசைப் பற்றியல்லவா சொன்னேன்? இளையபிராட்டி குந்தவை வந்தியத்தேவன் என்னும் வாலிபனிடம் இரகசிய ஓலை கொடுத்து இளவரசருக்கு அனுப்பினாள். அந்த முரட்டு வாலிபனைக் காப்பாற்றுவதற்காகவல்லவோ - நான் எவ்வளவு தடுத்தும் கேளாமல்

இளவரசர் அலை கடலில் குதித்தார்? ஆகையால் இளவரசரின் மரணத்துக்குக் குந்தவை காரணம் என்று சொன்னேன்" என்றான் பார்த்திபேந்திரன்.

பழுவேட்டரையர் தம் அவசர புத்தியைக் குறித்துச் சிறிது வெட்கம் அடைந்தார். அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் "வெறுமனே மூடி மறைக்கப் பார்க்காதே! இளவரசரின் அகால மரணத்துக்கு நீயும் பொறுப்பாளிதான். அத்தகைய சுழற்காற்று அடித்த சமயத்தில் அவர் கப்பலிலிருந்து படகில் இறங்குவதற்கு நீ எப்படிச் சம்மதித்தாய்! - தொலைந்து போ! என் கண் முன்னால் நில்லாதே!" என்றார்.

நந்தினி குறுக்கிட்டு, "நாதா! இவரையும் தஞ்சாவூர் அழைத்துப் போவது நல்லதல்லவா? நடந்தது நடந்தபடி இவரே சக்கரவர்த்தியிடம் தெரிவிப்பது நலம் அல்லவா?



இல்லாவிட்டால், ஏற்கெனவே நம் பேரில் குற்றம் சொல்லக் காத்திருப்பவர்கள் இதையும் சேர்த்துச் சொல்வார்களே? நாம்தான் இளவரசரைக் கடலில் மூழ் கடித்து விட்டோம் என்று கூடக் கூசாமல் பழி சொல்வார்களே?" என்றாள்.

"சொன்னால் சொல்லட்டும்! அதற் கெல்லாம் நான் அஞ்சியவன் அல்ல. சொல்லுகிறவன் நாக்கைத் துண்டிக்கச் செய்வேன். ஆனால் இவன் நம்மோடு வரு வதும் ஒரு காரியத்துக்கு நல்லதுதான். - பார்த்திபேந்திரா! ஏன் அங்குமிங்கும் பார்த்து விழிக்கிறாய்? தப்பி ஓடலாம் என்று பார்க்கிறாயா?" என்று கூறிச் சற்றுத் தூரத்தில் நின்ற வீரர்களைக் கைகாட்டி அழைத்தார். நாலு பேர் விரைந்து வந்தார்கள்.

"இவனைப் பிடித்துக் கட்டுங்கள்!" என்று கட்டளையிட்டார்.

வீரர்கள் நாலு பேரும் பார்த்திபேந் திரனை நெருங்கினார்கள். அருகில் நெருங்கி வரும் வரையில் அவன் சும்மா யிருந்தான். பிறகு ஒரு நொடிப் பொழுதில் தன் கைவரிசையைக் காண்பித்தான். நாலு வீரர்களும் நாலு பக்கம் போய் விழுந் தார்கள்.

"ஐயா! என்னைக் கட்டித் தளை யிடுவதாயிருந்தால் மற்றவர்களை அனுப்ப வேண்டாம். வீராதி வீரரும் முப்பத்தாறு போர்க்களங்களில் அறுபத்து நாலு காயங் களை அடைந்தவருமான பெரிய பழு வேட்டரையர் கையினால் கட்டுப்படு வதற்கு நான் சித்தமாயிருக்கிறேன். மற்றவர்களை என் அருகிலும் நெருங்க விட மாட்டேன்!" என்றான்.

பழுவேட்டரையர் முகத்தில் சிறிது மலர்ச்சி காணப்பட்டது. "நீ வீர பல்லவ குலத்தில் பிறந்த வீரன்; சந்தேகமில்லை. எங்களுடன் தஞ்சாவூருக்கு வந்து விட்டுப் போகச் சம்மதம் என்று சொல். உன்னைக் கட்ட வேண்டிய அவசியமில்லை" என் றார்.

"அதுதான் என் விருப்பம்; சக்கரவர்த் தியை நேரில் பார்த்து நடந்தது நடந்தபடி சொல்ல விரும்புகிறேன். என் பேரிலும் வீண் பழி ஏற்படக் கூடாதல்லவா?" என்றான் பார்த்திபேந்திரன்.

"அப்படியானால், உடனே புறப்படு வோம்" என்றார் பழுவேட்டரையர்.

அச்சமயம் அவர்கள் இருந்த இடத்துக்குச் சற் றுத் தூரத்திலிருந்த காட் டிலிருந்து ஆந்தை ஒன்று கூவும் சத்தம் கேட்டது.

நந்தினி சத்தம் வந்த திக்கை நோக் கினாள். அதனால் அவள் முகத்தில் ஏற் பட்ட மாறுதலை மற்ற இருவரும் கவனிக்கவில்லை.

"இந்தக் கோடிக்கரைக் காடு மிக விசித் திரமானது. இங்கே பட்டப் பகலிலேயே கோட்டான் கூவுகிறதே!" என்றார் பார்த்திபேந்திரன்.

இன்னும் இரண்டு தடவை அதே மாதிரி ஆந்தையின் குரல் கேட்டது.

நந்தினி திரும்பிப் பார்த்து, "உடனே புறப்பட வேண்டியதுதானா? இன்னும் ஒருநாள் இங்கே இருந்து பார்ப்பது நல்ல தல்லவா? இளவரசர் ஏதாவது கட்டை யைப் பிடித்துக்கொண்டு கரையில் வந்து ஒதுங்கக் கூடும் அல்லவா?" என்றாள்.

"பார்த்திபேந்திரா! இளையராணியின் மதி நுட்பத்தைப் பார்த்தாயா? நமக்கு இது தோன்றாமல் போயிற்றே? ஆம்; இன்னும் ஒரு நாள் இங்கே இருக்க வேண்டியது தான். இருப்பது மட்டும் போதாது. கடற் கரை நெடுகிலும் ஆட்களை நிறுத்தி வைக்க வேண்டும்; தேடிப் பார்க்கவும் சொல்ல வேண்டும்!" என்றார் பழுவேட் டரையர்.

"எனக்கு ஆட்சேபமில்லை, ஐயா! ஆனால் இளவரசர் இனி அகப்படுவார் என்ற நம்பிக்கை எனக்கில்லை. சுழற்காற்று அடித்தபோது கடலின் கொந்தளிப்பைப் பார்த்திருந்தால் தாங்களும் என்னைப் போலவே நிராசை கொள்வீர்கள்" என்றான் பார்த்திபேந்திரன்.

எனினும், கிழவர் கேட்கவில்லை. கடற் கரை நெடுகிலும் ஒரு காத தூரத்துக்குத் தம் ஆட்களைப் பரவலாக நிறுத்தி வைத் தார். அவரும் அமைதியின்றிக் கடற்கரை யோரமாக அலைந்து திரிந்தார்.

(தொடரும்)

அமரர் கல்கி

# தமிழில் வேண்டுமா?

"தமிழில் முடியுமா?" என்ற ஒரு கேள்வியைக் கேட்டுக்கொண்டு, ராஜாஜி ஒரு புத்தகம் எழுதினார். எப்பேர்ப்பட்ட கடினமான விஞ்ஞான விஷயங்களையும் தமிழில் சொல்லலாம் என்று அப்புத்தகத்தில் நிரூபித்தார். இப்போது திருச்சி ரேடியோக்காரர்கள் "தமிழில் வேண்டுமா?" என்பதாக ஒரு கேள்வியைக் கிளப்பியிருக்கிறார்கள். சங்கீத விஷயமாகத்தான் அவர்கள் இந்தப் பிரச்னையை எழுப்பியிருக்கிறார்கள். பிற பாஷைகளிலுள்ள அரிய பெரிய சாஹித்யங்களைத் தமிழ் என்கிற பெரிய அபாயத்திலிருந்து காப்பாற்றுவதற்காக அவர்கள் ஒரு யுத்தத்தையே ஆரம்பித்திருக்கிறார்கள். இந்தக் காலத்தில் சிலர் "தமிழ்ப் பாட்டு" "தமிழ்ப் பாட்டு" என்று கூச்சல் போடுகிறார்கள் அல்லவா? இது எவ்வளவு அசட்டுத்தனமான கூச்சல், எப்பேர்ப்பட்ட விபத்தில் கொண்டுவிடக் கூடியது என்பதை நிரூபித்துவிட அவர்கள் கங்கணங் கட்டிக் கொண்டிருப்பதாகத் தெரிய வருகிறது.

விஷயம் என்னவென்று பார்ப்போம். இம்மாதம் திருச்சி ரேடியோவில், இரவு 8.30க்கு ஒரு 'ரிகார்டட் புரோகிராம்' நடந்தது. இந்தப் புரோகிராமை முக்கியமாகக் கேட்க வேண்டுமென்று அநேக பிரமுகர்களுக்கும் சாமான்யர்களுக்குங்கூட திருச்சி ரேடியோ ஆபீஸிலிருந்து கடிதம் வந்தது. ஆகவே, ரேடியோ ஆபீஸ்காரர்களே தான் இந்தப் பெரிய ஸாஹித்யப் பாதுகாப்பு இயக்கத்தை ஆரம்பித்து நடத்துகிறார்களென்று நிச்சயிக்கலாம்.



• செம்மங்குடி

புரோகிராமில், இரண்டு ஸம்ஸ்கிருதப் பாட்டுகள், ஒரு ஹிந்துஸ்தானி பாட்டு, ஒரு கன்னடப் பாட்டு இவைகளை எடுத்துக் கொண்டு, அதே மெட்டுகளில் அமைந்துள்ள தமிழ்ப் பாட்டுக்களையும் எடுத்துக்கொண்டு, கிராமபோன் பிளேட்டுக்களை வைத்து, தராதரத்தை ஒப்பிட்டுக் காட்டினார்கள். பழைய ஸாஹித்ய மெட்டுக்களில் புதிய தமிழ்ப் பாட்டுகளை அமைத்தது பிசகு, அநியாயம் என்று நிரூபிப்பதுதான் அவர்களுடைய நோக்கமென்று தெரிந்தது.

நல்லது. பிசகு என்ன; அநியாயம் எது என்று இப்போது பார்க்கலாம். அவர்கள் எடுத்துக் காட்டிய ஸம்ஸ்கிருதப் பாட்டுக்களில் ஒன்று "மானஸ ஸஞ்சரரே"; இன்னொன்று "துங்கதரங்கே கங்கே". இவையிரண்டும், ஸ்ரீ ஸதாசிவ பிரம்மேந்திரரின் பாட்டுக்கள்; அற்புதமான பாட்டுக்கள், சந்தேகமில்லை.

இதே பாட்டுக்களின் மெட்டில், இரண்டு தமிழ்ப் பாட்டுக்கள் இசைத்தட்டில் வெளியாகியிருக்கின்றன. இதில் ஆட்சேபிக்கத் தக்கதென்னவென்று பார்ப்போம். பிரம்மேந்திரரின் ஸாஹித்யத்தை இவர்கள் அபகரித்துக் கொள்ளவில்லை; ஆகவே, அதைப் பற்றி யாரும் குறை சொல்வதற்கில்லை. வர்ண மெட்டுக்களைத்தான் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், இந்த மெட்டுக்கள் யாருடைய மெட்டுக்கள்? பிரம்மேந்திரர் அமைத்த மெட்டுக்களா? ஒருநாளும் இல்லை. அவை, செம்மங்குடி சீனிவாசய்யரின் மெட்டுக்கள். பிரம்மேந்திரரின் ஆதி வர்ணமெட்டு என்னமோ, யாருக்கும் தெரியாது. அவருடைய பாட்டுக்களை பஜனை சம்பிரதாய முறையில் காமா சோமா என்று பாடிக் கொண்டிருந்தார்கள். அவற்றுக்கு அழகான மெட்டமைத்து, கேட்போர் பரவசமாகும்படி உருப்படுத்தியவர் செம்மங்குடி சீனிவாசய்யர். ஆகவே, செம்மங்குடி வேண்டுமானால், அந்த மெட்டுக்களில் தமிழ்ப் பாட்டுப் பாடியவர்கள் மீது 'காபிரைட்' வழக்குத் தொடரலாம். இதற்கு, சட்டம் இடங் கொடுக்கிறதா என்று வக்கீல்களுடன் கலந்தாலோசிக்க வேண்டும்.

ஆனால் செம்மங்குடி சீனிவாசய்யர் 'காபிரைட்' கேஸ் போடும்போது, தமிழில் பாடியவர்கள் மீது மட்டும் கேஸ் போட்டுப் பிரயோஜனமில்லை. மெட்டுக்காகக் கேஸ் போடுவதென்றால், "துங்கதரங்கே" பிளேட் கொடுத்தவர்மீதும் கேஸ் போட வேண்டும். ஏனெனில், அந்த இசைத்தட்டு ஸ்ரீ சீனிவாசய்யர் கொடுக்கவில்லை; அவருடைய மெட்டில் அசல் ஸாஹித்யத்தை குமாரி சூடாமணி என்னும் குழந்தை கொடுத்திருக்கிறாள். அந்த இசைத்தட்டைத் தான் திருச்சி ரேடியோக்காரர்கள் வைத்தார்கள்!

குமாரி சூடாமணி இனிமையான குரலில் அழகாகத்தான் பாடியிருக்கிறாள். ஆனால், அது பிரம்மேந்திரர் அமைத்த மெட்டல்ல; செம்மங்குடியின் மெட்டு. தமிழ்ப் பாட்டும் அப்படித்தான்.

இருக்கட்டும்; ஸ்ரீ சதாசிவப் பிரம்மேந்திரரின் அசல் மெட்டுக்கள் அவை என்றே வைத்துக் கொள்வோம். அப்படியானால், அந்த மெட்டுக்களில் தமிழ்ப் பாட்டுக்கள் அமைப்பது மகாபாதகமா?

பிரசித்தி பெற்ற வர்ண மெட்டுகளில் வேறு பாட்டுக்கள் அமைப்பது இன்று நேற்றல்ல. வெகு காலமாக நமது நாட்டில் நடந்து வந்திருக்கிறது. நாடகங்களிலேயெல்லாம் இது சர்வ சாதாரண வழக்கம். இதனால், அசல் வர்ணமெட்டுப் போட்டவர்களுக்குக் கௌரவமே தவிர நஷ்டம் எதுவும் கிடையாது. ஒரு பாட்டின் மெட்டில் இன்னொரு பாட்டுப் போட்டார்கள் என்றால், அசல் மெட்டு உயர்ந்தது என்றுதான் அர்த்தம். அப்படித்தான் நமது ஜனங்கள் கருதுகிறார்கள்; இன்னமும் கருதி வருகிறார்கள்.

இதை ஒரு பிசகான காரியமென்றோ, ஆதி ஸாஹித்ய கர்த்தாவுக்கு துரோகம் செய்வதென்றோ யாரும் கருதியதில்லை. தெலுங்கு, ஸம்ஸ்கிருதப் பாட்டுக்களின் மெட்டுக்களை மட்டுமல்ல; பிரபலமான தமிழ்ப் பாட்டுக்களின் மெட்டுக்களைக்கூட மற்றவர்கள் கையாண்டிருக்கிறார்கள். நமது தேசிய கவி ஸ்ரீ சுப்பிர

மணிய பாரதியாரே கையாண்டிருக்கிறார். **நந்தன் சரித்திரப் பாட்டுக்களின் மெட்டில் அனேக தேசிய கீதங்களைப் பாரதியார் அமைத்திருக்கிறார்!** அவரை என்ன செய்யலாம்? ஸ்ரீ கோபால கிருஷ்ண பாரதிக்கு துரோகம் செய்து விட்டதாக, தேசிய கவி பாரதியை திருச்சி ரேடியோ கோர்ட்டில் கொண்டு வந்து நிறுத்தலாமா?

அது அவ்வளவு மகத்தான பாதகமாயிருந்தால், பாரதியார் செய்திருக்க மாட்டார். பாரதியார் செய்தது குற்றமாயிருந்தால், அதே குற்றத்தைக் கேவலம் நாடகக்காரர்களும் டாக்கிக்காரர்களும் செய்வதற்காக அவர்கள் மேல் நாம் எரிந்து விழுவதில் பயனில்லை.

உண்மையில், அசல் சாஹித்ய கர்த்தாக்கள் தங்களுடைய வர்ண மெட்டுக்களில் வேறு பாட்டுக்களை அமைத்தவர்கள் மேல் கோபித்துக் கொள்ள மாட்டார்கள். அது தமிழாயிருந்தால்கூடக் கோபித்துக் கொள்ள மாட்டார்கள்! தமிழின்மேல் அவர்களுக்கு அவ்வளவு துவேஷம் – திருச்சி ரேடியோகாரர்கள் நினைக்கிறபடி – இருந்திருக்க நியாயமில்லை. ஆனால், இந்த இசைக் கவிஞர்களுக்கு வேறு சிலர் மேல் கட்டாயம் கோபம் வரும். யார் மேல் என்று சொல்லவும் வேண்டுமா?

இன்றைய தினம் ஸ்ரீ சதாசிவப் பிரம்மேந்திரர் வானுலகிலிருந்து தமிழ் நாட்டுக்குத் திரும்பி வந்து பாட்டுக் கச்சேரிகளும் இசைத் தட்டுகளும் கேட்பதாக வைத்துக் கொள்வோம். மேற்படி தமிழ்ப் பாட்டுக்கள் பாடியிருப்பவர்கள் மீது அவருக்குக் கோபம் வரவே நியாயமில்லை. ஏனெனில், அவை அவருடைய ஸாஹித்யமும் அல்ல; அவருடைய வர்ண மெட்டுக்களுமல்ல.

ஆனால், அவருக்கு வேறு யார் மேல் கோபம் வரும்? தாம் போட்ட மெட்டை மாற்றிப் பாடுவதற்காக ஸ்ரீ சீனிவாசய்யர் மேல் அவருக்குக் கோபம் வரலாம். ஒருவேளை, "ஆஹா! நம்முடைய பாட்டை இந்தச் செம்மங்குடி எவ்வளவு ஜோராய்ச் செய்து பாடுகிறார்?" என்று சந்தோஷமும் அடையலாம்.

ஆனால், அவருக்கு வேறொரு விஷயத்தில் நிச்சயமாகக் கோபம் வரும். தம்முடைய சாஹித்யத்தைச் சித்திரவதை செய்து, அர்த்தத்தை அனர்த்தமாக்கிப் பாடுகிறார்களே, அவர்கள் பேரில் அளவில்லாத கோபம் கட்டாயம் வரும். அவர் எப்போதாவது திருச்சி ரேடியோவை முடுக்கிவிட்டுக் கேட்டாரானால், தம்முடைய அற்புத ஸாஹித்யங்களை எப்படி எப்படியெல்லாம் பாடகர்கள் கொலை செய்கிறார்கள் என்பதைக் கவனித்தாரானால், உடனே திருச்சிக்கு வந்து, ரேடியோ நிலையத்தையே சாபங்கொடுத்து பஸ்பீகரமாகச் செய்து விடுவார்!

ஆகவே, பழைய சாஹித்ய கர்த்தாக்களின் புனிதத் தன்மையைத் திருச்சி ரேடியோக்காரர்கள் காப்பாற்ற விரும்பினால், அதற்கு வேறு வழியைக் கையாள வேண்டும். **ஸ்ரீ தியாகராஜர், பிரம்மேந்திரர், தீக்ஷிதர் முதலிய மகான்களின் கீர்த்தனங்களை, அவரவர்கள் அமைத்த அசல் மெட்டுக்களிலேயே பாடும்படி வித்வான்களைக் கட்டாயப்படுத்த வேண்டும்! அதைவிட முக்கியமாக, ஸாஹித்யத்தில் ஒரு பிழைகூட இல்லாமல் பாடச் செய்ய வேண்டும்.** தெலுங்கு, ஸம்ஸ்கிருதம், கன்னடம், துளுவம், மலையாளம், ஹிந்துஸ்தானி – ஏழைத் தமிழிலேகூடத் தான் – பாட்டுக்களைப் பிழையில்லாமல் பாடச் செய்ய வேண்டும். இப்படிச் செய்வதாகத் திருச்சி ரேடியோக்காரர்கள் உறுதி கூறினார்களானால், கர்நாடக சங்கீதத்தைத் திருச்சி ரேடியோவில் தவிர வேறே எங்கேயும் கேட்பதில்லையென்று சங்கீதாபிமானிகள் பலர் விரதங் கொள்ளத் தயாராயிருப்பார்கள்.

ஆனால் அப்போதுங்கூட, தமிழ்ப் பாட்டுக்கள் வேண்டாம் என்று தமிழர்கள் சொல்ல மாட்டார்கள். திருச்சி ரேடியோவில் மேற்படி பிரசங்கத்தைச் செய்தவர், **"அசல் ஸாஹித்யங்களையே நாம் கேட்டு அநுபவிக்க முடியாதா? தமிழில் வேண்டுமா?"** என்று கேட்டார். இவரைப் போல் பல பாஷை நிபுணரா

யிருந்தால், தமிழில் வேண்டியதில்லை. ஆனால், தமிழ்நாட்டில் தமிழ் மட்டும் தெரிந்தவர்களுக்குத் தமிழில் வேண்டித் தான் இருக்கிறது! எந்தத் தமிழ் டாக்கிக் கொட்டகையில் பார்த்தாலும் இது தெரிய வரும். எந்த கிராமபோன் கம்பெனியில் கேட்டாலும் தெரிய வரும். அன்று வைத்த பிளேட்டுகளில் வேறு பாஷைப் பாட்டு அதிக விற்பனையாகி யிருக்கிறதா, தமிழ்ப் பாட்டு அதிகம் விற்பனையாகியிருக்கிறதா என்று கிராமபோன் கம்பெனியைக் கேட்டால் விஷயம் விளங்கி விடும். ஒரு பிளேட்டு விஷயத்தை நான் விசாரித்தேன். **ஸம்ஸ்கிருதப் பிளேட்டை விடத் தமிழ்ப் பிளேட்டு ஒன்பது மடங்கு அதிகம் விற்பனையாகியிருக்கிறது!**

ஸம்ஸ்கிருதத்திலோ, தெலுங்கிலோ, கன்னடத்திலோ உள்ள ஸாஹித்யம் எவ்வளவோ மேலானதாயிருக்கலாம். ஆனால், அந்த பாஷைகள் தெரியாதவர்களுக்கு அவற்றினால் ஒரு பிரயோஜனமுமில்லை. உதாரணமாக, பிரம்மேந்திரரின் பாட்டில், சரணத்தின் முதல் இரண்டு அடிகளைப் பாருங்கள் :-

"தூரீக்ருத ஜன பாபஸமூஹே
பூரித கச்சப குச்ச க்ராஹே"

இதே இடத்தில் "பாரத புண்யபூமி" என்ற தமிழ்ப் பாட்டில் வரும் வரிகளைப் படியுங்கள்:-

"முன்னைப் பழம் புகழ்
சீர்வளம் ஓங்கும்
உன்னை நினைந்திடில்
பாபம் நீங்கும்"

தமிழர்களின் காதுக்கு எது நன்றாயிருக்குமென்று நினைக்கிறீர்கள்? மனதுக்குத்தான் எது உற்சாகமளிக்குமென்று கருதுகிறீர்கள்?

இந்த 'ரிகார்டட் புரோகிரா'மைப் பற்றி இன்னும் ஒரே ஒரு வார்த்தை. மேற்படி சங்கீத சாஹித்ய சகல பாஷா நிபுணர், **"தமிழில் வேண்டுமா?"** என்ற கேள்வியுடன் தமது இங்கிலீஷ் பிரசங்கத்தை முடித்தபோது, **"இது இங்கிலீஷில் வேண்டுமா?"** என்று எனக்குக் கேட்கத் தோன்றிற்று. நிஜமாக, இந்தப் பிரசங்கத்தை ஏன் இங்கிலீஷில் செய்தார்கள்? தமிழர்களின் முட்டாள் தனத்தை வெளியூருக்கெல்லாம் தெரிவிக்க வேண்டுமென்ற எண்ணமா? அதுவும் இருக்க நியாயமில்லை. ஏனெனில், திருச்சி ரேடியோவை, சென்னையிலேயே சிரமப்பட்டுத்தான் கேட்க வேண்டியிருக்கிறது. சென்னைக்கு வடக்கே கேட்கப் போவதில்லை. இங்கிலாந்தில் நிச்சயமாகக் கேட்காது. பின் எதற்காக இங்கிலீஷ் பிரசங்கம்?

வேறு பாஷை ஸாஹித்யங்களின் நயத்தைக் காட்ட நினைத்ததுபோல், இங்கிலீஷ் பாஷையின் அழகையும் எடுத்துக் காட்டுவது நோக்கமா? அதற்கும் அவசியம் இருப்பதாகத் தெரியவில்லை. இப்போதெல்லாம் நமது ரேடியோ ஸெட்டுக்களில் லண்டன் பி.பி.சி. புரோகிராம்களை நன்றாகக் கேட்க முடிகிறது. அவர்கள் இங்கிலீஷ் அற்புதமாய்ப் பேசுகிறார்கள். அது அவர்களுடைய தாய்பாஷையாகையால் நன்றாய்ப் பேசுகிறார்கள். அவர்களுடைய பேச்சைக் கேட்டுவிட்டு, திருச்சி ரேடியோவிலும் இங்கிலீஷ் பேச்சைக் கேட்கும்போது - மன்னிக்க வேண்டும் - அவ்வளவு ரஸிக்கவில்லையென்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது.

திருச்சி ரேடியோவில், கிராமாந்தர நிகழ்ச்சிகள் வெகு நன்றாயிருக்கின்றன; மிகவும் உபயோகமான விஷயங்கள் சொல்லப்படுகின்றன. இந்த நிகழ்ச்சிகளில், கிராமிய பாஷையை மிக அழகாகக் கையாளுகிறார்கள். எந்த இங்கிலீஷ்காரனாவது தமிழை இந்த மாதிரி முறையில் கையாள முடியுமா? அது மாதிரியே, இந்தியர்கள் இங்கிலீஷ்காரர்களைப் போல் இங்கிலீஷ் பேச முடியாததிலும் வியப்பில்லை. ஆகவே, "தமிழில் வேண்டுமா?" முதலிய கேள்விகளைக் கேட்கும்போது, தமிழிலேயே கேட்டு விட்டால் ரொம்ப நன்றாயிருக்கும்.

ஒருவேளை, "தமிழே சங்கீதத்துக்கு எடுத்த பாஷையில்லை; ஆகையால், சங்கீத விவாதத்தையும் தமிழில் நடத்த முடியாது" என்று கருதியிருந்தால், ரொம்ப சந்தோஷம். அதற்கு மேல் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை!

**(ஆனந்தவிகடன் 19.11.1939)**

## நேற்று ஜோஷி; இன்று மானே, நாளை கோலாப்?

ஜோஷியின் மாப்பிள்ளை வியாஸ் சம்பந்தப்பட்ட நில ஊழல் வழக்கில் உருண்டிருக்கும் அடுத்தத் தலை, அர்பன் டெவலப்மெண்ட் மினிஸ்டர் ரவீந்தர மானேவினுடையது. (முதலாவதுதான் முன்னாள் முதல்வருடையதாயிற்றே!) ''ஸ்டேட் மினிஸ்டர்தானே? அவ்வளவு கடுமையாக தண்டனை கிடைக்காது'' என்றுதான் எல்லோரும் நினைத்தார்கள். ஆனால் சிவசேனையின் 'க்ளீன் இமேஜ்' தாகத்தை



# வெளியே 'ச்சொ..ச்சொ' உள்ளே 'ஹா ஹா'

ராஜினாமா கொடுத்த மானேவின் கண்ணீரால்தான் தீர்க்க முடிந்தது! அநேகமாக அடுத்த பலி, சமூக நலத்துறை அமைச்சர் 'பாபன்ராவ் கோலாப்'பாகத்தானிருக்கும். அவர் மீதும் எக்கச்சக்க வழக்குகள் உண்டே? இதேரீதியில் கத்திகரிப்பு நடந்தால், கட்சியில் யாராவது மிஞ்சுவார்களா என்று வெளியே 'ச்சொ..ச்சொ'வும் மனசுக்குள் 'ஹா...ஹா...'வுமாகக் காத்திருப்பவர்கள் – எதிர்க்கட்சியெல்லாமில்லை; சாட்சாத் பி.ஜெ.பி.காரர்களேதான்! அதேபோல், மின்சார வாரிய ஊழல் வழக்கில் மாட்டிக் கொண்டிருக்கும் முண்டேவின் கதி என்னவாகப் போகிறதோ என்ற தவிப்பில் இருப்பவர்கள், – வேறு யார்? சிவசேனைக்காரர்களேதான்!

## அரைகுறைக்கு ஆபத்து!

சட்ட விரோதமான கட்டடங்களை இடிப்பது - அதிலும் பிரபலங்களின் (ஜோஷி மாப்பிள்ளை, சுரேஷ் கல்மாடி எம்.பி, ஹாலிடே இன்காரர்கள், டெக்கான் ஜிம்கானாகாரர்கள்) கட்டடங்களை இடிப்பது அதுவும் அரசு ஆணையை மீறி இடிப்பது எவ்வளவு புத்திசாலித்தனம் என்பதை ஆறே நாட்களில், புனே முனிசிபல் கமிஷனர் பதவியிலிருந்த அருண்பாட்டியா புரிந்து கொண்டிருக்கலாம். இத்தனைக்கும், குறுகிய பணிக்காலத்தில் இருபதுக்கும் மேற்பட்ட ட்ரான்ஸ்ஃபர்களைச் சந்தித்திருக்கிறார்! போனால் போகிறது, 'மாற்றங்களைப் பெற்ற மகராசன்' என்று, பட்டம் கிட்டம் சூட்டி கௌரவிக்கலாமா என்று நினைத்தால், அங்கேயும் ஒரு நடங்கல்! 1962வில் ஒரே நாளில் ஆறுமுறை ட்ரான்ஸ்ஃபராக்கப் பட்டவர்' என்ற தகுதியுடன் சேஷன் போட்டிக்கு வருகிறாரே? அரசுப் பணியில் இருந்துகொண்டே அரசை எதிர்க்கும் அசட்டுத் தனத்தை தாக்கரேவுடன், சேஷனும் சாடியிருக்கிறார். ஆனால் அண்ணா ஹசாரேவிலிருந்து, ஆயிரமாயிரம் பொது மக்கள் வரை ஆதரவளிக்க, 'இடி மன்னர்' களுக்கும் வெகுஜன பிராபல்யத்தை மனத்தில் கொண்டு, இனி சட்டவிரோதமான கட்டடங்கள் அரைகுறையாக நின்றிருந்தால் மட்டுமே இடிக்கலாம்; முழுசாக இருந்தால், ஏதாவது அபராதம் விதித்து, சட்டத்துக்குட்பட்டதாக ஆக்கிவிடலாம் என்ற சட்டத்தைக் கொண்டு வரலாமா என தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். செய்வன திருந்தச் செய் (அது சட்ட விரோதமான கட்டடம் கட்டுவதாக இருந்தாலும்)

என்று சும்மாவா சொன்னார்கள்?

## WHALE! WHALE! வெற்றி WHALE ஆ?

மும்பையில், கஃப் பரேட் பகுதியைச் சேர்ந்த மச்சிமார் நகர் மீனவர்கள், எட்டு மணி நேரம் கஷ்டப்பட்டு, ஒரு 23 அடி நீள, 12 டன் எடையுள்ள, பூதாகார மீனைப் போன்ற 'Whale Shark'ஐப் பிடித்தார்கள். அதைக் கரை ஏற்றுவதற்குள் உன்பாடு என் பாடாகி விட்டது! அதுவும் பாவம், மூன்று மணி நேரம் உயிருடன் போராடியபின் ஒரேயடியாக 'கரை சேர்ந்து' விட்டது. அதன் முதுகில் மீனவக் குழந்தைகளெல்லாம் வெற்றிக் களி நடம் புரிந்தார்கள்; மறுநாள் அதை ஏலம் விட்டார்கள். சிலர் இரண்டாயிரத்துக்குப் போயிற்றென்கிறார்கள்; சிலர் அதன் ஈரலிலிருந்து எண்ணெய் எடுக்கலாமென்பதால், ஐயாயிரத்திற்கு ஏலம் விடப்பட்டது என்கிறார்கள். எதுவாக இருந்தாலும், இதெல்லாம் அதைப் பிடிக்கும்போது வலைகளுக்கேற்பட்ட சேதத்துடன் ஒப்பிட்டால், ஒன்றுமே இல்லை! அந்தச் சேதத்தைச் சரிக்கட்டவே இதைப் போல் பன்மடங்கு செலவாகுமாம். 'நெட்லாஸ்' என்று இதைத்தான் சொல்கிறார்களோ?

## 'ஆர்ஜீ' படம் ரிலீசான ஒரு தியேட்டர் வாசலில் கேட்டது: —

"சே, என்னப்பா! அப்போ அமிதாப்போட 'லாவாரிஸ்'; இப்போ அக்ஷய் கன்னாவோட 'லாவாரிஸ்'; முன்னே ராஜேஷ்கன்னா நடிச்ச 'தாக்' இப்போ சஞ்சய்தத் நடிக்கற 'தாக்' ; எப்பவோ ஒரு 'கச்சே தாகே'; இப்ப அஜய்தேவ்கன்னோட ஒரு 'கச்சே தாகே'; அதேபோல மின்ன ஒரு ஆர்ஜீ! இப்ப அக்ஷய் குமார் நடிச்ச 'ஆர்ஜீ'... சொதப்பறாங்க!"

"நல்லவேளை; அதே கதை; அதே நடிகர்களைப் போட்டு ரீமிக்ஸ் - ரீமேக்கா எடுக்காம இருக்காங்களே... அதைச் சொல்லு..."

இதுவன்றோ பாஸிடிவ் திங்கிங்?

— ஜெயஸ்ரீ ராஜ்



## வைக்கம் முகம்மது பஷீர்  தமிழில் : வையவன்

தேவியின் கடிதத்திற்குப் பதிலாக நான் ஒரு சிறு குறிப்பு மட்டும் எழுதிக் கொடுத்தேன்.

"தப்பபிப்பிராயங்கள் எதுவும் இல்லை. நீங்கள் கடிதம் அனுப்பியது நல்லதாயிற்று. எதிர்பாராத அனுக்கிரகம் போல அது வந்தது. அந்தக் கடிதத்தைத் திருப்பி அனுப்புவதாக இல்லை.

நான் ஒரு சீரியஸான கடிதம் எழுதப் போகிறேன் என்று பயமுறுத்தி வைக்கிறேன்."

அந்தப் பயமுறுத்தலைச் செயல்படுத்தியது ஒரு வாரம் கழித்துத்தான். நான் மிகவும் யோசித்தேன். எழுதினால் என் காதல் பாய்ந்தடித்துக் கொண்டு வெளி வருமே! அதற்கு என்ன விளைவு?

நான் எதிலும் படாமல் தீர்க்கமாக ஒரு கடிதம் எழுதினேன்.

"எனக்கும் தேவியைப் பிடிக்கிறது கண்ட உடனே சரஸ்வதி தேவி ஒரு துயரின் இனிமை கலந்த மோகன கவிதை - எ லாட் ஸ்வீட் போயம் என்று தோன்றக் காரணம் என்ன!

தவிர வாழ்க்கையின் சீர்கேடுகளை மட்டுமே சித்திரிப்பது அல்ல முற்போக்கு இலக்கியம். மனித சமுதாயத்திற்கு ஒரு முன்னேற்றம் உண்டு என்று நம்பி உணர்வுபூர்வமாக எழுதி வருகிறவர்கள் தான் முற்போக்கு இலக்கியவாதிகள்.

தற்கால இலக்கியம் வாழ்க்கையின் ஒரு கண்ணாடி என்று கருதுங்கள். அதில் எல்லாம் வரும். மனசின் உல்லாசத்திற்கு மட்டும் இலக்கியம் படைப்பவர்கள் அல்ல முற்போக்கு இலக்கியவாதிகள். உங்கள்

கருத்துக்கள் சரியா தவறா என்று சொல்ல வரவில்லை நான்.

ஆனால் அவற்றுடன் ஒத்துப் போக முடியாததில் வருத்தம் உண்டு. அந்தக் குறிப்பிட்ட நபரின் கட்டுரை வெறும் சிறுபிள்ளைத்தனம்! அதைப் பற்றி அவ்வளவுதான் சொல்ல வேண்டும். தற்காலிகமாகக் கடிதத்தைச் சுருக்கிக் கொள்கிறேன். மனசிற்கும் உடம்பிற்கும் நலமில்லை. நீங்கள் நலமென்ற நம்பிக்கையோடு நல்வாழ்த்துக்களுடன்.''

இப்படி ஒரு கடிதம் எழுதி அவள் வீட்டு விலாசத்திற்கு அனுப்பினேன். கடிதத்தை ஒரு பெரிய நோட்டுப் புத்தகத்தில் பிரதி எடுத்துக் கொண்டுதான்.

அதற்குப் பதில் வர சில நாட்கள் ஆயின. பதில் வராது என்று நினைத்துக் கொண்டிருந்தபோதுதான் பதில் வந்தது.

'**பி**ரிய நண்பரே,

கலையின் லட்சியம் நல்வழிப்படுத்தும் நோக்கம்தான் என்பதை நம்பாத கலைஞனை எனக்குப் பிடிக்கவில்லை. எனினும் தனிப்பட்ட முறையில் வெறுப்பு இல்லை. தங்கள் நலக்குறைவு விரைவில் குணமாக நான் பிரார்த்திப்பேன்.

மொழியன்னைக்கு எழுத்து மலர்களைச் சமர்ப்பிக்க, மனித சமுதாயத்தின் மேம்பாட்டுக்கு உதவ, வேண்டிய சக்தியை, தங்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணன் – இறைவன் – தரட்டும்.

தங்களுடைய அடுத்த கடிதத்திற்கு ஒருக்கால் பதில் எழுதுவேன் என்பது இயலாமல் போகலாம். எனினும் தங்களை எனக்குப் பிடிக்கிறது. ஆட்சேபணை இல்லை என்றால் தங்கள் நிலையான முகவரியை எனக்குத் தரவேண்டும். என் ஞாபகத்திற்காக ஏதாவது தாங்கள் கேட்க வேண்டுமென்று நான் கருதுவது சரியில்லாத ஆவலா?

நான் உலகப் புகழ்பெற்ற ஒரு நூலைத் தருகிறேன். ரிஷிகளின் நாட்டின் உன்னத புருஷரான மகாத்மா காந்தியின் சுயசரிதை. அதில் என் பெயர் எழுதியதால் மட்டுமே அது களங்கமுற்றது.

என் இரண்டு கடிதங்களையும் என் கல்லூரி விலாசத்தில் எதிர்பார்க்கிறேன். திருப்பி அனுப்பவும். அனுப்பாமல் விடுவது ஆண்மையல்ல.

தங்களை ஈஸ்வரன் காப்பாராக.

நல்லன்புடன்,
சரஸ்வதீ தேவி.

**அ**தற்கு நான் உடனே பதில் அனுப்பவில்லை. ஒரு நாள் தாமதித்தேன். ஹிந்தி தெரியும் என்று தேவி சொல்லியிருந்தாள். சில கதைகளை ஹிந்தியிலிருந்து மலையாளத்தில் மொழிபெயர்க்கச் சொன்னேன்.

தேவி அப்போதுதானே சொந்தமாக ஒரு கதை எழுதியிருப்பதாகச் சொன்னாள். என்னுடைய கதையின் ஒரு தழுவல்.

"எனக்குப் பிடிச்ச எழுத்தாளரோடதைத் தழுவி எழுதியிருக்கேன். தப்பா எடுத்துக்க வேண்டாம். பிழை இருத்தித் தரணும்."

அடுத்த நாளும் அவளைக் கண்டேன். நான் வாசற்படியில் நின்றிருந்தேன். தேவி கல்லூரியில் இருந்து திரும்பிக் கொண்டிருந்தாள். மாலை நேரம். என்னைப் பார்த்ததால் ஒதுங்கி வழி விட்டு என்னைக் கடந்து போனாள். பார்த்துப் புன்னகை செய்தாள்.

துயரின் இனிமை கலந்த மோகன காவியமே!

கையில் ஒரு பெரிய பூச்செண்டு. ஏதோ சொற்பொழிவில் கிட்டியதாய் இருக்கலாம். நான் யூகித்தேன். அதை மிகவும் மதிப்போடு பிடித்திருந்தாள். அவள் தலைமுடியை இறுக முடிந்திருந்ததால் எனக்கு வெறுப்பு வந்தது.

எழுதத் துவங்கும் முன் பாகப் பெரிய புராணம், ராமாயணம், தாயுமானவர் பாடல்களை மனசில் உருப் போடும் பழக்கம் இருக்கு. அப்போதான் எழுதறதுக் குண்டான ஒரு கதகதப்பு கிடைக்கும். எழுதும்போது நிறைவான ஒரு கட்டம் வந்தா ஒரு டீ குடிப் பேன். கவிதைல சிறப்பான ஒரு வரி வந்துட்டாக் கூட, அதைக் கொண்டா டும் விதத்தில் ஒரு டீ குடிப்பேன். எழுதி முடிச்சதும், எழுதினதை அசை போட்டுக்கிட்டே ஒரு 'வாக்' போய்ட்டு வருவேன்.

— ஞானக்கூத்தன்



அரைமணி நேரம் கழித்து அவள் வீட்டிற்குப் போனேன்.

மேடையில் பேசியதால் நெஞ்சு வலி என்றாள். என்னிடம் ஒரு புத்தகம் தேடிக் கண்டுபிடித்துத் தர வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். போதனா முறையைப் பற்றி விளக்குவது. தேடிக் கண்டுபிடிப்பதாகச் சொல்லி விட்டு நான் திரும்பி வந்தேன்.

இரவு தேவிக்கு நிறையக் கடிதங்கள் எழுதினேன். ஒன்றையும் அனுப்பவில்லை. இதயம் கொஞ்சம் அதிகமாகவே பிளந்து போகிறது. என்றாலும் சிந்தனை, தேவி தான். பதில் எழுதாதிருக்க முடியாது. கடிதங்களைத் திருப்பி அனுப்பாவிட்டால் என்ன?

"என் கடிதங்களை ஏன் திருப்பி அனுப்பலே?"

அடுத்த நாள் கல்லூரி செல்லும் போது வழியில் தேவி கேட்டாள். நான் சொன்னேன்.

"அனுப்பலே"

"அனுப்பணும்."

"அனுப்பறேன்."

"வீட்டுக்கு இல்லே. காலேஜுக்கு"

"நெனவிருக்கு."

"ஓ!" தேவி நடந்தாள்.

மறுபடியும் தலைமுடியை இறுக்கி முடிந்து அப்பம் போலப் பின்னால் கட்டி வைத்திருக்கிறாள்! ஆடைகள் உடலுக்குப் பொருந்தாதவை போலிருக்கின்றன!

அன்று நாலரை மணிக்கோ ஐந்து மணிக்கோ மீண்டும் தேவியைக் கண்டேன். வீட்டை அடுத்துள்ள இடை வழியில். பேச்சின் நடுவில், தான் ஒரு புரட்சிக்காரி என்று சொன்னாள்.

"என்ன புரட்சி?" எனக்குச் சிரிப்பு வந்து விட்டது.

"காலேஜ்ல புரொபசருங்க எல்லாம் சொல்றாங்க!"

"எல்லோரோடவும் ஓடி நின்னு சிரிச்சுப் பேசறதால இருக்கலாம்! எனக்கு அதிலே எந்தப் புரட்சியும் தெரியலே!"

இடையில் பேச்சாளியும் பெரிய டிகிரி வாங்கியவளுமான பிரபலமான வேறொருத்தியின் விஷயம் வந்தது. என்னைக் கல்லூரியில் பேசுவதற்கு தேவி மீண்டும் வலியுறுத்துகையில் நான் சொன்னேன்.

"அந்த அம்மணிகிட்டே வேணும்னா நான் சொல்றேன். அவங்க வந்து பேசுவாங்க."

"அவ கெட்டவ"

"என்ன கெட்டவ? ஜாக்கிரதையாய் பேசுங்க. அவர் என்னோட சிநேகிதி" – நான்.

தேவிக்கு ஆத்திரம் தலைக்கேறியது.

"ஓ! அவளோட ஒடம்பு, மனசு ரெண்டின் சரித்திரமே எனக்குத் தெரியும். அவ ஒங்களோட சிநேகிதியா இருக்கலாம். ஒங்களோட ஆராதகியா இருக்கலாம்... ஒங்களோட..."

சீற்றத்துடன் திரும்பி சுவரில் இருந்து ஒரு சிறிய புல்லைப் பிடுங்கி ஆத்திரமாகப் பிய்த்துத் தூர எறிந்தாள். விஷயத்தை மாற்ற நான் கேட்டேன்.

"எழுதிய கதை எங்கே?"

"அது நல்லால்லே."

"பரவாயில்லே. நாம நல்லதாக்கலாம்."

"இலக்கியத்திலே நான் பிரவேசிக்கணும்னா நீங்க நல்லா எனக்கு கைப்பிடிச்சு வழிகாட்டணும்."

"ஓ... சம்மதம்!"

அன்று சாயந்திரம் நான் முன்பு குடியிருந்த தேவியின்

அடுத்த வீட்டிற்குச் சென்றேன். அப்போது அங்கே குடிவந்த எனது சில கம்யூனிஸ நண்பர்களைப் பார்க்க.

நான் அங்கே போனதும் என்னைப் பார்த்தோ என்னவோ, தேவியும் அங்கே வந்தாள். (மற்றவர்களை எல்லாம் தேவிக்கு முன்பே தெரியும்) நாங்கள் பேசத் தொடங்கினோம்.

மாணவர் ஃபெடரேஷனின் செயற்குழுத் தலைவர் நான். என் முழுச் சம்மதத்தோடு அவர்கள் என்னைத் தலைவராக்கவில்லை. அதன் எதிர் நிறுவனமான மாணவர் காங்கிரஸ்காரர்களும் என்னைத் தலைவர் ஆக்க முயன்றனர். ஆகவே நான் தலைவர் ஆனேன். கம்யூனிஸ்டுகளுக்கும் காங்கிரஸ்காரர்களுக்கும் உள்ளூரப் பகையென்றாலும், இரு பிரிவினரும் எனது நண்பர்களாக இருந்தனர்.

கம்யூனிஸ்டுகள்தான் அதிக நெருக்கம். அவர்களுடைய தலைவர்கள் அனைவரும் என் பழைய நண்பர்கள். ஒன்றாகச் சிறையில் இருந்திருக்கிறோம். அது போலவே காங்கிரஸ்காரர்களுடனும், பயங்கரவாதிகளுடனும்.



**மா**ணவர் ஃபெடரேஷனின் ஒரு மாநாடு நடந்தது. அன்று கலாசாரக் கிளையின் ஒரு கலை நிகழ்ச்சி நடந்தது. ஏதோ ஒரு பேச்சுப் போட்டியில் தேவிக்கு ஒரு பரிசு கிடைத்தது என்று என்னிடம் தெரிவித்தாள். (அந்தப் போட்டிக்குத் தலைமைவகித்தவர் முன்னாடியே அறிவித்திருந்தார். "உங்கள் சிநேகிதி சரஸ்வதி தேவிக்கு நான் முதல் பரிசு தரத் தீர்மானித்து விட்டேன்.")

"அந்தச் சொற்பொழிவை நான் கேக்கலே. இருக்குன்னு தெரிஞ்சிருந்தா வந்திருப்பேன்."

"நீங்க மீட்டிங்குக்கெல்லாம் வர மாட்டீங்கன்னு எல்லாரும் சொன்னாங்களே."

"பொதுவா இந்த மீட்டிங், விழாக்களுக்கு எல்லாம் நான் போறதில்லே. இருந்தாலும் இப்படி ஒரு விசேஷ சந்தர்ப்பம்னா வந்திருப்பேன்."

பேச்சின் இடையே மற்றவர்களின் ஏதோ சில கருத்துக்களை தேவி கண்டிக்க முற்பட்டாள். அவளுக்கு கம்யூனிஸ்டுகளின் போக்கில் முற்றிலும் நம்பிக்கை இல்லை. பக்கத்தில் நின்ற ஒரு கம்யூனிஸ்டைப் பார்த்து.

"நீங்க ஏன் முஸ்லீம் லீக்கோட பின்வாங்கும் போக்கோடு இணங்கினீங்க?"

"அவங்க கோரிக்கைகள் நியாயமானவை இல்லையா? அவங்க ஒரு பெரிய கூட்டத்தினர். அவங்களுடைய எண்ணங்களை காங்கிரஸும் காந்திஜியும் ஏன் பொருட்படுத்தலே?" என்றார் கம்யூனிஸ்டு.

"இந்தியாவை வெட்டிப் பிளக்க வேணுமா? காங்கிரஸ் ஒரு இந்து நிறுவனம் என்கிற ஜின்னாவின் வாதத்தைப் பொருட்படுத்தணுமா? நீங்க சொல்றது எனக்கு ஒண்ணும் புரியலே."

தேவி திரும்பி என்னைப் பார்த்துக் கேட்டாள்.

"ஏன் நீங்க ஒண்ணும் பேசலே?"

"தேவிக்கு என்ன சந்தேகம்?" நான் கேட்டேன்.

"நீங்க ஒரு கம்யூனிஸ்டா?"

எனக்குச் சிரிப்பு வந்தது.

"நான் ஒரு கலைஞன்" என்றேன்.

"ஓ... கம்யூனிஸ்டுகளோட போக்கைப் பத்தி என்ன சொல்றீங்க?"

"விசேஷமா ஒண்ணும் இல்லே..இதை நீங்க நல்லா மனசிலே வாங்கிக்கங்க.

**எனக்கு நல்ல, உயர்தரமான பேப்பர் வேணும். நல்ல பேனா வேணும். எழுத ஆரம்பிச்சவுடனே நிறைய டீ குடிப்பேன். நாவல் எழுதற சமயங்களில் காலைல பத்து மணிக்கு சாப்பிட்டுட்டு ஒரு மணி வரைக்கும் தூக்கம் போடுவேன். அப்புறம் மூணு மணியிலருந்து ஏழு மணி வரைக்கும் எழுதுவேன்.**

**— சா. கந்தசாமி**

> இடது ஓரத்தில் பிள்ளையார் சுழி போட்டு, ஆரம்பிப்பது என் வழக்கம். எதையும் எழுதத் தொடங்குமுன், மதுரை மீனாட்சியை மனத்தில் துதித்துவிட்டு ஆரம்பிப்பேன். முதல்வரி எழுதும் போது, என் முதல் கதையைப் பிரசுரித்து ஊக்குவித்த அமரர் கி. வா. ஜகந்நாதனின் முகம் என் மனத்துக்குள் ஒருமுறை உதிக்கும். எதையும் நாம் செய்வதில்லை; வெறும் கருவியாக மட்டுமே இயங்குகிறோம் என்று அடிக்கடி எண்ணிக் கொள்வதன் மூலம் எழுத்து சிறப்படையும் என்பது என் நம்பிக்கை.
>
> — இந்திரா சௌந்தர்ராஜன்



கம்யூனிஸ்டுகளுக்கு கம்யூனிசமில்லாத வேற எதிலயும் நம்பிக்கை இல்லே."

"அப்போ அவங்க நிற மாற்றம்?"

"பாலிசி. குறிக்கோள் - கம்யூனிசம்."

"இரண்டாவது உலக மகா யுத்தம்! புனித பாரதத்தை அடிமைத்தனத்தில வச்சு ஆன்ற பிரிட்டிஷ் காபாலிகர்களுக்கும் ஹிட்லர் ஜெர்மனிக்கும் இடையில இருக்கிற ஜனங்களின் யுத்தம்னு அவங்க சொல்றது?" என்று கொதித்தாள் தேவி.

"நான் ஒரு அரசியல்வாதி இல்லே. அமெரிக்காவும் யுத்தக் கூட்டாளிதானே. கம்யூனிஸ்ட் ரஷ்யா சேர்ந்த அப்புறம் - எப்படியோ அந்த நாசமாப் போன யுத்தம் முடிஞ்சது. அது ஜனங்களோட யுத்தமா, பேரரசுகளின் யுத்தமான்னு இப்ப நாம்ப தர்க்கம் பண்ணி, வழக்காடி என்ன லாபம்?"

நான் புறப்பட்டேன்.

இரவு காங்கிரஸ் ஹாலில் தேவியைக் கண்டேன். நிறையப் பெண்கள் வந்திருந்தனர். தேவி என்னைப் பார்த்ததும் என்னை நெருங்கி வந்தாள். பல இளம்பெண்களை எனக்கு அறிமுகம் செய்து வைத்தாள். (பெரும்பாலோரை ஏற்கெனவே நான் அறிவேன். நண்பர்களும் கூட) தங்கள் கல்லூரி ஆண்டு விழாவுக்கு நான் ஒரு நாடகம் எழுதித் தரவேண்டும் என்று தேவி கேட்டாள்.

"காதலும் தமாஷும் இருக்கணும். காதல் இல்லாத வாழ்க்கை சூனியம்."

நான் ஒப்புக் கொண்டேன்.

கலை நிகழ்ச்சிகள் எல்லாம் முடிந்து இரவு இரண்டு மணிக்கு ஒரு கூட்டம். இளம்பெண்களும், சில கம்யூனிஸ்டுகளும் ஒன்றுகூடி. பெரிய காஸ் லைட் ஒன்றுடன் வந்தனர். தேவி வழியில் என்னைப் பார்த்தாள்.

"வாங்க, இவங்களோட போவோம்!" என்னை அழைத்தாள். நானும் கலந்து கொண்டேன்.

வழியில் மீண்டும் விவாதம் எழுந்தது.

கம்யூனிஸ்டுகள் பல கருத்துக்களைச் சொன்னார்கள். தேவி ஒன்றையும் ஏற்க முடியாமல் தவித்தாள். அந்தச் சங்கடமான நிலை கண்டு எனக்கு வருத்தம் ஏற்பட்டது.

"தேவிக்கு முழுக்க முழுக்க இதயம்தான் இருக்கு. லட்சியவாதி. நீங்க சொல்ற பாலிஸி எதுவும் தேவிக்குப் புரியாது" என்றேன் அவர்களிடம்.

தேவி சமாதானம் அடைந்தாள்.

"நான் உணர்ச்சிபூர்வமானவள்."

"நல்லது."

நான் குடியிருக்கிற இடம் வந்ததும் தேவி மீண்டும் கோபம் கொண்டாள். முகம் சிவந்து விட்டது. கம்யூனிஸ்டுகள்தான் காரணம். நான் சமாதானம் செய்தேன். மீண்டும் அந்தப் பழைய பயங்கரக் கேள்வி.

"நீங்க ஒரு கம்யூனிஸ்டா?"

"எ ஹம்பிள் ஆர்ட்டிஸ்ட்."

"இல்லே... நீங்க கம்யூனிஸ்டுதானே?"

"கலைஞன் மட்டும்."

"ஓ" என்னைப் பிய்த்து எறியப் போகிற கோபம். எல்லோரும் என் வசிப்பிடம் வரவே அருகில் நின்றனர். பல இளம்பெண்கள் எனக்கு குட் நைட் சொன்னார்கள்.

"மகாகவி குட்நைட்!"

"குட்நைட் தேவி! குட்நைட் ஆல்!"

(தொடரும்)



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

பிரமாதமான நேரம் வந்திருக்குங்க. நினைச்ச காரியம் நடக்கும். அரசியல்வாதிங்க காட்டுல அடை மழை! வராத பணம், கிடைக்காத அதிர்ஷ்டம், எல்லாம் கூடிவரப் போவுது. உத்தியோக ரீதில ப்ரமோஷன், இடமாறுதல் சிலருக்கு வரலாம். பெண்களுக்கு திருமணம்/குழந்தை பிறப்பு வாய்ப்பு ரொம்பப் பிரகாசமா இருக்கு. சினிமாக்காரங்களுக்கும் டிராமா, டான்ஸ் துறையினருக்கும் கொஞ்சம் சிக்கல் இருக்கும். ரொம்ப நெருக்கமானவங்க கூட சண்டை போட்டுப் பிரிய வேண்டி வரலாம். பெண்கள் தம் பெற்றோர் உடல் நலத்துல எச்சரிக்கையா இருக்கணும்.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

நீங்க ரொம்ப கவனமா இருக்கணும். வீண் விவாதங்கள்ல கலந்துக்க வேணாம். தண்ட செலவுகள் நிறைய வரும். கவனம்! மனகல நிறைய இட்டங்கள் உருவாகும். ஆனா, எதையும் செயல்படுத்த முடியாதபடி சூழ்நிலை உங்களைப் பந்தாடும். பயணத்துல எச்சரிக்கையா இருங்க. பண இழப்பு நேரலாம். சிலருக்கு நண்பர்களால ஏதாவது பிரச்னை வரும். பண விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. கடன் வாங்கறதோ, ஜாமீன் கையெழுத்துப் போடறதோ வேணவே வேணாம்!



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

முகத்துல ஒரு தேஜஸ் கூடியிருக்குதே. கவனிச்சீங்களா? தாராளமான பண வரவு. காதல் அனுபவம், உல்லாசப் பயணம்னு அமையறப்ப தேஜஸுக்கு என்ன குறைச்சல்ங்கறீங்களா? அதுவும் கரெக்ட்தான். இப்ப நீங்க உஷாரா இருக்க வேண்டியது நண்பர்கள் விஷயத்துல! கூட இருந்தே குழி பறிக்க அவங்க தயாரா இருக்காங்க. கவனமா இல்லாட்டி அவப் பெயர், பண இழப்பு நேரலாம்! வாரக்கடைசில லேசா வயித்து வலி வரலாம். கண்ட இடத்துல சாப்பிடாதீங்க!



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

உறவினர்கள் சிலரால இந்த வாரம் உங்களுக்கு ஏதோ நன்மை நடக்கப் போவுது. அது, உங்க நீண்ட நாள் கனவான வெளிநாட்டில் வேலை வாய்ப்பாகவும் இருக்கலாம். அரசாங்கப் பணியாளர்களுக்கு பழைய பாக்கிகள் வந்து சேரும். விவசாயிகள், கம்ப்யூட்டர் துறையினர் எல்லோருக்குமே வெற்றி வாய்ப்புகள் பிரகாசமா தெரியுது. கணவன் மனைவிக்குள்ளே லேசா ஊடல் வரலாம். ஆனா பகிரங்கமா காட்டிக்காதீங்க. உங்க விவகாரத்துல மூணாவது மனுஷங்க தலையிடறதை அனுமதிக்காதீங்க. இந்த வாரம் உங்க உடல் ஆரோக்கியம் ஓஹோன்னு இருக்கும்!



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

மயக்கறாப்பல பேசற கலை உங்க கிட்ட இருக்குதுங்க. அதனாலேயே எங்கயும் உங்களுக்கு முக்கியத்துவம் இருக்கும். இப்ப உங்களுக்கு நல்ல வாய்ப்புகள் கூடி வர்ற சமயம். ஆனா உங்க சோம்பேறித்தனத்தால பல அருமையான வாய்ப்புகளை இழப்பீங்க. கடல் வியாபாரம், கம்ப்யூட்டர் துறைக்காரங்க ரொம்ப விழிப்போட இருக்கணும். போட்டிகள் ஜாஸ்தியா இருக்கும். பெண்களுக்கு இது பிரமாதமான நேரம். வீட்டுல ஏதோ விசேஷம் வரப் போவுது. ஐயாமாருங்க, கூடச் செலவுக்குத் தயாரா இருங்க.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

பொதுவா பிரச்னை அதிகம் இருக்காதுன்னாலும் உங்க அவசர புத்தியால நீங்களே சில பிரச்னைங்களை உருவாக்கிக்க வேண்டி வரும். முக்கியமான முடிவுகளை இப்ப எடுக்காதீங்க. அப்படியே முடிவெடுத்தாக வேண்டிய அவசியம்னாலும் பெரியவங்களை கன்ஸல்ட் பண்ணிட்டு செய்யுங்க. யாருக்கும் வாக்குக் கொடுக்காதீங்க. வம்பு விவகாரங்கள்ல தலையிட வேணாம். சிலருக்கு பிக்பாக்கெட்ல பணம் இழக்கற வாய்ப்பு இருக்கு. இன்னும் சிலருக்கு நாய்க்கடி அபாயம்!

**விருச்சிக ராசிக்காரரான ஹாக்கி வீரர் திருமால்வளவன், புது மனிதர்கள் கிட்ட எச்சரிக்கையா பழகணுமாம்!**



# நடக்குமென்பார், நடக்கும்!

**மார்ச் 31 முதல் ஏப்ரல் 6 வரை**

**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*



உடல் நலன், பண விஷயம், உத்யோக ரீதில ஒன்னும் பிரச்னை இல்லை. ஆனா, எப்பவும் ஏதாவது ஒரு குழப்பம் உங்களைப் பிடுங்கிட்டே இருக்கும். வீட்டுல சிறு பிரச்னைகள் நிறைய வரும். விட்டுக் குடுத்து நடந்துக்கங்க. பெரியவங்ககிட்ட அவமரியாதையா நடந்துக்காதீங்க. இந்த வாரம் சோறு திங்க நேரமில்லாம நிறைய அலைய வேண்டி இருக்கும். தூக்கம் பற்றாக்குறை இருக்கும். எதுக்கும் டென்ஷன் ஆகாம இருக்க முயற்சி பண்ணுங்க.

**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*



புது மனிதர்கள் கிட்ட பழகறப்ப எச்சரிக்கையா இருங்க. இந்த வாரம் அறிமுகமில்லாதவங்களால உங்களுக்கு ஏதாவது பிரச்னை வரலாம். கோர்ட் கேஸ் ஏதாவது இருந்தா இழுத்தடிக்கும். பணப் பிரச்னையும் இருக்கும். ஆனா உங்க வேலையை கரெக்டா செய்து முடிப்பீங்க. வெளியில எங்காவது போறதானா, சூரியனை வழிபட்டுக் கிளம்புங்க. பெற்றோர் உடல் நலத்துல அக்கறை செலுத்த வேண்டியது முக்கியம்.

**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*



உடல் நலன் பாதிக்கப்படலாம். உத்தியோகஸ்தர்களுக்கு சக ஊழியர்களால ஏதாவது பிரச்னை வரலாம். மேலதிகாரிங்களோட சுமுகமான உறவு இருக்காது. வேலைல கவனமா இருங்க. பெண்களுக்குச் சில பிரத்யேகப் பிரச்னைகளால உடம்பு முடியாம போகலாம். எண்ணெய்ப் பலகாரங்களை ஒதுக்கிடுங்க. மாணவர்கள் மனசு அலைபாயாம படிக்க வேண்டியது முக்கியம். சிலருக்கு வேண்டாத இட மாறுதல்கள் வரலாம். கடன் வாங்கிட்டுப் போனவங்க டயத்துக்குத் திருப்பித் தராம இழுத்தடிப்பாங்க. எதுக்கும் தினம் பிள்ளையார் கோயிலுக்குப் போயிட்டு வந்தா ரொம்ப நல்லது.

**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*



திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்குத் தயாரா இருங்க. சிலருக்கு டாலர்ல சம்பளம் வாங்கற யோகம் கூடி வரும். சிலருக்கு லாட்டரில கூட லக்கடிக்கலாம். விருந்து, கேளிக்கைக்கும் வாய்ப்பு இருக்கு. பெண்களுக்கு இது நகை வாரம். குறைந்தபட்சம் கவரிங் நகையாவது வாங்கியே தீருவீங்க. எழுத்தாளர்கள், கவிஞர்களுக்கும் புதிய வாய்ப்புகள் வரும். சிலருக்கு எதிர்பாராத ப்ரமோஷன் கிடைக்கலாம். வயசானவங்க மனம் குளிர்றாப்பல அவங்க பசங்க ஏதாவது நல்ல காரியம் பண்ணுவாங்க. பொதுக்காரியங்கள்ல ஆர்வமுள்ளவங்களுக்குப் புகழ் கூடும் வாரம் இது!

**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*



கஷ்டமே இல்லாத வாரம் இது! உங்க ஆசைகள் எதுவானாலும் உடனே நிறைவேத்தி வைக்கத் தயாரான குடும்பம் இருக்கறப்ப என்னங்க கவலை? பண நடமாட்டம் பிரமாதமா இருக்கும். நிறைய வீட்டு உபயோகப் பொருள்கள் வாங்கப் போறீங்க. வீட்டுல ஏதோ விசேஷம் வேற வரப்போவுது. சுபச் செலவுக்குத் தயாரா இருங்க. கூடப் பிறந்தவங்களால லேசா கவலை/சஞ்சலம் வரலாம். வார்த்தையை மட்டும் விட்டுடாதீங்க.

**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*



உடல் நலம் கொஞ்சம் சரியா இருக்காது. தலைவலிப் பிரச்னை இருக்கலாம். ராத்திரி கண் முழிக்காதீங்க. தெருவுல நடக்கற கசமுசா சண்டைகள்ல தலையிடாதீங்க. உங்க பலமே உங்க புத்திக் கூர்மைதான். அதைப் பயன்படுத்த இந்த வாரம் சில முக்கியமான சந்தர்ப்பங்கள் வரலாம். ஆபீஸ்ல சில பிரச்னைகள் உங்களுக்கு வரலாம். யார் மனசும் புண்படாம நடந்துக்கங்க. பணப் பிரச்னை இருக்காதுன்னாலும் அநாவசிய செலவுகளும் நிறையவே இருக்கும். சிலருக்கு புண்ணியத் தலயாத்திரை யோகம் கூடி வரலாம்.

# பிட்ச் ஃபீவர்!

ரிக்கிமார்ட்டின் "Here we come... ole... ole... ole..." என்று ஃபுட்பால் வீரர்களுக்காக ஒரு பிரத்யேகப் பாடலைப் பாப்புலராக்கினாரோ இல்லையோ, கிரிக்கெட் விசிறிகளுக்கெல்லாம் தங்கள் அபிமான விளையாட்டுக்கென்று ஒரு பாட்டு வேண்டாமா என்ற குறை ஏக்கமாகி விட்டது! அந்தக் குறையைத் தீர்க்க முழுக்க முழுக்க கிரிக்கெட்டுக்காகவே, கிரிக்கெட் வீரர்களை ஊக்குவிப்பதற்கென, உலகக் கோப்பை தாகத்தை தணிக்கும் ஆவலில், ஒன்றல்ல... இரண்டல்ல... ஆறு பாடல்கள் அடங்கிய கேஸட்டை, மார்ச் 17ம் தேதி, தாஜ் ஹோட்டலில், கிரிக்கெட்டர்கள் மூலமாகவே ரிலீஸ் செய்தனர்!

பிட்ச் ஃபீவரைத் தணிக்கும் மாமருந்தாக, இசையை உபயோகப்படுத்தியிருப்பவர்கள் எஸ். குமார்காரர்கள். 'BMC க்ரெஸெண்டோ' வாயிலாக இந்த இசை ஆல்பத்தை வெளியிட்டிருக்கிறார்கள்.

வெளியீட்டு விழாவை நடத்தியவர் (ESPN புகழ்) ஹர்ஷா போக்லே. டைட்டில் பாடல்தான் 'பிட்ச் ஃபீவர்'! லெஸ்லி லீவிஸ் இசையில் உருவானது. தேசபக்திக்கென்று 'ஹிந்துஸ்தான்' என்ற பாடல், இமோஷனல் டச்'சுக்கு, "சல்தேதேதும்' என்று, விளையாட்டு வீரர்களை வருடிக் கொடுக்கும் பாடல்; கலகலப்புக்கு 'க்ளீன் பௌல்ட்' எனும் நையாண்டிப் பாடல் - தொண தொணக்கும் மனைவியும், கிரிக்கெட் மீது அதீத காதல் வெறி கொண்ட கணவனும் பாடும் கேலி(ளி)க்கை டூயட் - உற்சாக போஸுக்கு, "சச்சின்... சச்சின்" என்று முதுகு வலியால் அவதிப்படும் சச்சினை தட்டிக் கொடுத்து, உயரத் தூக்கி வைக்கும் பாடல்; வெற்றிக் களிப்புக்கு, "ஜீதேகாபாய் ஜீதேகா..." என்ற ஜெய கோஷப் பாடல்... போதாது?



• சந்தீப்பாட்டீல்

விருந்தைப் பரிமாறுபவர்கள் அபிஜீத், ஷான், பர்வேஜ் காதிர், சுக்விந்தர் (சைய்யாசைய்யா) ஆகியோர். விருந்து படைத்திருப்பவர்கள் விஷால், ராஜா, தேவ்கோலி முதலானோர்.

வெளியீட்டு விழாவில், இந்தியாவுக்கென 1983ல் ப்ருடன்ஷியல் உலகக்



• வினோத் காம்ப்ளி



கோப்பையை இங்கிலாந்தில் வென்ற வெற்றித் திலகங்கள் கபில் தேவ், மொஹிந்தர் அமர்நாத், சந்தீப் பாட்டீல், மும்மூர்த்திகளைப் போல் பிரதிபலிக்க, BCCI (போர்ட் ஆஃப் கண்ட்ரோல் ஃபார் கிரிக்கெட் இன் இண்டியா) பிரசிடெண்ட் ராஜ்சிங் துர்காபூரும் கலந்து கொண்டார்.

கிரிக்கெட்டை ஒரு 'குணப்படுத்தவே முடியாத வியாதி' என்று குறிப்பிட்ட ராஜ்சிங், டைட்டில் ஸாங்கான 'பிட்ச் ஃபீவரை' வெளியிட்டவாறே ''1999 உலகக் கோப்பையில் இந்திய வெற்றி என்பது, புதிய நூற்றாண்டில் நமக்குப் புதுப் பொலிவைத் தேடித் தரக்கூடிய விஷயம்'' என்றார்.

மும்பையில், 1987 உலகக் கோப்பை செமி ஃபைனல்கள் நடந்தபோது, டெண்டுல்கர் 'Ball boys'களுள் ஒருவராக, பவுண்டரி லைனில் நின்ற கதையை போக்லே கபிலுக்கு நினைவூட்ட, கபிலும், ''நம் அணியில் அன்று சச்சின் இருந்திருந்தால், நிச்சயம் 87யிலும் உலகக் கோப்பையை வென்றிருப்போம்'' என்று சச்சினுக்கு ஐஸ் வைத்தார். ஆனால் உடனேயே ''அதற்காக, சச்சின் மட்டுமே முக்கியமானவர் என்று அர்த்தமில்லை! என் வாழ்நாளில் நான் சந்தித்த கிரிக்கெட் வீரர்களிலேயே, மிகத் திறமைசாலி சச்சின்தான் என்பதில் சந்தேகமில்லை! ஆனால் ஒரு அணியில், அவருக்குள்ள முக்கியத்துவம் அனைத்து வீரர்களுக்குமே உண்டு. ஏனென்றால் வெற்றி என்பது கூட்டு முயற்சியால் வருவதுதான்! வருகின்ற உலகக் கோப்பையில், ஒவ்வொருவரும் தன் முழுத் திறமையையும் வெளிப்படுத்தினால், வெற்றிக் கனியை நம்மால் மீண்டும் சுவைக்க முடியும்! நாளை நமதாகட்டும் என பிரார்த்திக்கிறேன்'' என உருக்கமாக முடித்தார்.

சந்தீப்பாட்டில், 83 உலகக் கோப்பையின்போது தன் நிலை, ரம்மியில் ஒரு ஜோக்கரைப் போலிருந்ததாக ஜோக்கடித்தார். எல்லா கிரிக்கெட் வீரர்களையும் குஷிப்படுத்திக் கொண்டே இருப்பாராம்; இப்போது அந்த வேலையை வினோத் காம்ப்ளி ஏற்றுக் கொள்ளலாம் என்று சொல்லி வைத்தார்.

காம்ப்ளியும் உணர்ச்சிவசப்படுபவராயிற்றே? 1996ல், ஸ்ரீலங்காவை எதிர்த்து, வர்ல்ட்கப் செமி ஃபைனலில் விளையாடிக் கொண்டிருந்தபோது, கல்கத்தா விசிறிகளின் வெறியாட்டம் தாங்காமல் பாதியிலேயே மாட்ச் நின்று போன போது கண்ணீர் விட்டு அழுதவராயிற்றே?

''அப்போது நான் ஏன் அழுதேன் என்று பலர் என்னிடம் கேட்டிருக்கிறார்கள். நான் என் நாட்டுக்காகத்தான் கண்ணீர் விட்டேன். ஆனால் இம்முறை எனக்கொரு வாய்ப்பு மீண்டும் கிடைத்தால் நிச்சயம் சிரித்துக் கொண்டுதான் வருவேன். என் நாட்டிற்குத் தலைநிமிர்வை ஏற்படுத்தாமல் விட மாட்டேன்'' என்று சூளுரைத்தவர், இசை கிரிக்கெட் வீரர்களுக்கு எவ்வளவு இன்றியமையாததென்பதை விளக்கிச் சொன்னார்.

பிட்ச் ஃபீவரிலுள்ள ஆறு பாடல்களையும் ஆளுக்கொன்றாக வெளியிட்ட பின், எல்லோரும் பிஸியாக ஆட்டோகிராஃப் புக்கில் கையெழுத்திட்டு, காமிராவுக்காக சிரித்து, கலகலப்பான சூழ்நிலையை உருவாக்கினார்.

காஸெட் இன்னும் விற்பனைக்கு வந்தபாடில்லை. வந்தவுடன் கேட்டுப் போட்டு, பாடி, ஆடி, ஆட வைத்து, உலகக் கோப்பையை ஜெயித்து, ஒரு கை பார்த்து விடலாம்!

**— ஜெயஸ்ரீ ராஜ்**

# நீங்கள் கேட்டவை — தராசு

● *செ. மலர்விழி, மதுரை - 10.*

**? 'ஜெயலலிதா மீது வழக்குப் போட்டு அ.தி.மு.க. தொண்டர்களைத் தீவிரவாதிக ளாக்க வேண்டாம்' என்று காளிமுத்து கூறு கிறாரே?**

! வழக்குத் தொடருவதென்பது சட்டபூர்வ மான நடவடிக்கை. அதற்குத் தீவிரவாதம் தான் பதில் என்றால் அக்கட்சியின் நாகரிகம் எத்தகையது என்பதை நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்.

● *கமாலி, மேலப்பாளையூர்.*

**? மீண்டும் சென்னையில் நடைபெற்ற ஈவ்டீசிங் கொடுமை பற்றி?**

! ஈவ்டீசிங் என்பது 'சில்மிஷம்' என்கிற சில் லறைப் பிரச்னையாக இருந்தாலே கொடுமை. அது திட்டமிட்ட கொடூரமாக மாறி வருவதைத்தான் இச்சம்பவம் காட்டு கிறது. இதுபோன்ற சம்பவங்களை மேலும் மிகைப்படுத்தி, திரைப்படங்களில் காட்டி, பணம் பண்ணுவார்கள். கேட்டால், 'நடப் பதைத்தானே எடுக்கிறோம்' என்பார்கள். அதைப் பார்த்துவிட்டு மேலும் சமுதாயத் தில் ஈவ்டீசிங் கொடுமை அதிகரிக்கும்... விஷ வட்டம் என்பது இதுதான்!

● *ஆர். சாலமோன், ஆலங்குளம்.*

**? ஒருவரை செருப்பால் அடித்தால் அவர் சாகமாட்டார். எனவே அவரை அடித்ததற் குக் கொலை முயற்சி வழக்குத் தேவை யில்லை என்று சுசுவாமி கூறுவது சரிதானா?**

! ஆக, ராஜசேகரன் செருப்பால் அடிக்கப் பட்டதாக சுவாமி ஒப்புக் கொள்கிறார். அவ் வாறு ஒப்புக் கொள்வதாலேயே தாம் தடி யால் மகாதேவனால் அடிக்கப்பட்டதாக ராஜசேகரன் கூறுவதையும் ஒப்புக் கொண் டவராகிறார் சுவாமி!

● *அ.மு. ஞானேந்திரன், மதுரை - 10.*

**? 'என் மீது குற்றம் சுமத்தி மக்களை ஏமாற்ற முடியாது' என ஜெயலலிதா கூறி யுள்ளாரே?**

! மக்களை ஏமாற்றும் ஏகபோக உரிமை தமக்கு மட்டுமே உண்டு என்கிறார் போலும்!

● *எச்.எஸ். மணி, திருச்சி - 5.*

**? நேற்றுவரை ராப்ரி தேவியை ஆதரித்த காங்கிரஸ் இன்று ராஜினாமா செய்யச் சொல்லி கூச்சலிடுவதேன்?**

! முன்பு ரண்வீர் சேனையினர் படுகொலை நடத்தியபோது பாடிய அதே பல்லவிதான். சங்கடத்தை ஏற்படுத்துவதற்காக பீஹாரில் குடியரசுத் தலைவர் ஆட்சிக்கு ஆதரவு தர மறுத்தது காங்கிரஸ். மூக்குடைபட்ட பி.ஜே.பி. பீஹார் மசோதாவை வாபஸ் பெற்றது. இப்போது நக்ஸல் அமைப்பினரால் 38 பேர் படுகொலை செய்யப்பட்ட பிறகு காங்கிரஸ் வாயை மூடிக் கொண்டிருக்க முடியாதே! 'ராப்ரி ராஜினாமா' என்று மறு படி ஆரம்பித்திருக்கிறது. சோனியாவுக்குத் திடமான கொள்கைப் பிடிப்பு இல்லாதது வருத்தத்துக்குரியது. நாட்டுக்கு நல்லதல்ல.



• ஒப்புக் கொண்டு..

● *ஆர். ராஜதுரை, சீர்காழி.*

**? திருச்சி குழுமாயி அம்மன் கோயிலில் குட்டி குடித்தல் திரு விழா என்ற பெயரில் அம்மன் அருள் வந்த பூசாரி ஆட்டுக்குட்டி களின் ரத்தத்தைக் குடித்து ஆயிரம் ஆடு களுக்கு மேல் பலியிடப்பட்ட காட்டு மிராண்டித்தனம் நடந்துள்ளதே...?**

! இதுபோன்ற போலித்தனமான, கொடூர மான வழிபாடுகளைத் தடை செய்யும் சட்டம் உள்ளது. அதை உறுதியாக அரசு அமுலாக்க வேண்டும். இது மத வழிபாடு உரிமைகளில் குறுக்கிடுவதாகாது. மூடத் தனத்திலிருந்து மக்களைக் காப்பாற்றுவ தாகும்.

● *ஏ. குமாரவேலு, பாளையங்கோட்டை.*

**? ஜெயலலிதா தன் மீதுள்ள வழக்குகளை 'வெங்காயம்' என்று கூறியிருக்கிறாரே?**

! இந்த வெங்காயம் உரிக்கப்படுவது மட்டு மல்ல; சமைக்கவும்படுகிறது! 'ஜெ'க்கு உள்ளத் தில் பலத்த காயத்தை ஏற்படுத்தியுள்ள 'வெங்'காயம் இது. அதனால்தான் தவிக் கிறார் கிடந்து!' அதன் விளைவாக நிதானம் இழந்து மேலே மேலே தப்பாகப் பேசி நடந்து கொள்கிறார்.

● *க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்.*

**? திருச்சியில் கட்சியின் மாநாடு நடை**



• வேத வாக்கு!



• வல்லவர்!

# ‘வழக்குகள் வெங்காயம்’ என்கிறாரே ஜெ?



• வெறும் காயமல்ல!



• அகராதி ஹீரோ!



• நாகரிக விளக்கம்

பெற்று முடிந்ததும் சென்னை கோட்டைக்குச் செல்ல பா.ஜ.க. தயாராகும் என இல. கணேசன் பேசியிருப்பது எதைக் காட்டுகிறது?

! அவர் மனக்கோட்டை கட்டுவதில் வல்லவர் என்பதை.

● சு. பாஸ்கரன், புதுவை - 8 ❑

? ராமகோபாலன், விச்வ ஹிந்து பரிஷத், பஜ்ரங் தள் சொல்வதெல்லாம் பிதற்றல் என்றால் நீங்கள் கூறுவது என்ன வேத வாக்கா...?

! ‘இந்து முன்னணி, வி.எச்.பி. பஜ்ரங் தள் முதலியன கூறுபவை வேத வாக்கு; தராசு கூறுபவை பிதற்றல்’ என்பதாக உங்கள் முடிவு உங்கள் கேள்வியிலேயே தொக்கி நிற்கிறது. இப்படி முன் கூட்டியே ஒரு முடிவுக்கு வருகிற அணுகுமுறை அறிவுபூர்வமானது அல்ல. வாதம், எதிர்வாதம் என்ற நோக்கில் படித்துப் பார்த்து, யோசித்து முடிவுக்கு வருவதுதான் புத்திசாலித்தனம்.

• பல்டி திலகம்!



● கே.ஏ. ராஜேஸ்வரி, காட்டுக்கானூர்.

? புதிய தமிழ் அகராதி தயாரித்து, அதில் விசுவாசம் என்பதற்கு அர்த்தமாக சேடப்பட்டி முத்தையா என்று எழுத வேண்டும் என ஜெ கூறியுள்ளாரே?

! இப்படியெல்லாம் அகராதி தயாரிக்க முடிவு செய்தால் முதுகெலும்பின்மை, ஊழல் போன்ற பல சொற்களுக்கும் அதே அர்த்தம் எழுதலாமே!

● ஜி. ஜெயராமன், கூத்தலூர்.

? அவசரம்/பதற்றம் – வித்தியாசம் கூறவும்.

! அவசரம் – காலத்தோடு போட்டி போடுவதால் விளைவது. பதற்றம் – அப்போட்டியில் தோற்றுவிடுவோம் என்ற பயமும் சேர்ந்து கொள்கிறபோது ஏற்படுவது.

● ஜே. ரஜினி ராம்கி, பூனே.

? கொள்கைக்காகக் கூட்டணியா? கூட்டணிக்காகக் கொள்கையா?

! பதவிக்காகக் கூட்டணி. கொள்கையாவது, புடலங்காயாவது!

● ப. இராம முருகன், சிவகங்கை.

? ஜெயலலிதா தன்னுடைய ஊழலை ஒப்புக் கொண்டு விட்டால்...?

! வழக்குகளுக்கென்று செலவாகும் கோடிக்கணக்கான பணம் மிச்சமாகும். அவற்றை மக்கள் நலத் திட்டங்களில் முடக்கலாம். ஒரு தலைமுறையே அவருக்கு நன்றிக் கடன்படும்.

● வைகை வைகரை, மதுரை - 14.

? தலைவனின் பலத்தையும் பலவீனத்தையும் ஒரு தொண்டன் எப்போது முழுமையாக உணர்கிறான்?

! தொண்டனும் தலைவனாக உயரும்போது மட்டுமே!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:
சு. பாஸ்கரன்,
8, முதல் குறுக்குத் தெரு,
குறிஞ்சி நகர்,
லாஸ்பேட் அஞ்சல்,
புதுவை - 605 008.

## நறுக்!

✉ படகில் ஒரு பெண் - அருமை! கடலோரக் காற்று இதமாக வீசியது போன்றதொரு உணர்வு; திறமை மிளிரும் 'சுபா'வின் அழுத்த மான வரிகள்; 'ஜெ'யின் தத்ரூப ஓவியம்; நான்கே அத்தியாயங்களில் 'நறுக்'கான கதை படித்த பூரண திருப்தி!
நெய்வேலி-3, ப. உத்தண்டராமன்.

## ஊழலுக்கு உரம்!

✉ பா.ஜ.கவை மட்டும் தட்டுவதாக நினைத்துக் கொண்டு, ரப்ரிதேவியை மீண்டும் ஆட்சியில் அமர்த்தி, ஊழலுக்கு உரமூட்டி விட்ட சோனியாவுக்கு சரியான அறிவுரை வழங்கி விட்டீர்கள், துணைத் தலையங்கம் வாயிலாக!
கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.

## எங்கே சுமி?

✉ சுமிக்கு என்னவாயிற்று? அவர் எழுத்து இல்லாத கல்கி கொஞ்சம் இளைத்துப் போன

# ஆறுதல் தந்த ஆணிவேர்!



மாதிரி இருக்கிறது. ப்ளீஸ், சுமிக்கு மட்டும் ஓய்வு கொடுக்க வேண்டாம்!
மொரட்டுப்பாளையம், சு.நா. இராஜேஸ்வரன்.

## குரோதம் காணோம்!

✉ அட்டைப்படம் பிரமாதம். அதிலும் நந்தினி தேவியின் ஆபரணங்களைக் கலைஅழகுடன் அற்புதமாக பத்மவாசன் வரைந்திருந்தார். ஆனால் வழக்கமாக நந்தினி தேவியின் கண்களில் தென்படும் கோபமும் குரோதமும் மட்டும் ஏனோ மிஸ்ஸிங்!
திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

## சிறப்பு

✉ நீதிபதி சிவப்பாவின் ஓய்வு விஷயத்தில் மத்திய அமைச்சர் தம்பித்துரை வீணாக மூக்கை நுழைத்துக் கெட்ட பெயர் சம்பாதித்திருப்பதைச் சுட்டிக்காட்டி, அவரது திடுதத்தைத் துல்லியமாகக் கணித்ததோடு, குடியரசுத் தலைவரது அசிரத்தையையும் செல்லமாகக் கண்டித்துச் சிறப்பான தலையங்கம் படைத்துள்ளீர்கள்!
இனாம் மணியாச்சி, ச. ஆ. கேசவன்.

✉ கல்கி (21.3.99) இதழ் தலையங்கம் தொடர்பாக: 1) இன்றைய சட்ட பிரகாரம் உச்ச நீதி மன்ற தலைமை நீதிபதியின் ஒப்புதல் இல்லாமல் குடியரசுத் தலைவர் ஓர் உயர்நீதிமன்ற நீதிபதியை வேலை நீக்கம் செய்ய முடியாது. 2) திரு. சிவப்பாவிடம் ஒரு தடவை விளக்கம் கேட்கப்பட்டுள்ளது. மற்றொரு முறை விளக்கம் கேட்க வேண்டுமா என்பது பற்றி உச்சநீதி மன்றம் தனது பரிந்துரையில் குடியரசுத் தலைவருக்குச் சொல்லி இருக்கும் என்று நம்பலாம். 3) ஓர் அரசு ஆணையை செயலரோ, துணைச் செயலரோ குடியரசுத் தலைவரின் (அல்லது மாநில ஆளுநரின்) உத்தரவின் பேரில் வெளியிட வேண்டும். சட்டத்துக்குப் புறம்பாக, மைய அமைச்சர் நேரிலேயே திரு. சிவப்பாவிற்குச் செய்தி அனுப்பியது மாபெரும் தவறு. இதுதான் பல சந்தேகங்களுக்கு இடம் தருகிறது.
சென்னை-41,
கணேஷ்குமார்.

## ஆறுதல் தந்த வேர்

✉ பாரத விருட்சத்தின் விழுதுகள்தான் விஷமாகி விட்டன; ஆனால் ஆணி வேர்கள் இன்னும் சத்தியப் பிடிப்புடன் உள்ளன என்பதைத் தெளிவாக்கி விட்டது நெல்லை ஜெபமணியின் பேட்டிக் கட்டுரை.
தூத்துக்குடி-2, கே. சுதர்ஷன்.

## நெகடிவ் முடிவு

✉ நந்தன் எழுதிய 'இறைவன் இங்கே இல்லை' கதையின் முடிவு 'நெகட்டிவ்'வாக இருக்கிறது. ஜகந்நாதரிடம் நெக்குருகி சமரஸ பிரார்த்தனை செய்வதுபோல் முடித்திருந்தால் கதையின் மையச் சாரம் வலுப்பட்டிருக்கும். மாறாக, கோபித்துக்கொண்டு தரிசனம் செய்யாமல் போனது மனத்தின் மாசைத்தான் வெளிப்படுத்துகிறது!
பெங்களூர்-8, பா.சு. வைத்தியநாதன்.

## பாஸிடிவ் முடிவு

✉ 'இறைவன் இங்கே இல்லை' கதையின் முடிவு மிகச் சரியானது. தேச ஒற்றுமைக்கு இத்தகைய கதைகள் அவசியம் வர வேண்டும். வாழ்த்துக்கள்.
சென்னை-40, நிர்மலா காந்தி.



இந்த வாக்கியம்.

'ஒழுங்கா படிக்காட்டி மிஸ்கிட்டே வந்து சொல் விடுவேன்!' அல்லது 'ஒழுங்கா கிளாஸ்ல கவனிக்கலைன்னு உங்கம்மாகிட்டே சொல்லட்டுமா!' போன்ற மிரட்டல்களும் இதே ரகமானவைதான்.

இத்தகைய பய முறுத்தல்களால் தாற்காலிகப் பயன் கிடைத்ததாகத் தோன்றும்; ஆனால் இவற்றால் குழந்தையின் பிரச்னையும் தீராது; நமது பிரச்னையும் தீராது!

# "போலீஸ் மாமா பிடிச்சுக்குவாங்களா!"

"**இ**ரு இரு! அப்பா வரட்டும் சொல்றேன்!"

"நீ இப்படி சேட்டை பண்ணினா பூச்சாண்டி வந்து பிடிச்சுக்கிட்டுப் போயிடும்..."

–நாம் நினைத்ததைச் செய்ய வைக்க குழந்தைகளிடம் நாம் உபயோகிக்கும் மந்திரக் கோல் வாக்கியங்கள் இவை!

கீழ்ப்படிதலை உடனே பெற்றுத்தரக் கூடியவைதான். ஆனால், அச்சம் என்கிற நிரந்தர வடுவை இளம் மனங்களில் அவை ஏற்படுத்தும்.

முதல் வாக்கியத்தை எடுத்துக் கொள்வோம். ஹோம் ஒர்க் செய்ய மறுக்கும் போதோ, சாப்பிடாமல் அடம்பிடிக்கும் போதோ சகஜமாகப் பயன்படுத்தப்படுவது.

'அப்பா என்பவர் தண்டனை வழங்குபவர்; அவரைக் கண்டு அச்சம் கொள்' என்று நேரடியாகவும்;

'எப்படியிருந்தாலும் நான் சொன்னால் நீ கேட்கமாட்டாய்' என்பதை மறைமுகமாகவும் குழந்தைக்கு அறிவுறுத்துகிறது

**விஜி**

மாறாக, பிரச்னை வளரும். அச்சுறுத்தப் பயன்படுத்தப்படும் நபரிடம் வெறுப்பும் அச்சுறுத்தும் நபரிடம் அலட்சியமும் ஒருங்கே தோன்றும். படிப்பதோ, சாப்பிடுவதோ, வேறு செயலோ குழந்தை தனக்காக, தனது நலனுக்காக, உயர்வுக்காகச் செய்ய வேண்டியவை என்பதே உணர்த்தப்பட வேண்டும்.

கற்பனையான பூச்சாண்டி பயமுறுத்தல்களும் வெறும் தாற்காலிகக் கருவிகள் தாம். விபரீதக் கற்பனைகள், வரம்பற்ற அச்சங்களைத் தோற்றுவித்து இன்னும் அதிகமாகக் குழந்தையின் உள்ளத்தைக் கலக்கக் கூடியவை. இந்தப் பொய்கள் தன்னம்பிக்கையையே குலைக்கக் கூடியவை!

'போலீஸ் வந்து பிடிச்சுக்கிட்டுப் போயிடும்!' போன்ற அச்சுறுத்தல் அறிமுகமில்லாத நிஜ நபர் மீது முன்கூட்டியே தப்பபிப்பிராயம் ஏற்படுத்துவது. ஆனால் நாம் இந்த பயமுறுத்தல் அணுகுமுறையைத் தவிர்த்தாலும் குழந்தைகள் இதை வெளியுலகத்தில் பல சந்தர்ப்பங்களில் சந்திக்க வேண்டியிருக்கிறது.

'போலீஸ் பிடிச்சுக்கும்!' என்று யாரே

னும் மிரட்டப் போக, 'நான் ஸ்கூலுக்குப் போகமாட்டேன்' என்ற பிடிவாதம் விளையக்கூடும்.

"ஏன்மா...?"

"ஸ்கூல் கேட்கிட்டே இரண்டு போலீஸ் இருக்காங்க. பிடிச்சுக்கிட்டுப் போயிடுவாங்க..."

''தப்பு பண்றவங்களைத்தான் பிடிச்சுக்கிட்டுப் போவாங்க...'' என்று சொல்வதைக் காட்டிலும் "அங்கே போலீஸை நிற்க வைச்சிருக்கறதே உன்னை மாதிரி குழந்தைகளுக்கு ஹெல்ப் பண்ணத்தான். ரோட் கிராஸ் பண்றதுக்கு, வேகமா போற வண்டியையெல்லாம் மெள்ள போகச் சொல்றதுக்கு... அவங்க நம்ப ஃப்ரெண்ட்ஸ். நாளைக்கு நான் உன்னோட வரேன். போலீஸ்மேனுக்கு குட்மார்னிங் சொல்லிட்டு ஸ்கூலுக்குப் போகலாம்" என்று சொல்லும்போது குழந்தையின் பயம் தணியும்.

**ப**யம் என்பது குழந்தையின் பிறவி இயல்பு அல்ல. 'இருட்டிலே போகாதே!' 'தண்ணியில விழுந்துடுவே!' 'படியிலே ஏறாதே!' போன்ற கட்டளைகள் பிறப்பிக்கும்போது நமது குரலில் ஒலிக்கும் பதற்றம் 'பயப்படு!' 'பயப்படு!' என்று குழந்தைகளுக்குக் கற்றுத் தருகிறது. அதன் பிறகு பக்கத்து அறையில் போய் ஒரு பொருளை எடுத்துவர குழந்தை 'இருட்டாயிருக்கே!' என்று பயப்படுமானால் அதில் ஆச்சர்யம் என்ன?



எத்தனை பயமானாலும், எதைக் கண்டு பயமானாலும் குழந்தையின் அந்தக் கணத்து பயம் நிஜமானது. அதைத் தணிப்பதும் மெள்ளப் போக்குவதற்கு உதவுவதும் மிகவும் முக்கியம்.

பயப்படாத குழந்தையுடன் ஒப்பிட்டு 'நீ மட்டும் ஏன் பயப்படறே?' என்பதோ 'இப்படி பயந்தாங்கொள்ளியா இருக்கே!' என்பதோ தாழ்வு மனப்பான்மையைத்தான் உண்டாக்கும். அதன் விளைவாகத் தோல்வி பயம் என்கிற புதிய அச்சம் தோன்றி மேலும் அச்சுறுத்தும். 'அட! நீ தைரியசாலி ஆயிட்டியே' என்று பயமின்மையைச் சிலாகிப்பதுகூட உசிதமல்ல.

'நானும் கூட வரேன்' என்று உடன் சென்று இருட்டு அறையில் விளக்கைப் போட்டு உதவ வேண்டும்.

**கு**ழந்தைகளின் பிரத்யேக உலகத்தில் சில எதிர்பாராத விஷயங்கள் குறித்த காரணமற்ற பயங்களும் எழுவதுண்டு. குறிப்பிட்ட சில முகங்கள், வினோத தோற்றமுடையவர்கள், சில ஓசைகள்-இவை புதிரான பயங்களாக அவர்கள் வாழ்க்கையை ஆக்கிரமிக்கும்.

நமக்குப் புரியாததாலேயே இந்த பயங்களை அலட்சியப்படுத்திவிடக் கூடாது. மிகக் கனிவோடு உடனிருந்து உதவித் தீர்க்க வேண்டியவை இவை. படிப் படியாக அறிவு ரீதியான விளக்கங்கள் மூலம் தகர்க்கப்பட வேண்டியவை.

"அந்தப் பாட்டி ஒண்ணும் செய்ய மாட்டாங்க" என்று சொல்லி பயங்கொண்ட குழந்தையைக் கதறக் கதற பாட்டி மடியில் கொண்டு போய் உட்கார்த்தி வைக்காமல், பாட்டிக்கு பயப்படாத வேறு குழந்தைகள் நெருங்கி விளையாடுவதை உடனிருந்து பார்க்கச் செய்யலாம்.

பயப்படுவதற்கு ஏதுமில்லை என்று நிரூபணமாகும்போது மட்டுமே பயம் விடைபெறும்.

(அடுத்த வாரம் வரை)

நகம் கடிக்கிற பழக்கம் உண்டு. சீரியஸான சீன் எழுதிக்கிட்டிருக்கறப்போ நகத்தைக் கடிச்சுத் துப்புவேன். எழுதறது இங்க் பேனாவுலதான். அதுவும் குண்டு சைஸ்ல பெருசா இருக்கற பேனா. யோசிச்சுக்கிட்டு இருக்கறப்போ, பேனா மூடியைத் திறந்து திறந்து மூடுற பழக்கமும் இருக்கு.

— தேவிபாலா





காதலி: ஒரு வழியா நம்ப கல்யாணத்துக்கு எங்கப்பாவைச் சம்மதிக்க வெச்சுட்டேன்!

காதலன்: எப்படி?

காதலி: நான் உங்களைக் காதலிக்கலே, கல்யாணம் மட்டும் பண்ணிக்கிறேன்னு சொன்னேன்!

— வி.பி. கிருஷ்ணசாமி

அவர்: உங்களுக்கு லஞ்சம் கொடுக்க வந்தவரை போலீசுல புடிச்சுக் கொடுத்துட்டீங்களாமே... ஏன்?

இவர்: இதுவரை யாருமே தாராத அளவுக்குக் குறைவா கொடுத்தால் சும்மாவா விட முடியும்?

— அம்பை தேவா

''நம்ம படத்துல ஹீரோயினோட மாமியார் கேரக்டருக்கு அவங்களோட சொந்த மாமியாரையே நடிக்க வைச்சது தப்பா போச்சு.''

''ஏன்...?''

''மாமியார்– மருமகள் சண்டையை 'கட்' சொன்னதுக்கு அப்புறமும் மும்முரமா போட்டுக்கிட்டு இருக்காங்க.''

— பா. ஜெயக்குமார்

நீதிபதி: நீங்க கேட்ட மாதிரி குற்றப்பத்திரிகைய தமிழ்ல குடுத்தாச்சு. இனிமே பிரச்னை இல்லியே?

வாதி: சாரி... யுவர் ஆனர். அதை வாசிக்கற அளவு எனக்கு எழுதப் படிக்க கத்துக் குடுக்கணும்.

— அம்பை தேவா





மானேஜர்: உன்னை மாதிரி திருமணமான பெண் வேலைக்கு வருவதால் ஒரு ஆடவனுக்கு வேலை இல்லாமல் போய் விடுகின்றது!"

பெண்: உண்மைதான்! நான் வேலைக்குச் சேர்ந்தவுடன் என் கணவர் வேலையை ராஜினாமா செய்துவிட்டார்!

— எஸ். சங்கரநாராயணன்

"அந்த பத்திரிகை பயங்கர நஷ்டத்தில் ஓடுகிறதாம்..."

"எப்படி சொல்கிறாய்?"

"ஜோக் அனுப்பினால், ஜோக் மட்டும் அனுப்பியிருக்கிறீர்கள், அதைப் பிரசுரிக்க பணம் அனுப்பவில்லையே என்று கேட்கிறார்கள்!"

— எஸ். மோகன்

"இதுக்குத்தான் பசங்களை வெச்சுக்கிட்டு நாம சண்டை போட்டுக்கக் கூடாதுன்னு சொல்றது..."

"ஏன், என்னாச்சு?"

"நம்ம பொண்ணு, பக்கத்து வீட்டுப் பையன்கிட்டே, 'வாடா நாம ரெண்டு பேரும் அப்பா, அம்மா விளையாட்டு விளையாடலாம். நான்தான் அம்மா, நீதான் அப்பா. நான் உன்னை எப்பவும் திட்டிக்கிட்டேயிருப்பேன். நீ வாயையே திறக்கக் கூடாது'ன்னு சொல்றா!"

— டி.என். பாலகிருஷ்ணன்

"என்னடி இது... புடைவைல ஜன்னல் வச்சுருக்கே?"

"ரவிக்கைல வைக்க டெய்லர் மறந்துட்டார்!"

— அம்பை தேவா



கயிறைப் பிடிச்சிட்டு ஒருத்தன் மலைல ஏறறான். இன்னொருத்தன் விஷப் பாம்பு களோட குடித்தனம் நடத்தறான். ஆழ்கடல் ஆராய்ச்சின்னு கிளம்பி, கிட்டத்தட்ட கபிலர் தவம் பண்ண இடம் வரைக்கும் போயிட்டு வரா ஒரு கிராப் வெச்ச பொண்ணு.

டிஸ்கவரிலேயும் நேஷனல் ஜ்யாகரஃபிக் சானல்லேயும் இந்த மாதிரி ஆட்களைப் பார்க்கும்போது எப்பவும் எனக்குச் சில கேள்விகள் எழும். (ஒண்ணு ரெண்டு கேள்விகளை முன்னாடியே சொல்லியிருக் கேன்.)

உயிரைப் பணயம் வைக்கற இந்தக் காரி யங்கள்ல துணிச்சலா இறங்க அடிப்படைக் காரணம் என்ன?

வெறும் பணம்னு தோணலை. 'அட் வென்சர்' கனவுகள்ங்கறது ஒரு பக்கம் உண் மைன்னாலும் உளவியல் ரீதில, 'நான் உங் களை மாதிரி இல்லை; அரை இன்ச் உயரம் ஜாஸ்தி; பட்டம், பதவி, பணம் – இதுக்கு மேல ஒரு பிரத்தியேக அடையாளத்தோட கூடிய புகழ் எனக்கு உண்டு'ங்கறதை நிரூபிக் கிற வேட்கைதான் இப்படியெல்லாம் செய் யச் சொல்லுதுங்கறாங்க மனவியல் நிபுணர் கள். அல்லது, அந்தப் புகழை அடைய ணும்ங்கற வெறி. நாநூறு இட்லி சாப்பிட றது, தலைகீழா நூறு மைல் நடக்கறது, உடம் புல தேனீக்களை வளர்க்கறது – இதெல் லாம் கூட இந்தப் புகழ்படுத்தற பாட்டோட விளைவுதான்.

'யாரும் செய்யாத சாதனை; பெரிய பெரிய விஷயங்களை ரெண்டு லைன்ல கேப்ஸ்யூல் பண்ணிக் குடுக்கணுங்'கற ஆசை திருவள்ளுவருக்கு இருந்திருக்கு. அவரே கூட 'தோன்றிற் புகழொடு தோன்றுக'ன்னுதான் சொல்றார்.

இந்த தியரிக்கு நேரெதிரா ஒரு சம்பவம் கேள்விப்பட்டேன். ஆளைப் புரட் டிப் போடற சம்பவம். இப்படிக் கூட ஒருத் தர் இருக்க முடியுமா? ஒரு துறவிக்குக் கூட இப்படியொரு பற்றின்மை சாத்தியமான்னு ரொம்ப நேரம் யோசிக்க வெச்ச சம்பவம். என் நண்பர், ரைட்டர் திருப்பூர் கிருஷ்ண னோட ஒரு நாள் போன்ல பேசிட்டிருந் தப்ப, தற்செயலா சொன்னார் :

ஒரு பெரிய எழுத்தாளர். (தமிழ் எழுத் தாளர்தான்.) எழுத்துல பல சாதனைகள் செஞ்சவர். உடம்பு சரியில்லாம மரணப் படுக்கைல இருந்தபோது, அவரைப் பார்க்க இன்னொரு பெரிய எழுத்தாளர் போயிருக் கார். பக்கத்துல உட்கார்ந்து ஆறுதலா பேசிட்டிருந்தவர்கிட்ட, படுக்கைல இருந்த அந்த எழுத்தாளர் ஒரு கவரை எடுத்துக் கொடுத்து, "இப்ப இல்லை; நான் செத்துப் போனப்புறம் இதைப் பயன்படுத் துங்க"ன்னு சொன்னார்.

"என்னது இது?"

"இரங்கல் கட்டுரை. எப்படியும் நான் இறந்ததும் எல்லா பத்திரிகைகளிலும் வெளி யிட வேண்டியிருக்குமே?"ன்னார் எழுத் தாளர்.

நண்பருக்குத் தாங்க முடியாத வருத்தம், வேதனை.

"யாராவது தமக்குத் தாமே – இறக்கற துக்கு முன்னால இரங்கல் கட்டுரை எழுது வாங்களா"ன்னு ரொம்ப வருத்தப்பட்டுக் கலங்கியிருக்கார்.

அதுக்கு அந்த எழுத்தாளர் சொன்னா ராம்: "அப்படியில்லை. நான் செத்துப் போயிட்டா, ரொம்ப அதிகமா, என் தகுதிக்கு மீறிப் புகழ்ந்து பேசுவாங்க; எழுதிடுவாங்க. செத்த பிறகும் அந்த உறுத் தல் என்னை சும்மா விடாது. அதான், உள் ளது உள்ளபடி நானே எழுதி வெச்சுட் டேன்!"

புகழுக்காக சாதனைகள் முயற்சி பண்ணலாம். ஆனா, உண்மைல சாதிச் சுட்ட அப்புறம் புகழ் வேண்டியிருக்காது போலருக்கு! பை தி வே, அந்த ரைட்டர்

## இப்படியும்

கு. அழகிரிசாமி. அவரைப் பார்க்கப் போன நண்பர் நா. பார்த்தசாரதி!

*** *** ***

லயோலா காலேஜ் ஹிஸ்டரி ப்ரொ பசர் ஒருத்தர் தற்செயலா ஒரு ரயில் பய ணத்துல அறிமுகமானார். சுதாகர்னு பேரு. ப்ரொபசர்களுக்கே உரிய திட்டவட்டமான கருத்துக்கள் எதுவும் வெச்சுக்காம, ரொம்ப ஓப்பனா, எதையும் விதவிதமா அணுகி, யோசிச்சுப் பார்க்கற – சரித்திரத்துல எதெல் லாம் இடைச்செருகலா இருக்கும்னு ஆராய்ந்து பார்க்கற வித்தியாசமான ப்ரொ

பசர்.

சும்மா பேச்சு சுவாரஸ்யத்துக்காக நான் அவர்கிட்ட, "சார்! நம்ம சக்கரவர்த்திகளெல்லாம் உண்மையிலேயே சக்கரவர்த்திகள் தானா? சக்கரவர்த்திங்கறதுக்கு இங்கிலீஷ்ல கலெக்டர்னு பேரா?"ன்னு கேட்டேன். வம்பு தான்!

"எப்படிச் சொல்றீங்க?"ன்னு கேட்டார்.

"இப்ப ராஜ ராஜ சோழனை எடுத்துக்கங்க. தஞ்சாவூர் டிஸ்ட்ரிக்ட் கலெக்டராத்தான் இருந்திருக்கார். ஐ மீன், அவரோட அதிகார எல்லை, அந்த மாவட்டத்துக்குட்பட்டது



# ஓர் எழுத்தாளர்!

தான். திருச்சி டிஸ்ட்ரிக்டையும் சேர்த்து பார்த்துட்டு இருந்திருக்கார். 'பல்லவாஸ்'னு பார்த்தா, காஞ்சிபுரம் – செங்கை அண்ணா மாவட்ட கலெக்டர்கள். கொங்கு மன்னர்கள்னு சொல்றாங்க. அவங்க கோயமுத்தூர் ஆட்சியாளர்கள். யாரும் முழு தமிழ்நாடு அளவுல கூட ஆட்சி செய்யலை. சி.எம்.னு கூட சொல்ல முடியலையே..."

ப்ரொபசர் பயங்கரமா சிரிச்சார். அடிக்க வரப் போறார்னு நினைச்சேன். But, "இப்படியும் யோசிக்கலாம். தப்பில்லை. 'இந்தியா'ங்கற வடிவமே பிரிட்டிஷ்காரனுக்கு அப்புறம் தானே நம்மால உணரக்கூடியதா இருந்திருக்கு? போக்குவரத்து வசதி இல்லாத காலத்துல, நூறு கிலோ மீட்டரை நடந்தே கடக்கறவனுக்கு அந்த தூரம் ஒரு பெரிய சாம்ராஜ்ஜியமா தெரியறது இயல்புதானே? ஸோ, சாம்ராஜ்ஜியத்தை ஆளறவன் சக்கரவர்த்தி! இன்னிக்கு ஒரு ஃப்ளைட் பிடிச்சா, ரெண்டு அவர்ல நாட்டு எல்லை வரைக்கும் சுத்திப் பார்த்துட்டு வந்துடலாம், இல்லியா? தூரம் குறைஞ்சு, உலகம் சுருங்கினதால சக்கரவர்த்திகள் கலெக்டராவும் ராஜகுமாரர்கள் சப்கலெக்டராகவும் ஆயிட்டாங்க!"

இப்படிப்பட்ட ப்ரொபசர்கிட்ட படிக்கற பசங்க பெரிய அதிர்ஷ்டசாலிகள்னு சொல்லுவேன்! 'அதிகப்பிரசங்கி, உட்காருடா'ன்னு கண்டிப்பா இவர் சொல்ல மாட்டார்!

*** *** ***

**போ**ன தமிழ் நியூ இயர் இஷ்யுவுக்கு அடுத்த இஷ்யூலேருந்து ஸ்டார்ட் பண்ணின இந்த column- ஒரு வருஷம் நெருங்கிடுச்சி. ஏப்ரல் 18 இஷ்யூவைப் புத்தாண்டு ஸ்பெஷலா கல்கி கொண்டு வரும்னு நினைக்கிறேன். நம்ம செலிப்ரேஷனை ஏப்ரல் 25ல வைச்சுக்கலாம்.

முதல்ல, சி.எம். தலைமைல காமராஜ் அரங்குல படு கிராண்டா ரசிகர்களை வரவழைச்சி, கொண்டாடலாம்னு நினைச்சேன். அப்புறம் தன்னடக்கம் காரணமா வேண்டாம்னு தோணிடுச்சு.

ரெண்டு பக்கம்ங்கறதை வேணுமானா கொஞ்சம் கூட்டிக்க ஏற்பாடு பண்ணலாம். அந்த வாரம் மன்ற உறுப்பினர்கள் (லாவண்யா மாதிரி மாஜி உறுப்பினர்களும்) கவிதை, ஜோக்ஸ், சிந்தனைச் சிதறல்கள், லோக்கல் – ஃபாரின் சரக்குகளை வண்டி வண்டியா அனுப்பலாம். இந்த columnக்குப் பல விஐபி ரசிகர்களும் இருக்காங்க. அவங்கல்லாம் அந்த வாரம் பார்டிஸிபேட் பண்ணப் போறாங்க. இது தவிர ஒரு இன்ப அதிர்ச்சி தரலாம்ன்னு யோசனை இருக்கு. வெயிட். இப்பவே சொல்லிட்டா சுவாரசியம் போயிடுமே?

— சுபி



• ஒரு திருமண வீட்டில் அண்ணா பொடி போடும்போது 'க்ளிக்'கப்பட்ட படம் இது!

அப்புறம் என்ன ஆச்சு?

# அண்ணாவின் பொடி டப்பா

"லட்சக்கணக்கான மக்கள் கூடியுள்ள பொதுக் கூட்டத்தின் போது கூட, முகத்தை மேல் துண்டால் ஓரிரு விநாடிகள் மறைத்துக்கொண்டு மூக்குப் பொடி உறிஞ்சிவிடுவார் அறிஞர் அண்ணா. அவரது சரளமான மேடைப் பேச்சில், எந்தவித தடங்கலையும் ஏற்படுத்தாதபடி பொடி போடும் அவரது சாதுர்யம் இருக்கிறதே...!" என்று அண்ணாவைப் பற்றி பலரும் சொல்வதுண்டு. ஆனால், "அது முற்றிலும் தவறான ஒரு தகவல். மேடையில் பேசுகிறபோது அண்ணா பொடி போடவேமாட்டார்!" என்கிறார் அண்ணாவின் மகன் டாக்டர் பரிமளம். மேடையில் பேசி முடித்துவிட்டு, சம்பந்தப்பட்டவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டபின்தான் பொடி டப்பாவையே தொடுவாராம் அண்ணா.

சரி, அண்ணா பயன்படுத்திய பொடி டப்பாக்கள் இப்போது எங்கே உள்ளன? சென்னை மெரினா அண்ணா சதுக்கத்தில் உள்ள நினைவிடத்திலும் காஞ்சிபுரத்தில் உள்ள அண்ணா வாழ்ந்த (இப்போது நினைவு) இல்லத்திலும் மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன.

"அவர் ஆரம்ப நாட்களில், வாழை மட்டையில்தான் பொடியை மடித்து வைத்திருப்பார். அப்புறம் வழக்கமான, சிறிய சைஸ் உருளை வடிவ டப்பாக்களைப் பயன்படுத்தியதுண்டு. பின்னர் இடுப்பில் வேட்டி மடிப்பில் வைத்துக் கொள்ளச் சௌகரியமாக சதுரவடிவ பொடி டப்பாக்களைப் பயன்படுத்தினார்!" என்கிறார் பரிமளம்.

பள்ளிக் கூடத்தில் படிக்கிறபோது, நெடு நேரம் கண்விழித்துப் படிக்க வேண்டிய சமயங்களில், மூக்குப் பொடியை லேசாக மூக்கில் தடவிக் கொண்டு, அந்த உறைப்பில் தூக்கம் கலைய, படிப்பாராம். இப்படி ஆரம்பித்த பழக்கம், அவர் பள்ளியிறுதி வகுப்பில் படிக்கிற சமயம், பையில் பொடி மட்டை வைத்துக் கொள்ளுமளவுக்கு, கெட்டியாய் அவரைப் பிடித்துக் கொண்டு விட்டதாம்.

"பள்ளியிறுதி வகுப்பில், பரீட்சை எழுதுகிற போது நடந்த ஒரு சம்பவத்தை அண்ணா, ரொம்பத் தமாஷாய் என்னிடம் சொன்னது உண்டு. பரீட்சை ஹாலில், பாதி எழுதிக் கொண்டிருக்கிற போது பொடி போட வேண்டும் போல இருந்ததாம். ஆனால், பொடி உறிஞ்சுவது, மேற்பார்வை செய்யும் ஆசிரியர் மற்றும் சக மாணவர்களின் கவனத்தை ஈர்க்கும் என்பதால் ரொம்பத் தயங்கினாராம். ஆசிரியர், அறையின் கோடியில் நின்று கொண்டிருந்தபோது, இவர் மெதுவாக பொடி மட்டையை எடுக்க முயல, சந்தேகக் கண்ணுடன் இவரையே பார்த்துக் கொண்டிருந்த ஆசிரியர், பாய்ந்து வந்து அண்ணாவின் கையைப் பிடித்துக் கொண்டாராம். 'கையைத் திற' என்று அவர் சொல்ல, இவர் தயக்கமாய் மறுக்க, ஆசிரியரின் சந்தேகம் வலுத்து விட்டது. கடைசியில் அண்ணா கையைத் திறந்து காட்டிய போது, பொடி மட்டையைப் பார்த்த ஆசிரியருக்கு 'பிட்' இல்லாத ஏமாற்றம். பொடி மட்டையைக் கண்டு வியப்பாகி விட்டதாம்!"

அண்ணா, பொடி போடும் பழக்கத்துக்கு அடிமையாகி விட்டாலும், வயது முதிர்ந்த காலத்தில் கூட வீட்டில் பெரியவர்களின் முன் பொடி போட மாட்டார். ராணி அம்மா, ஆரம்ப நாட்களில் அண்ணா பொடி போடுவதை ஆட்சேபித்திருக்கிறார். ஒரு சமயம், பொடி மட்டையைத் தூக்கி வீசியது கூட உண்டாம். ஆனால், அண்ணா அவரை சமாதானப்படுத்தி விட, அதன் பின் பொடி போடுவதை ஆட்சேபித்தது கிடையாதாம்.

இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டு, நாலுமாத சிறை தண்டனையில் இருந்தபோது அண்ணா பொடி கிடைக்காமல் தவித்துப் போய் விட்டாராம். அதைப் பற்றி அண்ணா எழுதுகிறார்: "அந்த (பொடி போடும்) கெட்டப் பழக்கத்துக்கு ஆட்பட்டு அல்லற்படுவதுதான் உனக்குத் தெரியுமே தம்பி! என் சங்கடத்தை அறிந்து, ஈழத்து அடிகள் (திராவிடர் கழக நிர்வாகி) இதோ என்று ஒரு சிறு காகிதப் பொட்டலத்தைக் கொடுத்தார். பொடி! நெடி குறைந்து போன பொடி! ஆனால் எனக்கோ அதையும் மறுக்க மனமில்லை. களிப்புடன் அந்தப் பொடியைப் போட்டுக் கொண்டேன்! அந்தப் பொடியை வாழ்நாள் முழுதும் மறக்க மாட்டேன்!"

— கௌதம்

படம் : ஸ்ரீஹரி

மாதா, பிதா, மாணவன் - 6



# இங்கே சீதை: இலங்கையில் ராமன்!

எங்கள் திருமணம் சென்னையில் விமரிசையாக நடந்து முடிந்தது. ஒய்.ஜி.பி இலங்கைக்குக் கிளம்பிப் போய்விட்டார். காரணம், அவருக்கு டெல்லியிலிருந்து கொழும்புவுக்கு மாற்றலாகி விட்டது. வெளியுறவு அமைச்சகத்தில் வேலை.

சில மாதங்களுக்குப் பின் நான் கொழும்புவுக்குப் போனேன். அங்கே ஒய்.ஜி.பி ஒண்டிக்கட்டையாய் வசித்த இடத்தில், குடித்தனம் பண்ண சௌகரியப்படாத சூழ்நிலை. எனவே, கொழும்பு நகரில் தமிழ் மக்களிடையே செல்வாக்கான அரசியல் தலைவரான சச்சிதானந்தாவின் மகள் வீட்டில் தங்க ஏற்பாடானது. ஒய்.ஜி.பி அங்கே அடிக்கடி வந்து என்னைச் சந்திப்பார். விடுமுறை தினங்களில், பல்வேறு சுற்றுலாத் தலங்களுக்கும் சென்று கண்டு மகிழ்ந்தோம்.

அப்போது நடந்த ஒரு மறக்க முடியாத சம்பவம்:

எனக்கு கைரேகை பார்ப்பதில் அதிக ஆர்வம் உண்டு. எல்லாம் நானாகக் கற்றுக் கொண்டது. ஒருநாள், கொழும்பு நகரில் ஒரு பார்ட்டிக்கு நாங்கள் சென்றிருந்தோம். நான் யாரோ ஒருவருக்கு கைரேகை பார்த்துக் கொண்டிருந்தபோது, அங்கே வந்த ஒருவர் தம் கையை நீட்டி, தனக்கு அயல் நாட்டுக்குச் செல்ல வாய்ப்பு இருக்கிறதா? என்று கேட்டார். நான் அவரது கையைப் பார்த்து விட்டு, "உங்களுக்கு அயல்நாடு போக சான்ஸே இல்லை'' என்றேன். நான் சொன்னதைக் கேட்டுவிட்டு, அவர் பலமாக சிரித்தார்.

திருமதி ஒய்.ஜி.பி

"நாளை மறுநாள் நான் லண்டன் புறப்படு கிறேன். விமான டிக்கெட்கூட வந்து விட்டது. நீங்கள் என்னடாவென்றால், அயல்நாட்டுப் பயணத்துக்கு வாய்ப்பு இல்லை என்கிறீர்களே!" என்றார். நான் 'அதெல்லாம் எனக்குத் தெரியாது; உங்கள் கையில் என்ன இருக்கிறது என்று பார்த்து நான் சொன்னது இது' என்றேன்.

சில நாட்கள் கழித்து நாங்கள் வேறு ஒரு நிகழ்ச்சிக்குப் போனபோது அங்கே, என்னைப் பார்த்துவிட்டு, அவசரம் அவசரமாய் வந்த அந்த மனிதர் சொன்னார்: 'மேடம்! நீங்கள் என் கைரேகையைப் பார்த்துவிட்டுச் சொன்னது பலித்துவிட்டது. என் அயல் நாட்டுப் பயணம் ரத்தாகி விட்டது. மறுபடியும் நான் போக முடியுமா என்று உறுதியாகத் தெரியவில்லை! உங்கள் ஜோதிடத் திறமைக்கு என் பாராட்டுக்கள்' என்றார்.

அதேபோல, நான் தங்கியிருந்த வீட்டுக்காரரான லிங்கா சச்சிதானந்தாவுக்குக் குழந்தை கிடையாது. அவரது கையைப் பார்த்துவிட்டு, "நீங்கள் கவலையே பட வேண்டாம்! உங்களுக்கு நிச்சயம் குழந்தை பிறக்கும்" என்றேன். பிற்பாடு, நான்கு குழந்தைகளுக்குத் தாயாகும் வாய்ப்பு அந்த அன்பான பெண்மணிக்குக் கிடைத்தது.

நான் சென்னை திரும்பி வந்து விட்டேன். ஒய்.ஜி.பி மட்டும் கொழும்புவிலேயே வேலையில் இருக்கிறார். எங்கள் திருமணத்துக்குப் பிள்ளையார் சுழி போட்ட அனந்த சயனம் மாமாவின் உதவியை நான் நாடினேன். அவர் அப்போது சபாநாயகராகி விட்டார். அவருக்கு மிக நகைச்சுவையுடன் என் கோரிக்கையை அனுப்பி வைத்தேன்.

சீதையை இலங்கையில் சிறை வைத்திருந்த ராவணனிடமிருந்து மீட்டு, ராமனிடம் ஒப்படைக்க அனுமார் பேருதவி புரிந்தார். இப்போது, சீதை நான் இந்தியாவில் இருக்கிறேன். என் ராமனோ, இலங்கையில் இருக்கிறார். அந்த அனுமார் போல நீங்கள் ஏதாவது செய்து, எங்களை ஒன்று சேர வைக்கக் கூடாதா? என்பதுதான் அந்தக் கடிதத்தின் சாராம்சம். அவர் சம்பந்தப்பட்டவர்களுடன் பேச, ஒய்.ஜி.பி.க்குச் சென்னைக்கே டிரான்ஸ்பர் கிடைத்தது.

இந்தக் கதை ஒரு பக்கம் இருக்க, டெல்லியிலிருந்து சென்னைக்கு என் அப்பா டிரான்ஸ்பரின் பேரில் வந்தபின், நான் வீட்டில் சும்மா இருக்க விரும்பவில்லை. வேலைக்குப் போவதைவிட, மேற்கொண்டு ஏதாவது படிக்கவே விரும்பினேன். என்ன படிப்பது என்ற கேள்வி எழுந்தபோது நான் தேர்ந்தெடுத்தது பத்திரிகை இயல் (ஜர்னலிசம்).

அப்போதுதான் சென்னை பல்கலைக் கழகத்தில் பத்திரிகை இயலில் போஸ்ட் கிராஜுவேட் டிப்ளமா படிப்பு துவக்கப்பட்டிருந்தது. நான் விண்ணப்பித்தேன். பிரச்னை எதுவுமில்லாமல் இடம் கிடைத்துவிட்டது. மொத்தம் இருபது பேர். அவர்களுள் நான் ஒருத்தி மட்டுமே பெண். சென்னை பல்கலைக் கழகத்தின் ஜர்னலிசம் படிப்பில், வெறுமனே வகுப்பறைக்குள் உட்கார வைத்து பாடம் சொல்லிக் கொடுப்பதுடன் நிறுத்திக் கொள்ளாமல், தினசரிப் பத்திரிகைகளின் ஆபீசுக்கே தினமும் அனுப்பி வைத்து, பிராக்டிகல் டிரெயினிங்கும் பெறுவதற்கு வாய்ப்பு ஏற்படுத்தித் தந்தார்கள்.

நான் பத்திரிகை இயல் படிப்பு படித்த நாட்களில் ஒரு நாளைக்கு இருபத்தி எட்டு மணி நேரமாக இருக்கக் கூடாதா என்று நினைத்துக் கொள்ளுவேன். அந்த அளவுக்கு காலை முதல் இரவுவரை டைட்டாக இருக்கும்.

காலை ஆறரை மணி முதல் டைப்ரைட்டிங், ஷார்ட்ஹாண்ட் பயிற்சி. (ஒரு ஜர்னலிஸ்டுக்கு அவசியமாயிற்றே?) அங்கிருந்து புறப்பட்டால் ஒன்பது மணிக்குப் பல்கலைக்கழகம். பதினோரு மணி வரை வகுப்பு இருக்கும். உடனே புறப்பட்டு நேரே ஹிந்து பத்திரிகைக்குப் போக வேண்டும். நாலு மணி வரை அங்கே பிராக்டிகல் பயிற்சி. அங்கிருந்து மறுபடி பல்கலைக் கழகம். ஆறு மணி வரை வகுப்பு. எல்லாம் முடிந்து வீடு திரும்ப மணி ஏழு ஆகிவிடும்.

இந்தக் காலம் மாதிரி அப்போது இரண்டு சக்கரவாகன வசதியெல்லாம் இல்லை; எங்கே போனாலும் பஸ்தான்.

பத்திரிகை இயல் படிப்பு ஒரு வருஷ கோர்ஸ். அந்த ஒரு வருஷ காலமும் தினம் பன்னிரண்டு மணி நேரம் அலுத்துக் கொள்ளாமல் உழைத்திருக்கிறேன். இந்தக் காலத் தலைமுறையினர், புத்திசாலிகளாக இருக்கிறார்கள்; எதையும் சட்டென்று புரிந்து கொள்ளுகிறார்கள் என்பதெல்லாம் உண்மைதான். என்றாலும்கூட உடல்ரீதியாக கடுமையாய் உழைக்க முன்வருவது இல்லை. ரொம்ப சௌகரியம் எதிர்பார்க்கிறார்கள். இதை நான் ஒரு குறையாகக் கூறவில்லை. பழைய தலைமுறையினருக்கும், இப்போதைய தலைமுறையினருக்கும் இடையிலே உள்ள மனோபாவ வித்தியாசத்தைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அவ்வளவுதான்.

இந்து பத்திரிகையில் பணியாற்றியது என் வாழ்க்கையில் மறக்க முடியாத கால

எனக்கு எப்பவும் முதல் ஐந்து வரி கிளீனா இருக்கணும். பேப்பரில் சின்ன அடித்தல் வந்தாலோ, மை பட்டாலோ, கசங்கினாலோ, பேப்பரைக் கசக்கி தூரப் போட்டுடுவேன். அதே மாதிரி, நான் கதைல என்ன சொல்லப் போறேங்கறதை முதல் இரண்டு வரி தீர்மானிக்கணும். முதல்லயே கதை முழுக்க யோசிச்சு வச்சிருந்தாலும் அந்த முதல் இரண்டு வரிதான் எனக்கு முக்கியம். அது கிடைக்க இரண்டு மணி நேரமானாலும் காத்திருப்பேன். எழுதறப்போ எனக்கு நிசப்தமா இருக்கணும். மிக முக்கியமான, எனக்கு உதவக்கூடிய டெலிபோன் வந்தாக்கூட தாட்சண்யமில்லாம கட் பண்ணிடுவேன்.

— சு. சமுத்திரம்



கட்டம். அங்கேயும் நான் மட்டும்தான் பெண். அங்கு பணியாற்றியவர்களில் பலர், பத்திரிகையுலகில் பல வருட அனுபவஸ்தர்கள். என்னிடம் அக்கறை காட்டி, பல விஷயங்களையும் சொல்லிக் கொடுத்தார்கள். ஒருநாள், பிரபல ஆங்கில எழுத்தாளர் பி.ஜி. வோட்ஹேறாஸ், ஜெர்மனியில் அனுபவித்த சிறை தண்டனையிலிருந்து விடுதலையாகி, அமெரிக்கா வந்து செட்டில் ஆனபின், மறுபடி எழுத ஆரம்பிக்கப் போகிறார் என்பது பற்றிய செய்தி ஒன்று பத்திரிகையில் பிரசுரிப்பதற்காக வந்திருந்தது.

ஹிந்துவின் உதவி ஆசிரியர்களுள் ஒருவர் அன்றைக்குத்தான் ஒரு செய்திக்கு மிகப் பொருத்தமான தலைப்பு தர வேண்டியதன் முக்கியத்துவம் பற்றி எனக்குச் சொல்லிக் கொடுத்திருந்தார். எனவே, வோட்ஹேறாஸ் பற்றிய செய்தியை என்னிடம் கொடுத்து, அதற்குப் பொருத்தமான ஒரு தலைப்பைத் தரும்படிக் கூறினார். நான் அந்தச் செய்தியைப் படித்துப் பார்த்தேன். ஒரு செய்திக்குத் தலைப்பு எப்படி இருக்க வேண்டும் என்று அவர் சொல்லிக் கொடுத்த பாயிண்ட்களையெல்லாம் நினைத்துப் பார்த்துக்கொண்டேன். சுருக்கமாக இருக்க வேண்டும். செய்தியின் சாரம் என்ன என்பதைக் கோடிட்டுக் காட்டுவதாக இருக்க வேண்டும். சரி... தலைப்பு என்ன கொடுக்கலாம் என்று யோசித்தேன். சட்டென்று ஒரு தலைப்பு தோன்றியது. "Wodehouse at it again." உடனே எழுதி அந்த உதவியாசிரியரிடம் காட்டினேன். 'நன்றாக இருக்கிறதே! வெரிகுட்' என்று பாராட்டினார்.

மறுநாள் காலை எழுந்தவுடன், ஹிந்து பேப்பரைப் புரட்டினால் இனிய ஆச்சரியம். "Wodehouse at it again" என்று நான் கொடுத்த தலைப்பிலேயே அந்தச் செய்தி வெளியாகியிருந்தது. அதைப் பார்த்தவுடன் எனக்கு சந்தோஷம் தாங்கவில்லை. வீட்டிலும், அக்கம்பக்கத்திலும் என் சந்தோஷத்தைப் பகிர்ந்து கொண்டேன்.

இதுபோல இன்னும் எத்தனையோ சுவாரசியமான அனுபவங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம். அப்போது ஏற்பட்ட பத்திரிகைத் துறை ஆர்வம், இன்னமும் என்னை விடவில்லை. எங்கள் பள்ளிக்கூடத்தில் படிக்கிற மாணவ, மாணவியருக்கும் ஆர்வம் ஊட்டி வருகிறேன். வருடா வருடம் பள்ளிக்கூட ஆண்டு மலரில் மாணவ, மாணவியர் எழுதும் படைப்புகளை வெளியிடுவதோடு நான் நின்று விடுவதில்லை. எங்கள் மாணவ, மாணவிகளே சேர்ந்து 'பி.எஸ்.பி.பி டைம்ஸ்' என்று ஒரு சிறு பத்திரிகையை நடத்தி வருகிறார்கள். பிரபலங்களை, எங்கள் பள்ளிக்கூட மாணவ, மாணவிகள் அடங்கிய சிறு குழு நேரிடையாய்ச் சந்தித்து பேட்டி காண்கிறார்கள்.

அவர்கள் பேட்டி கண்ட இரண்டு பிரபலங்கள் எனக்கு உடனடியாக நினைவுக்கு வருகிறார்கள். திருமதி எம்.எஸ். சுப்புலட்சுமியும், மத்திய அமைச்சரான திருமதி மேனகா காந்தியும்.

இதில் ஒரு விசேஷம் என்னவென்றால், எங்கள் மாணவர்கள் பேட்டி கண்டு பி.எஸ்.பி.பி டைம்ஸ் இதழில் வெளியாகும் கட்டுரைகளை, பிரபல தமிழ், ஆங்கிலப் பத்திரிகைகள் மறுபிரசுரம் செய்கின்றன. அந்த அளவுக்கு எங்கள் மாணவ, மாணவிகள் அடங்கிய சிறுபர் குழு கவையாக பேட்டி கண்டு எழுதும் திறமைசாலிகளாக இருக்கிறார்கள்!

(இன்னும் சொல்லுவேன்)

படம்: ஸ்ரீஹரி

“முருகேசா... எங்கியோ போகணும்னியே... போய்ட்டு வந்துரு. அப்புறம் நேரம் கெடைக்காது...” என்றார் வெங்கிடு



மாமா.

“போகணும் மாமா...” என்றான் முருகேசன்.

மங்களத்தின் முள் முகத்தை நினைக்கும் போதே எரிச்சலாக வந்தது. சிரமப்பட்டுப் போவதற்கு இரண்டு வார்த்தையாவது பேசுவாளா? பச்சைத் தண்ணீராவது கொடுப்பாளா?

அவளிடம் அவமானப் படப் போகிற துளி நேரக் கற்பனையில் தயங்கி மீண்டும் உட்கார்ந்தான்.

“அட... ஏன் நிக்கிறவன்? கௌம்பு...”

“சரி மாமா... வர்றேன்...”

அவன் நாலெட்டு நடந்ததும், “சீக்கிரமா வந்துரு... தங்கச்சி வீடுன்னு விருந்துக்கு உக்கார்ந்துராதே...” என்றார். வேண்டுமென்றே சீண்டுகிற வார்த்தைகள்.

மும்தாஜ் யாசீன்

“ஆமா... அதொண்ணுதான் குறைச்சல்” திரும்பிப் பார்த்து பதில் சொன்னான். விடுவிடுவென்று நகர்ந்தான். இத்தனை வெயிலில் அலைய வைக்கும் பெரியப்பாவின் மீது கோபம் வந்தது.

டவுனுக்கு வந்து போகிற நாளில் தவறாமல் கேட்பார், “ஏம்ப்பா... புள்ளையைப் போயி பார்த்தியா?”

“முடியலை பெரியப்பா... அடுத்தவாட்டி கண்டிப்பாப் போறேன்...”

“ஆமா...போனே....” முகம் கன்டி விடும். வருத்தம் தெரியும். சில சமயங்களில், “உங்

# உடன்பிறப்பு

களுக்கெல்லாம் பந்த பாசம் ஏதுடா... எல்லாம் எங்க காலத்தோட போச்சு..." என திட்டிப் போவதும் உண்டு. மனதில் அதிர்வைப் பதிவு செய்கிற வார்த்தைகள் அவை.



அப்பாவுக்கும் சரி. பெரியப்பாவுக்கும் சரி. குழந்தைகளிடத்தில் பேதம் கிடையாது. குடும்பம் ஒன்றாக இருந்த காலம் அது. திருவிழாவில் கிலுகிலுப்பை வாங்கினாலும் பண்டிகைக்குத் துணி மணி எடுத்தாலும் எல்லாமே பொதுவானவை! யார் முந்துகிறார்களோ அவர்கள் செலவு அது. குடும்பம் விரிந்து பெண்டுகளுக்குள் இசைவின்மையும், சம்பாதனையில் கணக்கும் ஏற்படும் வரை அப்படித்தான் இருந்தது. வாழ்க்கை இருவரையும் வெவ்வேறு தளத்திற்குப் புரட்டிப் போட்ட பிறகும் அடித்தளம் சிதைய வில்லை. அப்பாவுக்கு மாரடைப்பு வந்த போது பெரியப்பா ஊரில் இல்லை. கேள்விப் பட்டதும் பதறிக் கொண்டு ஓடி வந்தார். எத்தனை சொல்லியும் கேளாமல் ஆஸ்பத்திரி திண்ணையில் சுருண்டு கிடந்தார்.

இதெல்லாம் முந்திய தலைமுறையின் அடையாளங்கள். அடுத்த தலைக்கட்டு இதையெல்லாம் தூக்கிப் பிடிக்க வேண்டும் என்று நினைத்தால்தானே?

பெரியப்பாவின் மூத்த மகளையாவது ஒரு பங்கில் சேர்த்துக் கொள்ளலாம். மங்களம் அம்மாவைக் கொண்டிருந்தவள். சின்ன வயதிலிருந்தே ஆகாது.

டவுனில்தான் புருஷன் வீட்டிலிருந்தான். இரண்டு மாதங்களுக்கு முன்பு நடந்த கல்யாணம். இன்னும் அவன் எட்டிக் கூடப் பார்க்கவில்லை.

**நான் கையால எழுதி ரொம்ப நாளாச்சு. டிக்டேஷன்தான். இப்போ படைப்பிலக்கியம்னு எதுவும் எழுத றதில்லை. கட்டுரைகள்தான் நிறைய எழுதிக்கிட்டிருக்கேன். கவிதையானாலும் சரி, கட்டுரையானாலும் சரி; ரொம்ப சிந்தித்துதான் டிக்டேட் பண்ணுவேன்.**

**– கி. கஸ்தூரிரங்கன்**



றாக ஞாபகம் இருந்தது.

ஒரு நடவுக் காலம் அது. ஏர்க்கால் குறைந்தது. வேலைக்கு ஆட்கள் வருகிற நேரம். பெரியப்பா வீட்டிற்குப் போனான். மங்களம் மட்டுமே இருந்தாள். விஷயத்தைச் சொன்னதும் முதலில் ஒன்றும் பேசவில்லை. பிறகு "எங்களுக்கும் வேலை இருக்கே..." என இழுத்தாள்.

"இன்னைக்கு ஒரு பொழுது மட்டும்தான்.... மங்களம்"

"ம்ஹூம்... அப்பா திட்டுவாரு...." விசுக்கென்று உள்ளே போய் விட்டாள்.

தலைக்கு ஏறிய கோபத்துடன் வெறுங்கையுடன் திரும்பி வந்தான். வயல் வேலை பாதித்தது. வேலையாட்களுக்கு தண்டமாய் கூலி கொடுக்கும்படி ஆயிற்று.

"ஏண்டா... வெவரம் தெரியாம அந்தப் புள்ளை என்னமோ சொன்னா நீயும் கோவிச்சுக்கிறதா? உன் உரிமை எனக்கும் இருக்குன்னு எடுக்க வேண்டியதானே... நான் வெட்டியா போடுவேன்?" சாயங்காலம் வீடு தேடி வந்து பெரியப்பா சத்தம் போட்டார்.

அப்பாவும் அம்மாவும் மௌனமாக அவனைப் பார்த்தார்கள். வெறுப்புடன் முருகேசன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். கொஞ்ச நாள் உறவுக்காரர்கள் மத்தியில் இதே பேச்சாக இருந்தது.

முருகேசன் இரண்டு பக்கமும் வீட்டு எண்ணைப் பார்த்துக் கொண்டே நடந்தான்.

வெளிர் மஞ்சள் சுண்ணாம்பு அடித்த கம்பி வலை போட்ட வீடு.

மங்களத்தின் வீடு. நடை நின்றது.

கண நேர தயக்கத்திற்குப் பின் கதவைத் தட்ட, மங்களத்தின் மாமியார் கதவைத் திறந்தாள். "யாரு...?"

சொன்னான்.

"மங்களம்... மங்களம்..."

சமைத்துக் கொண்டிருந்திருப்பாள் போலும். கையில் கரண்டி. இழுத்துச் செருகிய சேலையும் அள்ளி முடிந்த கொண்டையுமாக வந்தாள். எதிர்பாராத ஆளாக அவனைக் கண்ட ஆச்சரியம் முகத்தில் விரிந்தது. "அட.... முருகேசு அண்ணனா... வா... வா..."

குரலும் தோரணையும் மாறி, அவள்தானா என நினைக்கும்படி இருந்தது.

"தெரியலையா அத்தை.... எங்க சித்தப்பாரு மகன்..." முகத்தில் கேள்வியுடன் நின்ற மாமியாரிடத்தில் சொல்லிவிட்டு, அவன் பக்கம் திரும்பி, "இப்பத்தான் வழி தெரிஞ்சு வந்திருக்கு..." என்றாள்.

உடம்பில் புது மினுமினுப்புத் தெரிந்தது. ஒற்றை செயினோடு பின்னியிருந்த மஞ்சள் கயிறு வசீகரமாக இருந்தது. குரலில் இறுக்கம் தளர்ந்த மெருகு.

தன்னுள் பதிவாகி இருந்த பிம்பம் சிதைய, முருகேசன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு மங்களம் அவன் அருகில் உட்கார்ந்தாள். எல்லோரையும், எல்லாவற்றையும் விசாரித்தாள்.

"மங்களம் அப்புறம் பேசலாம். தம்பி வெயில்ல வந்திருக்கு. முதல்ல ஏதாச்சும் குடு..." என்றார் மாமியார்.

"அதானே..." மங்களம் உள்ளே போனாள்.

அவனது பிரமிப்பு இன்னும் கலையவில்லை. மங்களம் தானே இது? என தனக்குள் கேட்டுக் கொண்டான்.

நேற்றைய தினம் பெரியப்பா வந்தார்.

"நாளைக்கு டவுனுக்குப் போறியா முருகேசு?"

"ஆமா... பெரியப்பா..."

"ஒரு காரியம் பண்ணணுமே எனக்கு."

"சொல்லுங்க...."

"புள்ளைக்கு தலை நோம்பு வருது. நடவு சமயம். போக முடியலை. அடுத்த வாரந்தான் பாக்கணும். இப்ப துணிமணிக்கு பணம் தர்றேன். குடுத்துட்டு வந்துரு."

"சரி...."

"ஒண்ணும் கஷ்டம் இல்லையே..."

"இல்லை... குடுங்க."

சட்டைப் பையில் பணம் கனத்தது.

முருகேசனுக்கு நன்

"உன்னைப் பத்தி சொல்லி இருக்கா. சண்டை போடுவீங்களாம் ரெண்டு பேரும்" என்றார் மாமியார்.

"அ.... ஆமா...."

"சண்டை போடறவங்கதான் பிரியமா இருப்பாங்கன்னு எங்க வீட்ல சொல்வாரு" படமாகத் தொங்கிய புருஷனைப் பார்த்தாள்.

அந்தம்மாவிடமிருந்து பார்வையை மீட்டு வீட்டைச் சுற்றிப் பார்த்தான். சோபா, இரண்டு நாற்காலிகள். சுவர்க் கடிகாரம், மூலையில் டீ.வி., தினசரி காலண்டர், ஒன்றையொன்று துரத்தும் இரண்டு பறவைகளின் படம் என எங்கேயும் காண முடிகிற சராசரிப் பொருட்கள்தான். வரிசைப்படுத்தியதில் வசீகரம் இருந்தது. உறுத்தாத சினேகிதமான சூழ்நிலை.

ஏதோ கிராமத்தில் சாணி பொறுக்கி, மாட்டைக் குளிப்பாட்டி, வயக்காட்டிற்கு சோறு சுமந்து போன ஒருத்திக்கு இவ்வளவு நாசூக்குடன் வீட்டைப் பராமரிக்கத் தெரியுமா?

தட்டில் பலகாரம் வைத்து, "சாப்பிடுண்ணே..." என்றாள் மங்களம்.

"எதுக்கும்மா இதெல்லாம்?" சங்கோஜமாக இருந் தது. தான் எதுவும் வாங்கி வராதது உறுத்தியது. "மாப்ளை எப்ப வருவாரு?"

"ஆறு மணி ஆயிரும்ணே..."

"அப்படியா?"

பெரியப்பா அனுப்பி வைத்ததைச் சொன்னான்.

"இருந்து அவரு வந்ததும் நீயே தட்டுல வச்சுக் குடுத்துரு" என்றாள்.

"நேரமில்லையேம்மா..."

"அதுக்கு.. என்னையே வாங்கச் சொல் றியா? அழைப்புப் பணம் எனக்கா? என் வீட்டுக்கு நான் வர இந்த மரியாதையெல்லாம் வேணுமா? நல்லா இருக்கு" கலகல வென்று சிரித்தாள்.

உரம் வாங்க டவுன் வந்ததையும், வெங்கிடு மாமா அங்கே காத்திருப்பதையும் சொன்னான். "அவரையும் கூட்டி வர வேண்டியதுதானே..." என்று கோபித்துக் கொண்டாள். எழுந்து நின்றவனை, 'எல்லாம் சாப்பிட்டுப் பேசலாம். உக் காரு' என வற்புறுத்தினாள்.

**சா**ப்பாடும் இலேசுப்பட்டதாக இல்லை. திகட்டத் திகட்ட முழு விருந்தே போட்டாள்.

"அப்ப... நான் வேலையை முடிச்சுக்கிட்டு சாயங்காலம் வர்றேன் மங்களம். மாப்பிள்ளை வந்தாச் சொல்லு..."

"நெசந்தானே வர்றது?"

"சத்தியமா..."

"அப்ப சரி..."

எழுந்தான். வாசல் வரைக்கும் கூடவே வந்தாள்.

படி இறங்கி அவன் செருப்பைப் போட்டுக் கொள்ளும் போது கைகளைப் பிடித்துக் கொண்டாள். "டவுனுக்கு அடிக்கடி வர்றே. தங்கச்சியைப் பார்க்கணும்னு தோணலையாண்ணே..."

சில்லென்ற ஸ்பரிசம். குரல் நெகிழ்ந்து கண்கள் பளபளக்க வெளிப்பட்ட உரிமையான கேள்வி.

முருகேசன் தடுமாற, "பழசை மறந்துரு. என்னமோ அப்ப வெவரம் தெரியாத புத்தியாப் போச்சு."

"சேச்சே... என்னம்மா நீயி?" என்றான் பரிதவித்து.

கல்யாணத்திற்குப் பிறகு என்ன ஆகி விடுகிறது இந்தப் பெண்களுக்கு? பிடுங்கி நட்ட செடியாய், முளைத்த மண்ணின் மீது ஏக்கமா? விலகி நின்று உறவைப் பார்க்கும்போது உண்டாகும் பாசமா? திரையை விலக்கி தன் புதிய முகம் காட்டும் மங்களம்.

இதுதான் நிஜமா?

ஒவ்வொரு முறை டவுனுக்கு வந்து திரும்பும்போதும், "மங்களத்தைப் பார்த்தியா முருகேசா?" என்று ஆவலுடன் கேட்பார் பெரியப்பா. அவன் மௌனமே அவருக்குப் பதிலை உணர்த்திவிடும். ஆனால், நாளைக்கு பெரியப்பா, "புள்ளையைப் பார்த்துட்டு வந்தியா முருகேசா?" எனக் கேட்கும்போது, குற்ற உணர்வு இன்றி, "ஆமா.. பெரியப்பா...." என சொல்ல முடியும் என நினைத்துக் கொண்டான் அவன். ●



**வீட்டுல இடம் போதலைங்கறதால பார்க்ல போய் எழுதிட்டிருந்தேன். தி. நகர்ல இருக்கற நடேசன் பார்க்லதான் இருபது வருஷமா எழுதிட்டிருந்தேன். இப்போ பார்க் மாறிப் போச்சு. அதாவது, பார்க்கோட தன்மை மாறிப் போச்சு. எழுதறதுக்கான சூழ்நிலை இப்போ அங்கே இல்லை. பார்க்ல எழுதும்போது, அதிகாலைல எழுத ஆரம்பிச்சு வெயில் வர்ற வரைக்கும் எழுதுவேன். இப்போல்லாம் எங்கே வசதி இருக்கோ, அங்கே உட்கார்ந்து அப்பப்போ எழுதறேன்.**

**— அசோகமித்திரன்**

ஆத்மாவை சம்ஸாரக் கட்டிலிருந்து விடுபட அனுமதிக்காமல் சுற்றிலும் பெரிய பெரிய துஷ்ட கிரஹங்கள் சூழ்ந்திருக்கின்றன என்று சொன்னேன்.

அவற்றை வென்று ஆத்மா விமுக்தி அடைந்துவிட்டால் அதனுடைய ஞானத்துக்கே எல்லாம் விஷயமாகும். அப்போது பகவானுக்கு எப்பேர்ப்பட்ட ஞானமோ, அதே போல் நமக்கும் ஏற்படும். மலர்தல், குவிதல் இல்லாத ஞானம் அவனுக்கு. நமக்கு அப்படியில்லை. ஒரு நாள் ஞானம் நன்கு விகசித்திருக்கும்; ஒரு நாள் இருக்காது! ஒரு நாள் உபன்யாசம் கேட்கிறபோது வேதாந்த விஷயத்தையோ உபநிஷத் விஷயத்தையோ இன்னும் கொஞ்சம் நாழி கேட்டுக் கொண்டிருக்கலாம் போலிருக்கும். ஒரு நாள், 'எத்தனை நேரம் இந்த உபநிஷத்! திருப்பித் திருப்பி ஆத்மா ஆத்மா என்று சொல்லிக்கொண்டு... ஏதாவதொரு கதை சொல்லக்கூடாதோ!' என்று தோன்றும்.

ஏன் இந்த மாறாட்டம்...? ஒரு நாள் வேதாந்த விஷயத்தைக் கேட்கப் பிடிக்கிறது. ஒரு நாள் அதிலே புத்தி போகவில்லை!

முதலில் ஒரு விஷயத்தை விசாரிக்கவேண்டும்– வேதாந்த விஷயம் நன்றாகப் பிடிக்கிறது ஒருத்தருக்கு என்றால் அன்றைக்கு மதியம் அவர் என்ன சாப்பிட்டார்? சாத்விகமான பதார்த்தத்தைச் சாப்பிட்டிருந்தாரேயானால் சத்வ குணம் மேலிட்டு வேதாந்த விஷயத்தைக் கேட்க வேண்டுமென்று புத்தி வரும். தமோ குண, ரஜோ

# 10

## முக்கூர்

## லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

குண உணவு வகைகளைச் சாப்பிட்டால் அதற்கேற்ற மாதிரிதான் புத்தி வேலை செய்யும். வேதாந்த விஷயங்களை கிரஹிக்காது. ஆகையினாலே ஆகாரத்தினால் புத்தி மாறாட்டம் நமக்கு ஏற்படும். பகவானுக்கு இந்த மாதிரி இல்லை. எப்போதுமே விகசித்தே இருக்கும், அவனுடைய புத்தி. அந்த மாதிரி, இந்த ஆத்மாவுக்கு விசேஷ ஞானம்– பகவானைப் போன்ற ஞானம் உண்டாகிறபோது, எல்லாவற்றையும் இருந்த இடத்திலிருந்தே கிரஹிக்கும்படியான சக்தி ஏற்படுகிறது.

ஆத்மாவானது சரீரத்துக்குள்ளே கட்டுப்பட்டு இருக்கிறபோது அல்ப அறிவு படைத்ததாய் இருக்கிறது. இந்த்ரியங்கள் மூலமாகவே அனைத்தையும் உணர வேண்டிய துர்ஸ்திதியில் நாம் இருக்கிறோம்.

இவ்வாறாக, மிக நுண்ணியதாய், பார்க்க முடியாததாக இருக்கின்ற ஆத்மாவைச் சுற்றிலும் உள்ள துஷ்ட கிரஹங்களை அழகாக விவரித்தார்கள் மகான்கள்.

அந்த துஷ்ட கிரஹங்கள்தான் ராவணன். நம் மனசுக்கு ராவணன் என்றே பெயர்! ராவணன் எப்படிப்பட்டவன்...? இதரர்களை அழப்பண்ணக்கூடியதே அவன் காரியம்! இதரர்கள் மனத்தை அறுக்கக் கூடியவன் அவன்! கஷ்டப்படுத்தக்கூடியவன்! அவன்

பெயரைப் பாருங்கள்... ராவணன் என்று ஏன் அவனுக்குப் பெயர் வந்தது?

ராவயதி ரோதயதி ராவண:

- இதரர்களைச் சிரமப்படுத்துவதனாலே அந்தப் பெயர்.

ராமனைப் பாருங்கள்– ரமயதீதி ராம:

–எல்லோரையும் ரமிக்கப் பண்ணுகிறவன்; ஆனந்திக்கச் செய்கிறவன்; யோகிகள் இதயத்தில் ரம்மியமாய் வாசம் பண்ணக்கூடியவன்–ராம சப்தத்துக்கு இதுதான் பொருள்.

வில்லை முறிக்க ராமன் எழுந்தான்... அப்போது அந்தக் காட்சி எப்படி இருந்தது...?

பொழிந்த நெய்யாகுதி வாய்வழி
பொங்கி
எழுந்த கொழுங்கனல்
என்னவெழுந்தான்!

யக்ஞத்திலே ஹோமம் பண்ணிக் கொண்டேயிருக்கிறபோது நெய்யை எடுத்துச் சேர்க்கிற சமயத்தில் திடீரென்று அந்த அக்னி எப்படி எழுகிறதோ அந்த மாதிரி எழுந்தான் ராமன்.

ராமன் பரம புருஷன்! அதனால் யக்ஞ வேதிகையிலே, ஹோம குண்டத்திலே எழும்படியான அக்னியைப் போன்று எழுந்தான் என்று அவனை





## அருள்வாக்கு

‘நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை’ என்பதிலே இப்படி அதிகார பேதம் பண்ணி எவனோ ஒருத்தனுக்கு பரம உத்தம தர்மத்தை விதியாக வைக்கிற தாத்பரியம் அடங்கியிருக்கிறது. அத்தனை பேரும் நல்லவனாகத் தானிருக்க வேண்டுமென்றால் முடியாது. ஒரு நல்லவன் இருந்தாலே அவனை உத்தேசித்து அத்தனை பேருக்கும் மழை பெய்து விடுகிறது என்ற பழமொழி சொன்னார்கள். ஸமூஹத்தில் ஒரு பிரிவு உத்தம தர்மத்தை அநுஷ்டித்தாலே போதும். அதன் பலன் அத்தனை பிரிவுகளையும் சேர்ந்துவிடும். சிலருடைய அநுஷ்டானத்தாலேயே ஸகலருக்கும் தர்ம மழை, அன்புமழை, ஆண்டவனுடைய அருள்மழை கிடைத்து விடும்படியாக வர்ணாச்ரம விபாகம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.



அவனவன் எந்தக் கர்மத்திலிருக்கிறானோ அதற்கேற்ப அவனவன் தர்மம், ஆசரணைகள் இருக்கும். ஒவ்வொருத்தனும் தன்னுடைய கர்மத்தை மனஸில் காமம், க்ரோதம் அதிகம் இல்லாமல், அதாவது ஆசை- த்வேஷம் அதிகமில்லாமல் செய்ய வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

வர்ணித்தான் கம்பன்.

வால்மீகி வர்ணிக்கிறபோது ராவணனை எப்படிச் சொல்கிறான்...? ராவணன் எப்படி எழுந்தான்...? ‘ஒரு குரங்கு வந்து அசோக வனிகை முழுவதையும் துவம்ஸம் பண்ணிவிட்டது. எல்லோரையும் அழிக்கிறது...’ என்றவுடனே ராவணனும் எழுந்தானாம். சிம்மாசனத்திலிருந்து அவன் எப்படி எழுந்தான்...?

ஸ்மசானத்திலே ஒரு சவத்தை எரிப்பதற்காக மூட்டப்பட்டச் சிதையிலே அக்னி எப்படி கொழுந்து விட்டு எரியுமோ, அப்படி எழுந்தானாம்!

அவனும் எழுந்தான்; இவனும் எழுந்தான்... ராமன் எழுந்தது உத்தம அக்னி போல... ராவணன் எழுந்ததோ சிதாக்னி போல!

ஸ்மசானத்திலே எரியக்கூடிய அக்னி ஏகமாக வெடித்துப் படபடக்குமாம். அது கெட்ட அக்னி! சாத்விகமான அக்னி அப்படி வெடிக்குமா?

அவனுக்குப் பெயர் வணங்களில் அரக்கன். யாருக்கும் வணங்காதவன். யாரையும் வணங்காதவன்.

நம் மனசும் அப்படித்தான்! உடம்பு வேண்டுமானால் எழுந்து எழுந்து பத்து தடவை வணங்கும். நிர்ப்பந்தமாகிவிட்டது என்று எழுந்து வணங்கும். ‘பத்து பேர் சேவிக்கிறபோது நாம் வெறுமே நின்று கொண்டிருந்தால் நன்றாகயிருக்குமா..?’ என்று நிர்ப்பந்தத்திலே வணங்கும்.

ஒருத்தர் ‘உள்ளே வாருங்கள், உங்களுக்கு நமஸ்காரம் பண்ண வேண்டும்’ என்று மற்றொருவரை அழைத்தாராம். ‘உள்ளே’ எதற்கு என்றால் பிறர் பாராமல் நமஸ்காரம் பண்ணுவதற்கு!

‘அடியேன் தண்டம் சமர்ப்பித்து விக்ஞாபனம் பண்ணுகிறேன்’ என்று வெறுமனே கடிதத்தில் எழுதினால் போதுமா!

வயதான ஒருத்தர், கையிலே தண்டம்-தடி-வைத்துக் கொண்டிருக்கிறார். அவர் அந்தத் தடியை அப்படியே நழுவவிட்டு விடுகிறார். அப்படி விட்டால் அந்தத் தடி அப்படியே பார்த்துக் கொண்டிருக்குமா?...

விட்டுவிட்டால் கீழே எப்படி பொத்தென்று விழுமோ அந்த மாதிரி இந்தச் சரீரம் கீழே விழவேண்டும்! மமகாரம், அகங்காரம் இந்த இரண்டும் இருக்கவே

கூடாது. பார்த்த இடத்திலே விழுந்து விட வேண்டும்.

**ஆ**னால், உடம்பு எப்படி வணங்கினாலும் மனசு அப்படி சட்டென்று வணங்காது. மனசுதான் அரக்கன். வணங்கலில் அரக்கன்! அவனுக்கு எத்தனை தலை...? பத்து தலைகள்! மனசுக்கும் பத்து இந்திரியங்கள். –ஐந்து கர்மேந்த்ரியங்கள், ஐந்து ஞானேந்த்ரியங்கள்–மொத்தம் பத்து தலைகள் இந்த ராவணனாகிற மனசுக்கு!

எங்கே இருக்கிறது அந்த மனசு...? ராவணன் எங்கே இருந்தான்...? இலங்கையிலே இருந்தான். மனஸ் என்கிற ராவணன் எங்கே இருக்கிறது? சரீரமாகிற இலங்கையிலே இருக்கிறது!

அந்த இலங்கையைச் சமுத்திரமாகிற அகழி சூழ்ந்திருக்கிறது. சரீரமாகிற இலங்கையை சம்ஸார ஜலதி சூழ்ந்திருக்கிறது.

அங்கே– இலங்கையிலே ஆத்மா யாரு...? சீதா பிராட்டி...

இங்கே நமது சரீரத்திலேயிருக்கிற ஆத்மா, ராமனுக்காகக் காத்திருக்கும் சீதா பிராட்டியைப் போன்றது.

அந்த சீதை உள்ளே இருக்கிறாள். அவள் அனர்த்தப்படாமல் அவளை ஆசார்ய முகேன ஆஞ்சனேயன் மூலமாக ரக்ஷித்து– ஆறுதல் சொல்லி, பகவான் வந்து ஆட்கொள்கிறான்.

'அத்திரவரக்கன் முடி பத்தும் ஒரு கொத்தென உதிர்த்த திரலோன்...' என்றார் சுவாமி தேசிகன்.

ஒரு தலையை வெட்டினால் கிடுகிடுவென்று இன்னொரு தலை உதிக்கும். அது பேச ஆரம்பித்து விடும்! அதைச் சீவினால் இன்னொரு தலை முளைக்கும்!

இப்படிப் பேசுகிறதே என்று பார்த்தான் பரமாத்மா. பத்து தலைகளையும் ஒரே தடவையாக அறுத்து எறிந்தான்! – ஒரு கொத்தென உதிர்த்த திரலோன்!

அதே போல் நம் இந்த்ரியங்களினுடைய பலத்தை அடித்துக் குறைத்து, மனத்தை அடக்கி அவன்தான் ஆள வேண்டும். அவன் அனுக்கிரஹம் பண்ணாவிட்டால் நம்மால் முடியுமா!

(தொடரும்)

# கண்ணாயிரம் பெருமாளின் ஒன்பதாவது நாவல்: சில முன்குறிப்புகள்

முந்தின நாள் விடுப்பில் இருந்து விட்டு அலுவலகம் சென்ற கண்ணாயிரம் பெருமாளை சக ஊழியர்கள் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் முகத்தில் தெரிந்த சீரியஸ் 'பாவம்' அவனை பயம் கொள்ள வைத்தது. அவர்கள் சொல்லிய விஷயமோ, அதற்கு மேல் இருந்தது.

போலீஸ் சி.ஐ.டி.க்கள் இரண்டு பேர் வந்து கண்ணாயிரம் பெருமாளைப் பற்றிய விவரங்களை வாங்கிக் கொண்டு போயிருக்கிறார்கள். விவரங்கள் மட்டும் அல்ல. அவன் வீட்டு முகவரியையும்.

வீட்டு முகவரி என்றதும் தேகமெங்கும் பரவியது பயம். என்ன காரணம்?

நேற்றைய தேதி வரை கண்ணாயிரம் பெருமாள் ஒரு புகழ் பெறாத எழுத்தாளனாகத்தான் இருந்தான். ஆனால் அவனது நல்ல நேரமோ, கெட்ட நேரமோ அவன் எழுதிய ஒன்பதாவது நாவல் பெரும் சர்ச்சையைக் கிளப்பி விட்டது. எழுதக் கூடாத சில விஷயங்களை அவன் எழுதி விட்டதுதான் காரணம்.

சில விமர்சகர்கள் 'அவன் நாவலைத் தடைசெய்ய வேண்டும்' என்றார்கள். சிலர் சல்மான் ருஷ்டிக்குக் கொடுத்த தண்டனையை இவனுக்குக் கொடுக்க வேண்டும் என்றார்கள். எல்லாம் சேர்ந்து அவனுக்கு ஒரு பயத்தை ஏற்படுத்தியிருந்தது.

முன்ஜாமீன் வாங்கி விடலாம் என்றான் பெருமாளின் நெருங்கிய நண்பன் ராஜேந்திரன். அவன் ஒரு செல்வாக்கான பத்திரிகை நிருபர். இலக்கியமென்ன, இவ்வளவு ஆபத்தான விஷயமா என்று ஆச்சரியமாக இருந்தது பெருமாளுக்கு.

ராஜேந்திரனுக்கு போன் செய்தான்.

"இனியும் நாம் தாமதிக்கக் கூடாது. இன்று வெள்ளிக் கிழமை வேறு" என்றான் அவன்.

பெருமாளுக்கு ஆயாசமாக இருந்தது.

"முன்ஜாமீனுக்கு அலைவதெல்லாம் என் வேலை அல்ல. அதற்காக அலைவதற்கு எனக்கு நேரமோ பணமோ கிடையாது. அரெஸ்ட் பண்ணினா பண்ணிக்கட்டும். கொஞ்சம் பேப்பரும் பேனாவும் இருந்தால் போதும். என் அடுத்த நாவலை முடித்து விடுவேன்" என்றான்.

"என்னது, பேப்பரும் பேனாவுமா? நீ என்ன பெரிய அரசியல்வாதின்னு நெனைப்பா? போட்டிருக்கிற பனியனைக் கூட கழட்டிக்கிட்டு விட்ருவாங்க. ஏன்னா லாக்கப்லயே தற்கொலை செஞ்சுக்கக் கூடாது பாரு. தற்கொலை பண்ணிக்க ஒரு பனியன் போதுமே?" என்றான் ராஜேந்திரன்.

பெருமாளுக்கு அடிவயிற்றில் 'சிலீர்' என்றது.

ஒரு வாரத்திற்கு ஒன்றும் நடக்கவில்லை. அடுத்த வெள்ளிக்கிழமை. காலை பதினோரு மணி. பெருமாளின் அலுவலகம்.

"நீங்க கண்ணாயிரம் பெருமாள்தானே? நான் தேனாம்பேட்டை போலீஸ் ஸ்டேஷன்லேந்து பேசறேன். நீங்க என்ன பண்ணிக்கிட்டிருக்கீங்க? ம்...? உங்க நாவலை தடை செய்யணும்னு பத்திரிகைலேல்லாம் வந்துக்கிட்டிருக்கு. நீங்க உடனே வந்து தேனாம்பேட்டை போலீஸ் ஸ்டேஷன்ல இன்ஸ்பெக்டர் விநாயக மூர்த்தியைப் பாருங்க. அதான் உங்களுக்கு நல்லது..."

"சரி சார்..." என்றான் பெருமாள் பதற்றத்துடன்.

கண்ணாயிரம் பெருமான் உயர் ரத்த அழுத்த நோய் உள்ளவன். இப்போது அது தன் வேலையைக் காட்டியது. வேர்த்து விறுவிறுத்துக் கொட்டியது. மார்பு அதிவேகத்துடன் படபடவென அடித்துக் கொண்டது. ஒருசில நிமிடங்கள் தியானிப்பதைப் போல் அமர்ந்திருந்தான். என்ன செய்வதென்ற தெளிவு பிறந்தது.

அலுவலகத்தில் சொல்லி விட்டு ஆட்டோ பிடித்து



சாருநிவேதிதா

ஜென்னியைப் போய்ப் பார்த்தான். ஜென்னி அவனுடைய இரண்டாவது மனைவி. முதல் மனைவிக்கும் அவனுக்கும் விவாகரத்து ஆகி, அவர்களின் ஒரே குழந்தையான நித்யா நீதிமன்ற உத்தரவின் பேரில் அவனுடைய முதல் மனைவியிடம் வளர்கிறாள்.

குழந்தையின் எல்லா செலவுகளுக்கும் கண்ணாயிரம் பெருமாள்தான் பணம் அனுப்புகிறான். ஆனாலும் அவளை இரண்டு ஆண்டுகளாகப் பார்ப்பதற்கே மறுத்து வருகிறாள் நித்யாவின் அம்மா. இன்னொரு முக்கியமான விஷயம் - போலீஸ் ஸ்டேஷன் போன் வந்த தினம் நித்யாவின் பிறந்த நாள்.

அவளுக்கு ஒரு வாழ்த்து கூடச் சொல்ல முடியாத நிலையில் இருக்கிறோமே என்ற

ஸ்டடி ரூம், வொர்க்கிங் டேபிள்னுல்லாம் தனியா எதுவும் கிடையாது. கட்டில்ல் உட்கார்ந்து எழுதுவேன். டைனிங் டேபிளில் உட்கார்ந்தும் எழுதுவேன். குறிப்பிட்ட நேரம்னெல்லாம் கிடையாது. எழுதாமலேயே பல மாதங்கள் கூட இருப்பேன். எழுத ஆரம்பிச்சா, தொடர்ச்சியா எழுதிட்டே இருப்பேன். நாவல், சிறுகதை போன்றவற்றுக்கு மட்டும் முதல் பேரா ரொம்ப திருப்திகரமான ஆரம்பமா இருக்கணும். அவ்வளவுதான்.

— இந்திரா பார்த்தசாரதி



கவலையில் இருந்தான் கண்ணாயிரம் பெருமாள்.

அந்த விவகாரத்துக்குப் பிறகு க. பெருமாள் நீண்ட நாள் ஒரு துறவியைப் போல் வாழ்ந்து, பிறகு ஜென்னியைக் காதலித்து மணந்து கொண்டான்.

எவ்வளவு மனக்கவலையிலும் அவளைப் பார்த்தால் அவனுக்கு ஒரு தெம்பு வந்து விடும் என்பதால் அவளுடைய அலுவலகத்திற்குப் போனான்.

அவன் எதிர்பார்த்ததற்கு மாறாக அவள் பதற்றமே கொள்ளவில்லை.

"நானும் கூட வருகிறேனே?" என்றாள்.

அவனுக்கு அண்ணாமலை நகர் பத்மினி ஞாபகம் வரவே, அவசரம் அவசரமாக 'வேண்டாம்' என்றான்.

"அப்படியானால் ராஜேந்திரனை அழைத்துச் செல்லுங்கள்" என்றாள்.

ராஜேந்திரனை போனில் தொடர்பு கொண்டான்.

"இன்று வெள்ளிக் கிழமை. நாம் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். முன்பே முன்ஜாமீன் எடுத்திருக்கலாம். பரவாயில்லை. நீ நேரில் வா. எதற்கும் பயப்படாதே. உன் நாவலை அரசாங்கம் தடைசெய்வதென்றால் அதற்காக உன்னை தேனாம்பேட்டை போலீஸ் ஸ்டேஷனுக்கு வரச் சொல்ல மாட்டார்கள். உனக்கு வேண்டாதவர்கள் யாரோ தான் அந்த ஸ்டேஷனில் புகார் கொடுத்திருக்க வேண்டும். எப்படியிருந்தாலும் உனக்கு நான் இருக்கிறேன். நீ எந்த இடத்திற்கு எப்போது கூப்பிட்டாலும் நான் வருகிறேன்..." என்று நீண்ட லெக்சர் கொடுத்தான் ராஜேந்திரன்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட பிறகுதான் கண்ணாயிரம் பெருமாளுக்கு தைரியமே வந்தது.

ராஜேந்திரனின் பத்திரிகை அலுவலகத்திற்குப் போவதற்குள்ளேயே அவன் தேனாம்பேட்டை போலீஸ் ஸ்டேஷனைத் தொடர்பு கொண்டு பேசியிருக்கிறான்.

விநாயகமூர்த்தி என்ற பெயரில் அங்கே எந்த இன்ஸ்பெக்டரும் கிடையாது. அவர்கள் யாரையும் வரச் சொல்லி போனும் செய்யவில்லை.

அது மட்டுமல்ல. அந்தப் பெயரில் சென்னை நகரிலேயே எந்த இன்ஸ்பெக்டரும் இல்லை! இது தவிர, கண்ணாயிரம் பெருமாளைத் தேடி எந்த போலீஸ் சி.ஐ.டியும் வரவில்லை. எல்லாவற்றையும் விசாரித்து வைத்து விட்டான் ராஜேந்திரன்.

ஆக, அது ஒரு மிரட்டல் போன்தான்.

"யாராக இருக்கும்?"

"உன் மாஜி மனைவிதான். அவள்தானே அந்த ஏரியாவில் வேலை செய்கிறாள்?"

பெருமாளுக்கும் அப்படித்தான் தோன்றியது.

"நித்யாவின் பிறந்த நாள் அன்று அவளைப் பார்க்க வந்து விடுவேனோ என்பதற்காக என் கவனத்தை திசை திருப்பும் பொருட்டு இப்படி ஒரு காரியம் செய்திருக்கலாமோ?"

"நிச்சயமாக அப்படி இருக்காது" என்று மறுத்தாள் ஜென்னி.

"இதுவரை நீங்கள் அவளைப் பற்றி என்னிடம் சொல்லியிருக்கும் விஷயங்களை வைத்துப் பார்க்கும்போது இதை நிச்சயம் அவள் செய்திருக்க மாட்டாள். அவள் உங்களுடன் நேரடியாகத்தான் மோதுவாள். இப்படி அல்ல..." என்றாள் ஜென்னி.

அப்படியானால், யார் அந்த மர்ம எதிரி?

வீட்டு முகவரியை வேறு பெற்றுக் கொண்டிருக்கிறானே என்று ஒரு பயம். அதனால் வீட்டில் சற்று அதிகப்படியான தற்காப்பு நடவடிக்கைகளை எடுக்க வேண்டியிருந்தது. அதோடு, கண்ணாயிரம் பெருமாள் ஒரு டாபர்மேன் நாய்க் குட்டியை வேறு வாங்கி வளர்க்க ஆரம்பித்தான்

— என்ற வாக்கியத்தோடு இந்தக் கதை முடிந்திருக்கும். கண்ணாயிரம் பெருமாளின் எந்தக் கதையிலுமே முடிவு என்பது முடிவாக இல்லாமல் சொதப்பலாக இருக்கும் என்ற

குற்றச்சாட்டு உண்டு.

அந்தக் கதியே, கண்ணாயிரம் பெருமாளைப் பற்றிய இந்தக் கதைக்கும் நேர்ந்திருக்கும். குமார், பெருமாளிடம் அந்த விஷயத்தைச் சொல்லியிருக்காவிட்டால்.

குமார், பெருமாளின் நீண்ட கால நண்பன். ஆனாலும் அவனுக்கு பெருமாளின் ஒன்பதாவது நாவல் பிடிக்கவில்லை. அதன் எதிர்பாராத வெற்றியும், அதனால் பெருமாளுக்குக் கிடைத்த புகழும் கூட!

அதனால் அவன் தன் நண்பர்களிடமெல்லாம் 'அது ஒரு திருட்டு நாவல்' என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

இதைக் கேள்வியுற்ற பெருமாள், குமாருக்கு ஒரு நாள் போன் செய்தான். குமார் ஒரு பெரிய நிறுவனத்தின் அதிகாரி. அவன் அப்போது அலுவலகத்தில் இல்லை. அப்போதுதான் பெருமாள் அந்தத் தவறைச் செய்தான்.

அவனுக்கிருந்த கண்மண் தெரியாத கோபத்தில், குமாரின் உதவியாளன் கந்தசாமியிடமே விஷயத்தை விளக்கி விட்டு, "இனிமேல் குமார் என் நாவலைப் பற்றி இப்படி அவதூறாகப் பேச வேண்டாம் என்று சொல்லி விடு" என்று சொல்லி விட்டான்.



ஆனால் அன்றைய தினமே பெருமாள் குமாரை எதிர் பாராத விதமாக ஒரு பார்ட்டியில் சந்திக்க நேர்ந்தது.

"என்ன பெருமாள்... நீ கந்தசாமியை மிரட்டினாயாமே? அவன் பெரிய ரௌடி. தெரியுமா உனக்கு? அவன் ஒரு இருபத்தஞ்சு ரௌடிங்களோட உன் வீட்டுக்கு வரப் போறதா சொல்லிக்கிட்டு இருந்தான். நான் தான் சமாதானப்படுத்தினேன்!"

மறுநாள் பெருமாள் தனது இரண்டாவது தவறைச் செய்தான்.

குமார் அலுவலகத்துக்கு வரும் முன்பாகவே கந்தசாமியைத் தொடர்பு கொண்டு, குமார் முந்தின தினம் சொன்ன விஷயங்களைக் கேட்டான்.

"சார்... நான் அப்படிச் சொல்லுவேனா? எனக்கும் உங்களுக்கும் என்ன சார் சண்டை? நீங்க யார்கிட்டேயும் சொல்லலேன்னா ஒரு விஷயம் சொல்றேன் சார்... அந்த தேனாம்பேட்டை போலீஸ் ஸ்டேஷன் போன் இங்கேர்ந்து பண்ணினதுதான் சார். அப்ப நானும் உங்க ஃப்ரெண்ட் சுரேஷும் இங்கதான் இருந்தோம். சஃபின்னு ஒருத்தர் வந்தார். அவர்தான் அப்படிப் பேசினார். அப்போ குமார் சாரும் கூட இருந்தார். சார்... இதை வெளிய சொன்னீங்கன்னா என் வேலை போயிடும்..."

இதைக் கேட்டதும் அதிர்ச்சியில் திரும்பவும் பெருமாளுக்கு நெஞ்சுவலி.

தனக்கும் நண்பனான சஃபியா இப்படி? குமாரும் சுரேஷும் இதற்கு உடந்தையா?

உடனே சஃபிக்கும் தனக்கும் தெரிந்தவனான ராமானுஜத்தை போனில் அழைத்து விஷயத்தைச் சொன்னான்.

"சஃபி ஒரு அற்புதமான மனிதன். ஒரு புழு பூச்சிக்குக் கூடத் தீங்கு நினைக்காதவன். அவனை இதில் நீ சம்பந்தப்படுத்துவதாக இருந்தால் நான் உன்னோடு பேசத் தயாராக இல்லை..."

ராஜேந்திரனிடம் சொன்னான். அவன் இன்னமும் 'அப்ஜெக்டிவாக'ப் பேசினான்.

"சஃபி, கந்தசாமி, சுரேஷ் யாருக்கு வேண்டுமானாலும் இதில் தொடர்பு இருக்கலாம். நிச்சயமாக குமார் இதில் ஈடுபட்டிருக்க முடியாது. வேண்டுமானால் வா. நேரிலேயே போய் விசாரித்து விடலாம்."

ஜென்னியிடம் சொன்னான்.

"கண்ணா... நீங்க எல்லாருமே 'திக்' ப்ரண்ட்ஸ். அதனால அவங்க விளையாட்டுக்குக் கூட அப்படிப் பண்ணியிருக்கலாம். நீங்க அதைப் பெரிசுபடுத்தப் போக, விளையாட்டு விபரீதமாயிடுச்சு..."

"சரி... நேர்லயே வந்து விசாரிச்சிட்டுப் போன அந்த ரெண்டு பேர்...?"

"இரண்டு பேர் என்ற தலைப்பில் பத்தாவது நாவல் எழுத ஆரம்பி, கண்ணா..."

என்று சொல்லி முத்தமிட்டாள் ஜென்னி. ●

பொருத்தமான தலைப்பை யோசித்துத் தேர்ந்தெடுத்த பிறகு கதையை எழுதத் தொடங்குவது என் வழக்கம். முன்பெல்லாம் கையெழுத்தில் எழுதும்போது, குப்புறப்படுத்த வாக்கில், காலை மேல் நோக்கி மடித்து ஆட்டியபடி எழுதுவேன். இப்போது தட்டச்சு செய்கிறேன். எழுதும்போது, இடையில் யோசிக்க நேர்ந்தால், மனைவி வந்து 'நகத்தைக் கடிக்க வேண்டாம் கெட்ட பழக்கம்' என்று சொல்லி விட்டுப் போவாள்.

— எஸ். சங்கரநாராயணன்




# பாலசந்தர் 'ஆடிட்டர்' ஆனால்...

**பூ**ஜை, தொடக்க விழா, போஸ்டர்கள், அவுட்டோர் ஷூட்டிங், நட்சத்திரப் பட்டாளம், கசமுசாக்கள், கிசுகிசுக்கள் என்று சினிமாவின் அத்தனை ட்ரேட் மார்க்குகளையும் தனதாக்கிக் கொண்டு விட்டது டீவி. லேட்டஸ்ட் – வெற்றிவிழா.

கே. பாலசந்தரின் 'சின்னத்திரை' 200 எபிசோடுகள் தாண்டிவிட்டன. மர்மதேசம், 150. போதாதா?

காமராஜர் அரங்கில் களை கட்டிவிட்டது விழா. மலைச்சாமியிலிருந்து மணிரத்னம் வரை; சுகாசினியிலிருந்து சூப்பர் ஸ்டார்வரை விண்மீன்களால் அலங்கரிக்கப்பட்ட அரங்கு.

'புத்திசாலித்தனமாக ஒரு காரியம் செய்திருந்தார்கள். 200 பேருக்கு ஷீல்டு தருவதென்றால் மகா போரடித்து விடுமல்லவா? கலைஞர்களுக்கு அவரவர் கேடயங்களை அழைப்பிதழுடனேயே வீட்டுக்கு அனுப்பிவிட்டு, விழா மேடையில் வாழ்த்துரைகளோடு சரி. வரிசை வரிசையாக வாழ்த்திக் கொண்டே இருந்தார்கள்.

இப்போதெல்லாம் ஒவ்வொரு மேடையிலும் ஒரு குட்டிக்கதை சொல்வது ரஜினியின் பாணியாகி விட்டது! இங்கேயும் ஒரு குக.

குருவியொன்று அரசனுக்குக் காசு கொடுத்து லொள்ளு பண்ணிய கதை. (விஸ்தாரமாகப் பேப்பரில் பார்த்திருப்பீர்களே?)

"எனக்கு தாய், தந்தை, குரு எல்லாமே கே.பி. சார்தான். அவர் கடைசி வரைக்கும் ஸ்ட்ராங்கா இருக்கணும்னு ஆண்டவனை வேண்டிக்கிறேன்" என்று முத்தாய்த்தார் ரஜினி.

ரசனையாகப் பேசியவர்- வேறு யார்? சோ. "கே.பி எந்த இடத்துல இருந்திருந்தாலும் சுப்ரீம் லீடராத்தான் இருப்பார். தொழிலதிபரா யிருந்தார்னா டாடா, பிர்லா மாதிரி. விஞ்ஞானத் துறைல இருந்திருந்தார்னா, அதிலும் பெரிய சயன்டிஸ்டா வந்திருப்பார். ஆடிட்டராயிருந்தார்னா... இல்ல; அது வேணாம்..." என்று ஒரு சின்ன 'பாஸ்' விட்டுப் பேசியபோது அரங்கு அதிர்ந்தது.

**வி**ழாவில் வியப்பூட்டிய அம்சம், 'மர்மதேச' நாயகர் நாகா படு அமைதியாக, இருக்கிற இடமே தெரியாமல் இருந்தது.

பலர் குறிப்பிட மறந்த ஒரு விஷயத்தை அவர் தம் பேச்சில் ரத்தினச் சுருக்கமாக வெளியிட்டது நிறைவான விஷயம். அது –

தொடரின் இமாலய வெற்றியில் கதாசிரியர் இந்திரா சௌந்தரராஜனின் பங்கு. "அமானுஷ்யமான விஷயங்கள், பேய் பிசாசெல்லாம் உண்டா இல்லையாங்கற ஆராய்ச்சில இறங்காமலேயே கதையை முடிக்கிற சாதுர்யம் அவர்கிட்டே இருக்கு" என்றார். (பாலசந்தர்- இ. சௌ காம்பினேஷனில் விரைவில் ஒரு திரைப்படம் வரலாம் என்கிற தகவலை சூசகமாக வெளியிட்டார், கே.பி.)

பாலசந்தரின் ஏற்புரையில் "ஒரு சீரியல் எடுப்பது நான் 33 படம் எடுத்ததுக்குச் சமமா இருக்கு" என்றது விழி உயர்த்தச் செய்த விஷயம். (அவர் படங்கள் இத்தனை ஜவ்வடித்த நினைவில்லையே?)

அடுத்து அவர்களின் நிறுவனம் தயாரித்து ஒளிபரப்பவிருக்கிற பல சீரியல்களின் ட்ரைலர்களை நிகழ்ச்சி முடிவில் போட்டுக் காண்பித்தார்கள்.

பிறவி எடுத்ததே மெகா தொடர்களைப் பார்க்கத்தான் என முடிவு செய்து விட்டவர்களுக்குத் திகட்டத் திகட்ட 'சீரியல்ஃபீஸ்ட்'தான், இனி!

— கே. பாலசுப்பிரமணியன்

படங்கள்: எம். சண்முகம்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

# உங்களுக்கும் இங்கிலீஷ்ல பேசணும்னு ஆசையா இருக்கா?

மடமடன்னு இங்கிலீஷ்ல பேசணும்னு ஆசையாத்தான் இருக்கு. ஆனா... ஏதாவது தப்பா பேசிடுவோமோன்னு பயமா இருக்கு. இது தானே உங்க ப்ராப்ளம்?

**Don't worry!**
**விவேகானந்தாவின் 'ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்'**ல சேர்ந்து நீங்க ஈஸியா இங்கிலீஷ் பேசக் கத்துக்கலாம்.

**இன்னும் எதுக்கு யோசிக்கிறீங்க?**
பயிற்சி விவரத்தை படிச்சுப் பார்த்து கூப்பனை கட் பண்ணி உடனே அனுப்புங்க. பாடங்கள் **V.P.P.** மூலமா உங்க வீட்டுக்கே வந்துடும்.

**அப்புறம் என்ன?**
பாடங்களைப் படிச்சு பிராக்டிஸ் பண்ணி மடமடன்னு இங்கிலீஷ்ல பேச ஆரம்பிங்க.

**ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்**
இங்கிலீஷ் வார்த்தைகளை ஓரளவு எழுத படிக்கத் தெரிந்தவர்கள் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து இலக்கணப் பிழையின்றி வாக்கியங்களை அமைக்கக் கற்றுக் கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

**இலக்கணம்** மற்றும் **உரையாடல்** பயிற்சிப் பாடங்கள் அடங்கிய இக்கோர்ஸில் சேர்ந்து பயிற்சி பெறக் கட்டணம் **ரூ. 395/-** மட்டுமே.

**அடிப்படை (Basic) & ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்**
இங்கிலீஷ் வார்த்தைகளை எழுத படிக்க இயலாதவர்கள் அடிப்படையிலிருந்து தொடங்கி ஆங்கில வார்த்தைகளை ஸ்பெல்லிங் மிஸ்டேக் இல்லாமல் எழுத படிக்க கற்றுக் கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

**அடிப்படை** மற்றும் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து பயிற்சி பெறக் கட்டணம் **ரூ. 525/-** மட்டுமே.

உரையாடற்பயிற்சி செய்து பழக பாடங்களுடன் ஆடியோ கேசட் இலவசம்.



கீழ்க்காணும் கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள். பாடங்களையும், கேசட்டையும் V.P.P. மூலம் உடனே அனுப்புகிறோம். தகவல் கிடைத்ததும் தபால் அலுவலகத்தில் பணத்தைச் செலுத்திப் பாடங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

இதோ கூப்பன்

☐ நான் விவேகானந்தாவின் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ.395/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

☐ நான் அடிப்படை (Basic) மற்றும் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ. 525/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

(தேவையான கட்டத்தில் ☑ குறியிடுங்கள்)

பெயர்:..........................................................

முகவரி:..........................................................

..........................................................

..........................................................பின்கோடு..........

**VIVEKANANDA INSTITUTE**

KLA

9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை - 600 017.

INDIA'S No. 1 ENGLISH TRAINING INSTITUTE

**விவேகானந்தாவின் நேர்முகப்பயிற்சி மையங்கள்:** சென்னையில்: தி.நகர், தாம்பரம், தண்டையார்பேட்டை, கீழ்ப்பாக்கம், போரூர்.
மதுரை, திருச்சி, கோயம்புத்தூர், கிருஷ்ணகிரி, ஈரோடு, திருப்பூர், குன்னூர், திண்டுக்கல், தஞ்சாவூர், அரக்கோணம், வேலூர் மற்றும் பாண்டிச்சேரி.
* சேலத்தில் எங்களது நேர்முகப்பயிற்சி மையம்: F 12 ஃபேர்லாண்ட்ஸ், சேலம்-16 என்ற புதிய விலாசத்தில் இயங்கி வருகிறது.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /99* Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka

நம் இருவரைப் பற்றி ஒரு அற்புதமான விஷயம் உள்ளது.

# உண்மையில் நாங்கள் ஒருவரே.



அந்த மழலைச் செல்வம் தான் உங்கள் உலகம். அவனுக்குத் தாருங்கள் ஒரு அன்பளிப்பை. அதை வாஞ்சையுடன் போற்றி மகிழ்வான் என்றென்றும்.

# சில்ட்ரன்ஸ் கிஃப்ட் குரோத் ஃபண்ட்.

உங்களின் ஒரு அங்கமே உங்கள் மழலைச் செல்வம். அவனது அங்கத்தில் நீங்களும் ஒன்றாகத் திகழுகிறீர்கள். இந்த பந்தத்தைக் கொண்டாட அவனுக்கு யூடிஐ-ன் சில்ட்ரன்ஸ் கிஃப்ட் குரோத் ஃபண்டை அன்பளிப்பாகத் தாருங்கள். 15 வயதிற்குட்பட்ட எந்த ஒரு குழந்தைக்கும் ஆண்டிற்கு 12 % உறுதிப்படுத்தப்பட்ட வருவாய். வருவாய் தானாகவே மறு முதலீடு செய்யப்படும். முதலீடு செய்யப்பட்ட ரூ.10,000 வளர்ந்து 21 ஆண்டுகளில் குறைந்தபட்சம் ரூ.1,08,000 ஆகிறது. குறைந்தபட்சம் முதலீடு ரூ 2,000. உச்ச வரம்பு கிடையாது. மேலும் விவரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள யூ டி ஐ கிளையை, முக்கிய பிரதிநிதியை அல்லது முகவரை அணுகவும். உங்கள் குழந்தையின் எதிர்காலம் உங்கள் கையில். இப்பொழுதே அதைப் பத்திரப்படுத்துங்கள்.

**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

உங்கள் வளமான நாளைக்கு

**இப்போது : திட்டம் விற்பனைக்காக மீண்டும் திறக்கப்பட்டுள்ளது**

மியூச்சுவல் ஃபண்டுகளில் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் அனைத்து முதலீடுகள் ரிஸ்க்கிற்கு உட்பட்டவை. செக்யூரிட்டி மார்க்கெட்டுகளை பாதிக்கும் காரணங்களால் திட்டங்களின் என் ஏ வி ஏறவும், இறங்கவும் செய்யலாம். கடந்த கால செயலாற்றல் எதிர்கால விளைவுகளைக் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. சி ஜி ஜி எஃப் என்பது திட்டத்தின் பெயரே தவிர திட்டத்தின் தரத்தை, எதிர்கால வாய்ப்புகளை அல்லது ஆதாயங்களை ஒரு வகையிலும் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. திட்டத்தின் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் என்று உத்தரவாதமும் வழங்கப்பட மாட்டாது. முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

**மண்டல அலுவலகம் :** 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன் : 517101. **கிளை அலுவலகம் :** கோயம்புத்தூர் போன் : 214973, சென்னை போன் : 517101, 517190 மதுரை போன் : 738186 திருச்சி போன் : 760060

SAATCHI & SAATCHI - 009/99 C TAM B